

# ஞானோபதேசம்



சுவாமி பிரம்மானந்தர்



ஸ்ரீ ராமகிருஷ்ண மடம், மயிலாப்பூர், சென்னை.

20-5 41

# ஸ்ரீமத் பிரம்மாநந்த சுவாமிகளின்

# ஞானோபதேசம்

2291






1944

ஸ்ரீ ராமகிருஷ்ண மடம், மயிலாப்பூர், சென்னை

விலை ரூ. 1-4-0

1944 1-25

20-5

# பொருளடக்கம்

HR

# முகவுரை

ஸ்ரீ ராமகிருஷ்ண பரமஹம்ஸரை ஒரு பூஞ்செண்டோடு சமனிடுவோமானால் அச்செண்டிலுள்ள ஒவ்வொரு புஷ்பத்துக்கும் சமனாவார், அவருடைய சிஷ்யர்களில் ஒவ்வொருவரும். அங்ஙனம் அருள் நிறைந்த சிஷ்யர் கூட்டத்துள்ளும் ஸ்ரீமத் பிரம்மானந்த சுவாமிகளே தனிப்பெருமை யொன்று வாய்க்கப் பெற்றவர். பரமஹம்ஸ தேவரது ஞானக்குழந்தையாக அவர் விளங்கினார். தன்மையிலும் வாழ்க்கை முறையிலும் தமது குருநாதரை அவர் ஒருவரே பெரிதும் ஒத்திருந்தார். ஆதலாலே தான் ஸ்ரீமத் பிரம்மானந்த சுவாமிகளைக் காண்பதும் அவருடைய கருணைக்குப் பாத்திரமாவதும் ஸ்ரீ ராமகிருஷ்ணரது தரிசனத்தைப் பெறுதற்கு ஒப்பானவை யென்று பெரியார் பலர் கருதிவந்தனர்.

ஸ்ரீ ராமகிருஷ்ண மடத்துக்கு முதல் தலைவராயிருக்கும்படி ஸ்ரீமத் விவேகானந்த சுவாமிகளால் அவர் வேண்டிக் கொள்ளப்பட்டார். அதன்படி ஸ்ரீமத் பிரம்மானந்த சுவாமிகள் தமது ஆயுட்காலமுழுதும் இந்த மடத்தின் ஸ்தாபனங்களுக்கெல்லாம் உயர்தலைவராய்த் திகழ்ந்து வந்தார். ஆயினும் அவர் அமைதியுடைய ஒரு தொண்டராகத் தமது கடனாற்றி வந்தாரே யொழிய அதிகாரத்தைச் செலுத்துகிற முறையில் ஒரு பொழுதும் அவர் நடந்துகொள்ளவில்லை.

ஆனந்த சொரூபியாகப் பெரிதும் மௌன முற்றிருப்பது அவரது வழக்கம்; அல்லது மாசு படியாத மனத்தையுடைய சின்னஞ் சிறுவர்போன்று சில வேளைகளில் உலக இயல்புகளைப் பற்றிப் பேசிப் பூரித்திருப்பார். ஞான வாழ்க்கை சம்பந்தமான

பேச்சு ஏதும் சுலபமாக அவர் வாயினின்று வெளியில் வராது. அத்தகைய கேள்விகளை யாராவது கேட்டால் தமக்கு ஒன்றும் தெரியாதென்றும், சாஸ்திரங்களை நன்கு கற்றறிந்திருந்த தமது குரு சகோதரர் யாராவது ஒருவரிடம் போய்க் கேட்கும்படியும் அவர் சொல்லிவிடுவார். அதன் பின்னரும் தருணம் பார்த்து உபாயமாக விடுத்த வினாக்களுக்கு விடைகளாக வந்தவைகளே சிஷ்யர்களால் குறித்து வைக்கப்பட்டன. அவர் எழுதிய கடிதங்களில் சில ஆத்ம சாதனத்துக்குரிய உயர்ந்த கருத்துக்கள் அடங்கப்பெற்றிருக்கின்றன. ஆங்கிலத்தினின்றும் வங்காளத்தினின்றும் அவைகள் மொழிபெயர்க்கப்பட்டு முதலில் ஸ்ரீ ராமகிருஷ்ண விஜயத்தில் வெளிவந்தன. இப்பொழுது அவையாவும் இப் புஸ்தக ரூபமாகத் தமிழ் உலகுக்கு வருகின்றன. பாரமார்த்திகப் பெருவாழ்க்கையில் தீவிரமாக ஈடுபட முயலுபவர்களுக்கு இந்நூலில் அடங்கியுள்ள ஒவ்வொரு கூற்றும் பொன்றுணை புரிவது திண்ணம்.

சென்னை,
நவராத்திரி 1941.

ஸ்ரீ ராமகிருஷ்ண மடத்தார்.



SRIMAT SWAMI BRAHMANANDAJI

# ஸ்ரீமத் பிரம்மானந்த சுவாமிகளின் ஞானோபதேசம்



## 1

## தியானமும் அனுபூதியும்

—:—

[1921-ம் ஆண்டில் காசியில் நடந்த சம்பாஷணை]

ப:—ஸ்வாமிஜி, நான் ஜபமும் தியானமும் செய்து வருகிறேன். ஆயினும், இவற்றில் இன்னும் எனக்கு ஒருவித ருசியும் உண்டாகவில்லை. ஏதோ கஷ்டப்பட்டுக்கொண்டு வருகிறேன். இதற்கு என்ன செய்யலாம்?

சுவாமிகள்:—ஆரம்பத்திலேயே அந்த ருசி உண்டாவது சாத்தியமா? இல்லை. அதை அடைதற் பொருட்டு நீ தீவிரமாகப் பாடுபடவேண்டும். அதனை அடைவதிலேயே உன் சக்தியை எல்லாம் நீ ஒருமுகப்படுத்திச் செலுத்தவேண்டும்; மற்ற விஷயங்களில் ஒரு நிமிஷங்கூட மனத்தைச் செலுத்தாதே. மற்ற யாவற்றையும் விட்டு அது ஒன்றிலேயே உன் முழுமனத்தையும் செலுத்து. முன்னேறிச் செல், எப்போதும் முன்னேக்கியே நட! இப்பொழுதிருக்கும் உன் மன நிலைமையைக் குறித்துச் சிறிதும் திருப்தியடையாதே. கொழுந்துவிட்டெரியும் மன அதிருப்தியை உன்னுள்ளத்தில் உண்டாக்கிக்கொள். "நான் என்ன அபிவிருத்தியடைந்து விட்டேன்? ஒரு சிறிதும் அடையவில்லையே!" என்று அடிக்கடி உனக்குள் சொல்லிக்கொள். "தாயே, மற்றுமொரு நாள் கழிந்துவிட்டதே; இன்னும் எனக்கு உன் தரிசனம் கிடைக்கவில்லையே?" என்று ஸ்ரீராமகிருஷ்ணர் அம்பாளிடம் முறையிடுவது வழக்கம்.

ஒவ்வொரு நாளும் இரவில் படுக்குமுன், அன்றைக்கு எவ்வளவு நேரம் நற்காரியங்களில் செலவழித்தாய், எவ்வளவு நேரம் உபயோகமற்ற காரியங்களில் கழித்தாய், எவ்வளவு

நேரம் தியானத்தில் உபயோகித்தாய், எவ்வளவு நேரம் சோம்பலாக வீணாக்கினாய், என்று சற்று நேரம் ஆலோசித்துப் பார். தவத்தினாலும் பிரம்மசரியத்தினாலும் உன் மனத்தைப் பலப்படுத்திக்கொள்.

பணக்காரர்கள் வீட்டில் தர்வான் (காவல்காரன்) ஒருவனை வாயிலில் நிறுத்தியிருப்பார்கள். திருடர்களோ, ஆடு மாடு முதலியனவோ உள்ளே நுழையாமல் பார்த்துக்கொள்வது அவனுடைய கடமை. மனந்தான் மனிதனுடைய தர்வான். மனம் எவ்வளவுக்கெவ்வளவு அதிக பலமுடையதாகிறதோ அவ்வளவுக்கவ்வளவு நலம். மனமானது அடங்காத ஒரு முரட்டுக் குதிரைக்குச் சமானம் என்றும் சொல்வதுண்டு. அத்தகைய குதிரை, சாதாரணமாக, தன்மேல் ஏறிச்செல்பவனைத் தப்பான வழியிலேயே கொண்டு செல்கிறது. யார் கடிவாளத்தை இழுத்துப்பிடித்துக் குதிரையை அடக்க வல்லவனோ, அவன்தான் சரியான மார்க்கத்தில் செல்லமுடியும். பாடுபடு; மேலும் மேலும் பிரயத்தனம் செய். நீ என்ன செய்துகொண்டிருக்கிறாய்? வெறும் காஷாயம் தரித்துக்கொண்டிருப்பதால் மட்டும், அல்லது வீட்டையும் வாசலையும் விட்டு வந்துவிடுவதால் மட்டுமே எல்லாம் சித்தியாய்விட்டதா? நீ என்ன ஸாதித்திருக்கிறாய்? காலமோ பறந்துகொண்டிருக்கிறது. ஒரு க்ஷண நேரத்தையும் வீணாக்காதே. அதிகமானால், இன்னும் மூன்று அல்லது நான்கு வருஷங்கள்தான் நீ கஷ்டப்பட்டு உழைக்க முடியும். அதன் பிறகு மனமும் உடலும் பலமிழந்து சக்தியற்றவையாய் விடும். அப்போது உன்னால் யாதொன்றும் செய்யமுடியாது. சிரமமின்றி எதையும் அடைவது சாத்தியமா?

“முதலில் சிரத்தையும் பக்தியும் தீவிர அருள்தாகமும் வரட்டும்; பிறகு ஞானசாதனைகளை அப்பியசிக்கலாம்,” என்று நீ நினைக்கிறாய். அது சாத்தியமா? அருணோதயம் ஆவதற்கு முன்னால் நாம் பகற்பொழுதைக் காணமுடியுமா? கடவுள் வரும் பொழுது, அவருடைய பரிவாரங்களைப் போன்று, பிரேமை, பக்தி, சிரத்தை ஆகிய எல்லாம் கூடவே வருகின்றன.

தபஸ் இல்லாமல் எதுவும் சாத்தியமாகுமா? பிரம்மா முதன்முதல், “தபஸ், தபஸ், தபஸ்” என்ற மொழிகளையே

கேட்டார். அவதார புருஷர்கள் கூட எவ்வளவு கடுமையான தபஸ் செய்ய வேண்டியிருந்தது என்பதை நீ பார்க்கவில்லையா? உழைப்பில்லாமல் எதையேனும் யாராவது பெற்றிருக்கின்றார்களா? புத்தர், சங்கராசாரியர் முதலிய மகான்களெல்லாம், தங்கள் வாழ்நாளில், எவ்வளவு கடுமையான தவம் செய்திருக்கின்றனர்! அவர்கள் எத்தகைய தீவிர வைராக்கியமுடையவர்களாய் இருந்தனர்! எவ்வளவு கடினமான சாதனைகளையெல்லாம் அவர்கள் அனுஷ்டித்தனர்!

தெளிவு ஆரம்பத்திலேயே உண்டாவதில்லை. முதலில் துப்புரவு, அதாவது அனுபூதி; பிறகுதான் தெளிவு உண்டாகிறது. ஸாதகன் முதலில், குருவாக்கியத்தில் அல்லது யாராவது ஒரு மகானுடைய உபதேசங்களில் உறுதியான நம்பிக்கை—அது குருட்டு நம்பிக்கையாயிருந்தாலும் சரி—வைக்கவேண்டும். அப்பொழுதுதான் ஒருவன் தனது லக்ஷியத்தை நோக்கி முன்னேற முடியும்.

ஸ்ரீ ராமகிருஷ்ணர் சொன்ன முத்துச் சிப்பியின் கதையை நீ அறியாயா? சுவாதி மழையின் (சுவாதி நக்ஷத்திரம் உச்சத்திலிருக்கும்போது பெய்யும் மழை) ஒரு சிறு நீர்த்துளியைப் பெறுதற் பொருட்டு, முத்துச் சிப்பியானது கடல் நீரின் மேற்பரப்பிலே வந்து தனது ஓட்டை நன்றாகத் திறந்துகொண்டு அங்குமிங்கும் திரிகின்றது. ஒரு மழைத் துளியானது தன்னுள் வீழ்ந்த மாத்திரத்திலே, அது ஆழ்ந்து சென்று கடலின் அடிப்பாகத்தை அடைகின்றது. அடைந்த பின் அங்கே அத்துளியை அழகியதொரு முத்தாகச் செய்கின்றது. முத்துச் சிப்பியைப் போல நீயும் முற்பட்டு முயன்று பின்னர்த் தியான ஸாகரத்தில் ஆழ்ந்துவிட வேண்டும்.

உன்னிடம் சுயநம்பிக்கை யில்லை. ஞானவாழ்க்கையில் வெற்றி பெறுதற்குத் தன்முயற்சியானது இன்றியமையாததாகும். குறைந்தது நான்கு வருஷ காலம் ஏதோ சிறிது முயற்சி செய். அதன் பிறகு, குறிப்பிடத்தக்க அபிவிருத்தி எதுவும் நீ அடையாதிருக்கும் பக்ஷத்தில், என்னைக் குறை கூறலாம்.

ரஜோகுணம், தமோகுணம் ஆகிய இரண்டு எல்லைகளையும் நீ கடந்தாலன்றி ஜபமும் தியானமும் செய்யமுடியாது. அதன்

பின்னர் ஸத்வ குணத்தையும் தாண்டிச் சென்று மேலான ஞானநிலையை அடையவேண்டும். அந்நிலையை அடைந்துவிட்டால் மனமானது கீழ்நிலைக்கு வராது.

மனித ஜன்மம் எடுப்பது அரிதினும் அரிது! மேலும் இந்த மனித ஜன்மத்தில்தான் கடவுள் தரிசனத்தை அடைய முடியும். ஆகையால், இந்த ஜன்மத்திலேயே தீவிரமாகப் பாடுபட்டு, திரும்பிக் கீழ்நிலைக்கு வருதல் இல்லாத அந்த மேலான ஞானநிலையை அடை.

மனத்தைப் படிப்படியாக உயர்த்தி, ஸ்தூலத்திலிருந்து ஸூக்ஷ்மத்துக்கும், அதன் பின்னர் காரண நிலைக்கும், பிறகு அதிலும் மேலான மஹாகாரண நிலைக்கும், கடைசியாகச் சமாதி நிலைக்கும் கொண்டுபோக வேண்டும். ஈசுவரனிடத்தில் நீ முற்றிலும் சரணாகதி அடை. அவனே யாவுமாய் இருப்பவன். அவனன்றி வேறில்லை. सर्वं खल्विदं ब्रह्म 'ஸர்வம் கல்விதம் பிரம்மம்.' உண்மையில் இவை யாவும் பிரம்மமே. எல்லாம் அவனுடைய பொருளே. லாப நஷ்டம் பார்க்கும் புத்தியை ஒருநாளும் கொள்ளாதே. சரணாகதி யென்பது ஒரே நாளில் கைகூடுவதா? அது கைகூடும்போது எல்லாம் கைகூடிவிட்டது. அதற்காக ஒருவன் தீவிரமாகப் பாடுபடவேண்டும்.

வாழ்வு நித்தியமானது. ஆனால், மனிதனுடைய ஆயுட்காலமோ நூறாண்டுக்கு மேலில்லை. நித்திய வாழ்வையும், அதனோடு நித்தியானந்தத்தையும் நீ பெற விரும்புவாயானால், இந்த நூறு வருஷத்திய அற்ப சுகபோகங்களை நீ துறக்கவேண்டும்.

---

## 2

## ஞான சாதனைகள்

[காசியில் நடந்த சம்பாஷணை]

சுவாமிகள் :—உன்னுடைய ஞான சாதனைகள் ஒழுங்காக நடந்து வருகின்றனவா?

ஸா:—இல்லை, ஸ்வாமிஜி. நான் எவ்வளவுதான் முயன்ற போதிலும் ஞானோதயத்தைக் காணவில்லை; ஆகையால் நான் சிறிதும் மனச் சாந்தியை அடையவில்லை. தீய வாசனைகளுடன் நாங்கள் பிறந்தவர்கள் போலும்; இவை எங்கள் ஆத்ம முன்னேற்றத்துக்குத் தடையாக நிற்கின்றனவென்று தோன்றுகிறது.

சுவாமிகள்:—குழந்தாய், நீ அப்படி எண்ணாதே. நடுராத்திரியில் எழுந்து ஜபம் செய். அந்நேரத்தில் செய்ய முடியாவிட்டால், அதிகாலையில் ஜபம் செய். புரஸ்சரணம்* பண்ணு.

உனது அரிய காலத்தை இனிச் சிறிதும் வீணாக்காதே. தியானத்திலும் பிரார்த்தனையிலும் மூழ்கிவிடு. கொஞ்ச காலம் நீ சாதனைகள் செய்துவந்தால், ஆத்மீய உண்மைகள் யாவும் தாமாகவே வெளியாகும்.

சாதகன் ஒருவன் இராக் காலங்களில் அதிகமான ஆகாரத்தை உட்கொள்ளக் கூடாது. நீ வழக்கமாய்ச் சாப்பிடும் ஆகாரத்தில் முக்காற் பங்கை முதலில் உட்கொள். அதன் பிறகு அதனைப் பாதியளவாகக் குறைத்துவிடு. ஆரம்பத்தில் உடம்பிற் சிறிது பலஹீனம் தோன்றலாம். ஆயினும் கொஞ்ச நாளில் சரியாகி உடம்பு அதிக சுறுசுறுப்பாகவும் மிகவும் நல்ல நிலைமையிலும் இருக்கும்.

(பின்னர் சுவாமிகள், தாம் தமது சகோதர சிஷ்யர்களுடன் இருந்து சாதனைகள் புரிந்து வந்த அந்நாட்களைக் குறித்து, "நாங்கள் இராப் பகல் ஒரு நாள் முழுதும் ஒரு வேளைதான் உணவருந்துவது வழக்கம்," என்றுரைத்தனர்.)

சுவாமிகள்:—சாதகன் ஒருவன் யாரேனும் ஒரு மகாத்மாவினிடமிருந்து முதலில் ஞான மார்க்கத்தைக் கற்றுக்கொள்ள வேண்டும்; பிறகு அதனை ஒழுங்காகப் பின்பற்ற வேண்டும்.

---

*புரஸ்சரணம் என்பது ஈசுவர நாமத்தை முறையாக ஒரு குறிப்பிட்ட எண்ணிக்கை வரையில் ஜபித்துப் பின் ஹோமம் முதலிய கிரியைகளைச் செய்தல். ஹோமம் முதலிய கிரியைகளுக்குப் பதிலாக ஜபம் செய்யும் எண்ணிக்கையை அதிகப்படுத்திக் கொள்ளவும் இடமுண்டு.

ஏதோ அரைகுறையாக அக்காரியத்தைச் செய்வானானால் அவன் வெற்றி பெறமாட்டான். மேலும், அவன் இடையே அதனை விட்டுவிடுவானாகில், கோரிய பலனை அடைய, திரும்பவும் அவன் இரட்டிப்பு மடங்கு சிரமப்பட வேண்டி வரும். ஆனால், உழைப்பு ஒரு போதும் வீண் போவதில்லை. ஞான வாழ்க்கையைக் கைக் கொள்பவனிடமிருந்து, காமம், குரோதம், லோபம் முதலியன கொஞ்சம் கொஞ்சமாக விலகிவிடுகின்றன.

உன்னுடைய மனமானது இப்போது ரஜோகுண தமோ குணங்களால் மூடப்பட்டிருக்கிறது. அதனைக் கொஞ்சங் கொஞ்சமாகப் பரிசுத்தப் படுத்தியும் ஸூக்ஷ்ம மாக்கியும் ஸத்வ நிலைக்கு உயர்த்தவேண்டும். அப்போது உனக்குச் சமய சாதனைகளில் இன்பமும் உற்சாகமும் ஏற்பட்டு, மேலும் மேலும் அதிக மான காலத்தை அவற்றிற் கழிக்க ஆர்வம் உண்டாகும். பின்னர், மனமானது முற்றிலும் பரிசுத்தமடையுங் காலத்து, நீ சுபாவ மாகவே ஞான சாதனையில் ஈடுபடுவாய். மனம் இப்பொழுது ஸ்தூல நிலையில் இருக்கிறது. அதனாலேயே அது ஸ்தூலப் பொருள்களினிடத்தே நாட்டமுடையதா யிருக்கிறது. ஆனால், அது விழித்தெழும்போது தானாகவே ஆத்மீய நாட்டம் உடையதாகின்றது. மனமானது ஸூக்ஷ்ம நிலையை அடைய அடைய அதன் சக்தியும் அதிகரிக்கின்றது ; ஸாதகன் கடவுளைப் பற்றிய உண்மைகளை அதிவிரைவில் அறிய வல்லவனாகின்றான்.

நீ தியானத்தில் அமரும்பொழுது முதலில் ஓர் ஆனந்தமய மான திவ்விய வடிவத்தை மனத்திற் கொள். இது உன் மனத்தி னிடத்தும் நாடிகளி னிடத்தும் ஒருவகைக் குளிர்ந்த தன் மையை உண்டாக்கும். இல்லாவிட்டால் தியானமானது இன்ப மற்றதாகவும் கஷ்ட முடையதாகவும் ஆய்விடும். உன்னுடைய இஷ்ட தெய்வத்தின் வடிவமானது சிரித்த முகத்துடனும் ஆனந்த ஸ்வரூபத்துடனும் இருப்பதாக எண்ணிக்கொள்.

உன் காலத்தை வீண் போக்காதே. இப்போது புலன்க ளெல்லாம் வலிமை உடையனவாக இருக்கின்றன ; அவற்றை அடக்கவேண்டும். இது மிகவும் கடினமான காரியம் என்பதில் சந்தேகம் இல்லை. ஆயினும் விடாமல் ஏழு அல்லது எட்டு வருஷம் சாதனைசெய் ; அதன்பிறகு உன் சாதனைகளின் பயனை

அதாவது மேலான சாந்தியையும் ஆனந்தத்தையும் நீ அனுப விப்பாய். அநேக பெண்மணிகளும் ஞான ஒளியைப் பெற் றிருக்கின்றார்கள். அப்படியிருக்க, நீயும் அதன் பொருட்டுப் பாடுபட வேண்டாமா? ஆனால், ஆண் மக்களைவிடப் பெண் மக் கள் அதிக சிரத்தையுடையவர்களாய் இருக்கின்றார்கள். அத னால்தான் அவர்கள் மற்றவர்களை விட அதிசீக்கிரத்தில் வெற்றி அடைகின்றார்கள்.

என் வார்த்தையில் நம்பிக்கை வை. கடவுள் எப்போதும் உன்னோடிருக்கின்றார். நீ சிறிதளவு அப்பியாசம் செய்தால் அவர் உனக்குக் கைகொடுத்து உதவி செய்வார். துன்ப துய ரங்கள் எல்லாவற்றினின்றும் நம்மைக் காப்பாற்றுபவர் அவரே. ஆ! அவரது கருணைக்கு ஓர் எல்லையு முண்டா! அதை யான் உனக்கு எவ்வாறு எடுத்துச் சொல்ல முடியும்?

நீ இதுகாறும் ஆத்மீய விஷயங்களைப் பற்றிக் காதால் மாத் திரம் கேட்டாய். இனி அவற்றை உன்னுள்ளே உணர். நீ போதுமான அளவு கற்றும் ஆராய்ந்தும் இருக்கின்றாய். இப் போது கொஞ்சம் ஞான சாதனைகளை அப்பியாசம் செய். உனக்கு அதிகமாகப் பிடித்தது எதுவோ அந்தக் கடவுள் வடி வத்தை நீ எடுத்துக்கொள். உனக்கு விருப்பமான சாதன மார்க்கத்தை நீ கடைப்பிடி. அதன் மூலமாக நீ கடவுளைத் தரி சிக்கும்போது, அவனுடைய மற்ற வடிவங்களையும் நீ தரிசித்து ஆனந்தத்தை அனுபவிப்பாய்; ஏனைய மார்க்கங்களின் மூலமாக வும் அவனை நீ அடைந்து இன்புறுவாய்.

ஒருவன் ஜபம் செய்யும்போது, கூடவே தனது இஷ்ட தெய்வத்தைத் தியானிக்கவும் வேண்டும். இல்லையேல் ஜபத் தினால் பயன் உண்டாவதில்லை. முழு ரூபத்தையும் தியானிக்க முடியாவிட்டால், ஒரு பாகத்தை மாத்திரம் தியானி. முதலில் தெய்வத்தின் திருவடித் தாமரைகளில் உனது தியானத்தைத் தொடங்கு. ஆரம்பத்தில் வெற்றி பெறாவிடினும், விடாது அதனைத் தொடர்ந்து செய். ஜயமடையும் வரையில் நீ எதற் காக அதை நிறுத்தவேண்டும்? நீ ஜயமடைந்தே தீரவேண்டும். அப்பியாசத்தின் மூலம் எல்லாம் எளிதாய் விடும்.

தியானம் என்பது அவ்வளவு எளிதான காரியமா? சமாதிக்கே அது அடுத்தபடி என்பதை ஞாபகத்தில் வை. எல்லாவற்றையும் ஈசுவரனிடம் ஒப்படைக்க முயல். அவனிடம் உன்னை முற்றிலும் அர்ப்பணம் செய்துவிடு. அதன் பிறகு உன்னுடைய சாதனையின் மூலமாக, சரணாகதி முதலான யாவும் உன்னுள்ளிருந்தே வெளித்தோன்றும்.

---

# 3

## பூஜையும் தியானமும்

[காசியில் நடந்த சம்பாஷணை]

க :—ஸ்வாமிஜி! பூஜை, தியானம், புலனடக்கம், சாஸ்திர ஆராய்ச்சி ஆகியவற்றைப் பற்றித் தாங்கள் எடுத்துச் சொன்னீர்களே; பூஜை என்பது என்ன?

சுவாமிகள் :—பூஜை என்பதற்கு பாஹ்ய (வெளியில் செய்யும்) பூஜை என்றும், மானஸ (மனத்தினால் செய்யும்) பூஜை என்றும் இரண்டு பொருள் உண்டு. பாஹ்ய பூஜைக்குப் புஷ்பம் சந்தனம் தூபம் தீபம் முதலான பூஜா திரவியங்கள் அவசியம். இவை எல்லாக் காலத்திலும் கிடைப்பது அரிது. ஆகையால் மானஸ பூஜை உனக்கு அதிக செளகரியமானதாகும். பாஹ்ய பூஜையில் ஆராதனை செய்வதுபோல, இஷ்ட தெய்வத்துக்கு மனத்தினாலே பாத்யம் (பாதங்களை அலம்பும் தண்ணீர்) அளித்து, சந்தன புஷ்பம் சாத்தி, ஜபமும் தியானமும் மனத்தினாலேயே செய்யவேண்டும். மனத்தினால் செய்யும் ஜபத்தில், உதடுகளை அசைக்காமல் ஈசுவர நாமமாகிய மந்திரத்தை ஜபிக்க வேண்டும். சாதாரணமாகச் செய்யும் ஜபத்தில், ஒருவன் மந்திரத்தை உச்சரிக்கின்றானதலால், அப்பொழுது உதடுகள் அசையும்.

தியானத்தின்போது உனது இஷ்ட தெய்வத்தின் வடிவத்தை ஜோதி வடிவமாகத் தியானிக்கவேண்டும். அதனுடைய ஜோதியினாலேயே எல்லாப் பொருள்களும் ஒளிபெற்றுத் திகழ்

வதாகப் பாவித்துக் கொள். இந்த ஜோதியானது சின்மயமாயும் அறிவு நிறைந்ததாயும் பாவிக்கப்பட வேண்டும். இத்தகைய தியானமானது பின்னால் பரம் பொருளின் நிர்க்குண நிராகாரத் தியானமாக மாறும். ஆரம்பத்தில் சாதகன் மனோபாவனையை உதவியாகக் கொள்ள வேண்டும்; பின்னால், ஆத்ம உணர்ச்சியின் அபிவிருத்தியை அவன் அடையும் காலத்தில், கடவுள் ஸாந்நித்தியத்தை அவன் தானே உணர்வான். பிறகு, உயர்ந்த ஞானக் காட்சியை அவன் பெறும்போது, உண்மைப் பொருளை நேருக்கு நேராகக் கண்டறிவான். அப்போது முற்றிலும் வேறான ஒரு நிலைக்கு அவன் உயர்த்தப்படுகிறான்; அந்த நிலையில், இந்த ஜட உலகமானது வெறும் நிழலைப் போலும், ஆகையினால் அநித்தியமான தோன்றாகவும் காணப்படும். அப்போது மனமானது சவிகற்ப சமாதியில் (துரிய நிலையில் தற்போதத்தோடு கூடிய காட்சியில்) ஒடுங்கி விடுகிறது. அதன் பிறகு நிர்விகற்ப சமாதி (துரிய நிலையில் தற்போதமும் ஒழிந்தது) கூடுகிறது. அப்போதுதான் மனம் மொழியைக் கடந்த உண்மைப் பொருளின் அனுபவம் உண்டாகிறது. இந்த நிலையில் பார்ப்பதற்கோ கேட்பதற்கோ ஒன்றும் இல்லை. யாவும் அகண்டப் பரம் பொருளிலே லயமடைந்து விடுகின்றன.

இந்த நிலையை ஒருவன் அடைந்துவிட்டால், அநித்தியமாகத் தோன்றும் இந்தத் தோற்ற உலகுக்கு, மிகவும் கஷ்டத்துடன்தான், அவன் தன் மனத்தைக் கொண்டுவர முடியும். இது 'துவைதாத்வைத விவர்ஜிதம்' அதாவது, துவைதம் அத்வைதம் ஆகிய இரண்டையும் கடந்த (ஒன்றற்ற இரண்டற்ற) நிலை. இந்த நிலையை அடைந்த சிலர், இடைவிடாத ஞான அனுபவத்துக்குச் சரீரமானது ஓர் இடைஞ்சலாய் இருப்பதாகக் கொண்டு சமாதியில் அதனை ஒழித்து விடுகின்றனர். அஃது ஓர் உபயோகமில்லாத மண்பாண்டத்தை உடைத்து விடுவதைப் போன்றது.

உயர்ந்த ஆத்மானுபவ நிலையின் தன்மையை விளக்குவதற்கு ஸ்ரீராமகிருஷ்ணர் ஓர் உதாரணத்தை எடுத்துச் சொல்வது வழக்கம். தண்ணீர் நிறைந்த ஒன்பது பாண்டங்கள் இங்கே இருப்பதாகவும், அவை ஒவ்வொன்றிலும் சூரியன் பிரதி

பிம்பிப்பதாகவும் எண்ணிக்கொள். ஒவ்வொன்றாக அப்பாண்டங்களை உடைத்துக் கொண்டே போ; ஒரே ஒரு பாண்டம் மட்டும் பாக்கி நிற்கிறது; அப்பொழுது அதில் மாத்திரம் சூரியனுடைய பிரதிபிம்பம் தோன்றுகிறது. முடிவாக இந்தக் கடைசிப் பாண்டமும் உடைக்கப்பட்டு விடுகிறது. பிறகு எது உளதோ, அதுதான் உள்ளது. அதைக் கண்ணால் பார்க்கவும் முடியாது, வாயால் உரைக்கவும் இயலாது.

க:—ஸ்வாமிஜி, சிலர் தங்கள் இஷ்ட தெய்வத்தை எங்கும் வியாபித்திருக்கும் பரமாத்மாவாகக் கருதுகின்றார்கள். இதுவும் ஒரு வகைத் தியானமேயன்றோ!

சுவாமிகள்:—ஆம், உண்மையே. ஆத்மீய வாழ்க்கையில் கொஞ்சம் முன்னேற்றம் அடைந்த பிறகுதான் ஒவ்வொருவரும் இந்தத் தியானத்தைப் பழக வேண்டும்; ஆரம்பத்தில் அவ்விதம் செய்தல் ஆகாது. இஷ்ட தெய்வம் நீக்கமற நிறைந்திருப்பதை எவ்விடத்தும் காணவேண்டும். ஸகுண ஸாகார வடிவமாய் (குணத்தோடும் உருவத்தோடும்) உள்ள ஈசுவரனே நிர்க்குண நிராகார (குணம் உரு இல்லாத) பொருளாய் இருக்கிறான். ஒவ்வொரு ஜீவனுள்ளும் அவன் உறைகின்றான். நீரிலும், நிலத்திலும், மலையிலும், பள்ளத்தாக்கிலும், வானத்திலும், நக்ஷத்திரங்களிலும், ஆக எல்லாப் பொருளிலும் அவன் நிறைந்து இருக்கிறான்.

க:—ஸ்வாமிஜி, ஆத்ம ஞானத்தை அடைவதற்கு குரு சேவை மிகவும் அவசியமானதென்று சாஸ்திரங்கள் கூறுகின்றனவே; இது எவ்வளவு தூரம் உண்மை?

சுவாமிகள்:—ஆரம்ப தசையில் அது அவசியமானதே. ஆனால், பிற்பாடு ஒருவனுடைய மனமே குருவினுடைய காரியத்தைச் செய்கின்றது. (உள்ளத்தினுள்ளே உறைகின்ற குருவுக்குக் குருவான இறைவனுடைய உதவியானது பரிசுத்தமடைந்த மனத்தின் மூலம் ஏற்படுகின்றது.)

குருவைச் சாதாரண மனிதனாகப் பாவிக்கக் கூடாது. குருவினுடைய சரீரம் இறைவன் உறையும் கோயிலாகும். இந்தக் கருத்துடன் குருவுக்குச் சேவை செய்வதால் அவரிடம் ஒருவ

னுக்குப் பிரேமையும் பக்தியும் உண்டாகும். அவற்றைப் பிறகு அவன் கடவுளிடம் செலுத்தலாம். தங்கள் குருவை உச்சியிலுள்ள ஆயிரம் இதழ்த் தாமரையாகிய சகஸ்ராரத்தில் தியானம் செய்யும் சாதகர்கள் இருக்கின்றார்கள்; பிறகு தங்கள் இஷ்ட தெய்வத்தின் வடிவத்திலே குருவின் வடிவத்தை லயப்படுத்துகிறார்கள். "ஞானக் காட்சியைப் பெறும்பொழுது, சிஷ்யனுடைய முன்னிலையில் குரு பிரத்யக்ஷமாகின்றார்; பிறகு அவர், அவனுக்கு இஷ்ட தெய்வத்தைச் சுட்டிக் காட்டி, 'இதோ பார் உன்னுடைய இஷ்டம்' என்று கூறி, தாம் அதிலே ஒன்றாய் ஒடுங்கி விடுகின்றார்," என ஸ்ரீ ராமகிருஷ்ணர் தெளிவாகச் சொல்வது வழக்கம். உண்மையில் இஷ்ட தெய்வத்தினின்று குரு வேறானவரல்லர். ஆத்மீய வாழ்க்கையில் அநேகவித சாதனைகள் உள்ளன. அவை எல்லாவற்றையும் பற்றி உனக்கு எவ்விதம் என்னால் எடுத்துச் சொல்ல முடியும்?

ஞான மார்க்கத்தைப் பேரூக்கத்துடன் கடைப்பிடி. ஆத்ம சாதனைகளினாலே மனமானது பரிசுத்தமடையும்போது, ஞான உலகில் உள்ள எல்லா உண்மைகளையும் நீ அறிவாய். அவற்றிற்கு ஒரு முடிவு இல்லை என்பதை நீ ஞாபகத்தில் வை; அவை எண்ணிறந்தன. ஞான சாதகன் முற்றிலும் அவற்றில் மூழ்கியிருக்கின்றான்.

பி:—சாதகன் ஒருவன் ஆனந்தத்தில் ஒரு சிறிது அடையப் பெற்றானானால், அவன் தனது ஞான மார்க்கத்தில் முன்னேறுவதற்கு அதிக ஊக்கங்கொண்டவன் ஆவான்; இது உண்மை யல்லவா?

சுவாமிகள்:—ஆம். ஆனால், உயர்ந்த ஞான நிலையில், ஆனந்தமோ துக்கமோ, இன்பமோ துன்பமோ, உள்ளதோ இல்லதோ, யாதும் இல்லை. நீ கூறும் ஆனந்தமானது சாதனை செய்யுங் காலத்தில் ஏற்படக் கூடிய ஓர் உதவியே யன்றி வேறில்லை. கப்பல் ஒன்று தான் போய்ச் சேரவேண்டிய இடத்தை அடையாதிருக்கும் வரையில், அதற்குச் சாதகமாகிய காற்று அவசியமாய் இருக்கிறது. ஆனால் அது தன் இடத்துக்கு ஒரு தரம் போய்ச் சேர்ந்துவிட்டால், பின்னர் அதற்குச் சாதகமாகவோ

பாதகமாகவோ இருக்கக்கூடிய காற்று அவசியமில்லை. ஆனந்த மானது, சாதகன் முன்னேறிச் செல்லும் மார்க்கத்தில், சாதக மான காற்றைப் போல அவனுக்கு உதவி செய்கின்றது.

அறிவு, அறிவோன், அறியப்படும் பொருள்—இவை மூன் றும் பரம்பொருளில் ஒடுங்கிவிடுகின்றன.—இவ்வளவு தான் சாஸ்திரங்கள் எடுத்துக் கூற முடிந்தது. அதன் பிறகு என்ன நிகழ்கின்றதென்பதை எடுத்துச் சொல்லும் வல்லமை யாருக் கும் இல்லை. ஞான சாதனையினாலே ஒருவன் தானே இதனை அறியவேண்டும். தேவை என்பதும் அச்சம் என்பதும் இல் லாத இந்த அகண்ட வாழ்வானது எவ்வளவு அற்புதமானது! அதைக் குறித்த நினைவே உள்ளத்தை உயர்த்துகின்றது. ஈசு வர லீலையினின்றும் நித்தியத்தை வேறாக அறியும் ஞானிகள் சிலர் உளர். ஏனையோர் இவை இரண்டையும் ஒன்றாகவே காண்கின்றனர். லீலையையும் நித்தியத்தையும் கடந்த ஞான அனுபவ நிலை ஒன்றும் உளது.

---

# 4

## *குண்டலினி

[காசியில் நடந்த சம்பாஷணை]

கு :—ஸ்வாமிஜி, குண்டலினியை எழச் செய்வது எப்படி?

சுவாமிகள் :—ஜபம், தியானம், இன்னும் இதர ஞானசாதனை களினாலேயே. அதனை எழச் செய்வதற்குப் பிரத்தியேக

---

* குண்டலினி என்னும் பதத்துக்குச் சுருண்டு கிடப்பது என் பது பொருள். தந்திர சாஸ்திரத்திலே, மனித சரீரத்தில் சுருண்டு உறங்கிக் கிடக்கும் சர்ப்பம் என்று அது வர்ணிக்கப்பட்டிருக் கிறது. குண்டலினி என்பது எல்லா ஜீவப் பிராணிகளிலும் அடங்கியிருக்கும் ஞான சக்தியாகும். அச் சக்தி விழித்தெழும் பொழுது, சாதகனுடைய உண்மையான ஞான வாழ்க்கை ஆரம்ப மாகின்றது. மனிதனுடைய முள்ளந் தண்டின் நடுவிலே ஏழு தாமரைகள் அல்லது ஆதாரங்களோடு கூடிய ஸுஷும்னா (சுழு

மான தியான முறைகளும் சாதனைகளும் இருக்கின்றன என்று சில யோகிகள் சொல்லுகின்றனர். ஆனால், ஜபத்தின் மூலமாகவும் தியானத்தின் மூலமாகவுமே, எல்லாவற்றையும் விட மிக மேன்மையாக அதனைச் செய்யலாமென்று நான் நம்புகிறேன். முக்கியமாக, நம்முடைய இக் கலியுகத்திலே, ஜபம் செய்வது மிகவும் பொருத்தமானது. இதைவிட எளிதான வேறு சாதனை ஒன்றும் இல்லை. ஆனால், மந்திர ஜபத்தோடு கூடவே தியானமும் செய்யவேண்டும்.

கு :—தியானம் என்பது கடவுளின் உருவத்தை எண்ணுவதா ?

சுவாமிகள் :—அது, பரம்பொருளை உருவத்துடனும், உருவமில்லாமலும் நினைத்தல் என்று பொருள்படும்.

கு :—ஒருவன் பகவானை உருவத்துடனோ அல்லது உருவமில்லாமலோ தியானம் செய்வதற்குத் தகுதி யுள்ளவன் என்பதை நிச்சயம் செய்பவர் குருதானே ?

சுவாமிகள் :—ஆம். ஆனால் பரிசுத்தமடைந்த மனமே குருவின் காரியத்தைச் செய்கின்றது. சில வேளைகளில் மனமானது உருவத்தை நினைக்க முற்படுகின்றது. மற்றும் சில வேளைகளில் கடவுளினுடைய அருவத் தன்மையிலே மனம் திருப்தியடைகின்றது. வெளியில் உள்ள குரு எல்லாக் காலத்திலும் கிடைப்பதில்லை. சாதகன் தன்னுடைய ஆத்ம சாதனைகளைச் செய்துகொண்டே போகப்போக, அவனுடைய ஞான சக்தியும் அதிகரித்துக்கொண்டே வருகின்றது. அதன் பிறகு அவனுடைய மனமே ஒரு குருவைப்போல வழிகாட்டக் கூடும்.

---

முனை) நாடி என்ற ஒரு குழாய் இருப்பதாக யோகிகள் கூறுகின்றனர். இந்த ஆதாரங்கள் சுழுமுனை நாடியின் அடியிலே உள்ள மூலாதாரத்தி லிருந்து தொடங்கி உச்சியிலே உள்ள ஆயிரம் இதழ்த் தாமரையாகிய சகஸ்ராரத்தோடு முடிகின்றன. குண்டலினியானது உயர எழ எழ அற்புதமான சித்திகளும் ஞானக் காட்சிகளும் யோகிக்கு உண்டாகின்றன. அது ஸகஸ்ராரத்தை அடையும்பொழுது அதியுயர்ந்த ஞான ஒளியினை யோகிஅடையப் பெறுகின்றான்.

யோக வாசிஷ்ட ராமாயணத்தில், மனத்தின் சக்தியானது அநேகவித உலக வசீகரங்களினாலே விரயம் செய்யப்பட்டிருக்கிறதென்று சொல்லப்பட்டிருக்கின்றது. மனத்தின் ஒரு பாகம் சரீரத்தின்கண் இழுக்கப்படுகின்றது; இன்னொரு பாகம் இந்திரியங்களினிடத்தும், மற்றும் ஒரு பாகம் இந்திரியங்களுக்கு விஷயமாகும் பொருள்களினிடத்தும் இழுக்கப்படுகின்றன. இவ்விதமாக மனமானது பல பொருள்களில் கட்டுண்டு கிடக்கிறது. இந்தக் கட்டுக்களையெல்லாம் அறுத்தெறி. சிதறிக் கிடக்கும் மனத்தின் சக்திகளையெல்லாம் திரட்டிக் குறிப்பிட்ட வழியில் அவற்றை ஒரு முகமாகச் செலுத்து. ஆத்மீய வாழ்க்கையின் காரியம் இதுதான்.

மனம் முழுமையையும் ஒருவழிப் படுத்தி, முடிவாகிய கடவுளை அடையும் வரையில், அதனை ஞான சாதனைகளிலே செலுத்து. போராடு. முனைந்து உழை. நீ இப்பொழுது இளைஞனாய் இருக்கிறாய். இதுதான் ஆத்ம சாதனைகளைப் பழகுவதற்குக் காலம். வயது முதிர்ந்துவிட்டால் உன்னால் யாதொன்றும் இயலாது. ஆரம்பத்தில், தினசரி நடவடிக்கையிலே ஒரு பகுதியாக வைத்துக்கொண்டு, ஆத்ம சாதனைகளைச் செய்துவர வேண்டியது அவசியம். மனம் அதை விரும்பினாலும் சரி அல்லது விரும்பாவிட்டாலும் சரி. தப்பாமல் அவற்றைச் செய்து வரவேண்டும்.

உனது ஞான வாழ்க்கையை நீ ஊக்கத்துடன் ஆரம்பி. சிதறிக் கிடக்கும் மனத்தினுடைய வலிமைகளையெல்லாம் திரட்டி ஒன்று சேர்க்க உன்னால் கூடுமானால், அது ஓர் அபாரமான அரிய சக்தியை உண்டுபண்ணுவதை நீ காண்பாய். ஜபத்தின் மூலமாகவோ, அல்லது தியானத்தின் மூலமாகவோ, அல்லது விவேக விசாரணையின் வாயிலாகவோ நீ இதைச் செய். இந்த மார்க்கங்களெல்லாம் சமமாகவே பயன் தருவன என்பதை நீ அறி. இவைகளுள் ஏதேனும் ஒன்றைக் கைக்கொண்டு சாதனையில் நீ மூழ்கிவிடு. இனிக் கேள்விகள் கேட்க வேண்டாம். முதலில் ஏதேனும் கொஞ்சம் செய்; பிறகு, ஏதாவது சந்தேகம் இருந்தால், என்னை வந்து கேள்.

கு:—குருவினுடைய அருளாலேயே குண்டலினியானது எழுகின்றது என்பது உண்மைதானா?

சுவாமிகள் :—குருவினுடைய அருளினாலே குண்டலினியை எழச் செய்வதோடல்லாமல், மற்று அனைத்தையுமே நாம் அடையலாம்; பிரம்ம ஞானத்தைக்கூட நாம் பெறலாம். ஆனால் இந்தக் குரு அருளை அடைதல் எளிதன்று. அதனை அடைய ஒருவன் தன் முழு ஆற்றலோடும் முறப்பட்டு உழைக்க வேண்டும்.

நீ ஏதேனும் ஞான சாதனையைச் செய்திருக்கின்றாயோ என, நீ அமைதியாய் இருக்கும் காலங்களில், உன் மனத்தைக் கேள். நீ ஒன்றுமே செய்யவில்லை யென்று அது பதில் அளிக்கும். இப்பொழுது தொடங்கு. இதிலேயே, இஃதொன்றிலேயே, நீ முற்றிலும் ஈடுபடு. வேறொன்றினையும் கருதாதே. உனது உள்ளத்தினுள்ளே நீ ஆழ்ந்துவிடு.

---

# 5

## கருமமும் பூஜையும்

[காசியில் நடந்த சம்பாஷணை]

சுவாமிகள் :—உன்னுடைய ஞான சாதனைகளை நீ சரிவரச் செய்துவருகின்றாயா ?

சி :—ஸ்வாமிஜி, அவற்றிற்குப் போதிய காலம் எனக்குக் கிடைக்கவில்லை. செய்தற்கான அலுவல்கள் அதிகம் இருக்கின்றன.

சுவாமிகள் :—போதிய காலம் இல்லாமையால் ஞான சாதனைகளை அப்பியசிக்க முடியாதென்று கருதுவது பிசகாகும். உண்மையான காரணம் யாதெனில், மனத்தின் அமைதியற்ற நிலைமையே.

கருமம் செய்யும்போதே கையுடன் பூஜையும் செய்துவர வேண்டும். ஒருவன் முற்றிலும் ஞான சாதனைகளிலேயே ஈடு

படக் கூடுமானால், அது மிகவும் சிரேஷ்டமானது. ஆனால் எத்தனை பேர் அவ்விதம் செய்யமுடியும்? ஒரு காரியமும் செய்யாமல் அமைதியாக உட்கார்ந்திருக்கக் கூடியவர்களில் இரு வகையினர் உண்டு. கருமம் ஒன்றுமே செய்ய முடியாத தாமத குணம் பொருந்திய மூடர் ஒரு வகையினர்; மற்றவர் கருமங்கள் எல்லாவற்றையும் கடந்த ஞானியர் ஆவர். இதை கூறுவதுபோல, கருமம் செய்யாமல் எவரும் அகர்மத்தை (கருமமற்ற நிலையை) அடையமுடியாது. கருமத்தை முறையாகச் செய்து வருதலினாலேயே ஒருவன் ஞானத்தை அடைய முடியும். கருமங்களையெல்லாம் விட்டொழித்து அமைதியான வாழ்க்கையைக் கைக்கொண்டவர்கள்கூட, தங்களுடைய காலத்தில் பெரும் பகுதியைத் தடுக்கு முடைதல், கூரை வேய்தல், சமையல் செய்தல் ஆகிய இவற்றிலும் இன்னும் இதுபோன்ற பலவேறு காரியங்களிலும் செலவழிப்பதை நாம் காண்கிறோமன்றோ?

உன் பொருட்டாக உழைப்பதற்குப் பதிலாக நீ இறைவன் பொருட்டாக உழை. நீ செய்யக் கடவனவான கருமங்கள் யாவும் ஸ்ரீ ராமகிருஷ்ணருடையனவும் சுவாமி விவேகாநந்தருடையனவும் ஆம் என நீ உணர். இந்தக் கருத்துடன் நீ கருமம் புரிந்தால், உன் கருமமானது உன்னை பந்திக்காது. அதற்கு மாறாக, ஞானம், ஒழுக்கம், அறிவு, உடல்நலம் ஆகிய எல்லா வழிகளிலும் அது உன்னை உயர்வடையச் செய்யும். இந்தப் பரமாசாரியர்களின் திருவடிகளில் உனது உடல் உயிர் யாவையும் அர்ப்பணம் செய். அவர்களிடம் உன்னை முற்றிலும் ஒப்படைத்துவிடு. அவர்களுடைய தாஸனாக இருந்து, "எனது உடல் பொருள் ஆவி அனைத்தையும் தங்களிடம் அர்ப்பணம் செய்கின்றேன்; அவற்றைத் தங்களிச்சைப்படி செய்யுங்கள்; என் சக்திக் கியன்ற வரையில் யான் தங்களுக்குச் சேவை செய்யத் தயாராய் இருக்கிறேன்," என்று நீ கூறு. இவ்விதம் நீ செய்யக் கூடுமானால், உன்னுடைய ஆத்ம முன்னேற்றத்தின் பொறுப்பு அவர்களைச் சார்ந்ததாய்விடும். அதற்குமேல் உன்னைப் பற்றிய எவ்விதமான கவலையும் உனக்கு வேண்டுவதில்லை. ஆனால், நீ சரியான முறையில் சரண் அடைதல் வேண்டும். "கடவுளின் நாமத்தை வாயினால் உச்சரித்துக்கொண்டு, அதே சமயத்தில் தண்ணீரில் நனையாமல் துணியைத் தூக்கிக்

கொள்ளும் *" சந்தேக புத்தியுடன் அதனை நீ செய்தல் கூடாது.

---

* இஃது ஒரு பாகவதரையும், பால்காரியையும் பற்றி ஸ்ரீ ராமகிருஷ்ணர் கூறிய ஒரு கதையைக் குறித்ததாகும். அது வருமாறு: ஆற்றுக்கு அக்கரையில் வசித்து வந்த பாகவதர் ஒருவருக்கு ஒரு பால்காரி பால்கொண்டு போய்க் கொடுப்பது வழக்கம். ஓடம் ஒவ்வொரு நாளும் ஒழுங்காகக் கிடைக்காததினலே, அவள் தினந்தோறும் வேளைக்குப் பால் கொண்டுபோய்க் கொடுக்க முடியவில்லை. தாமதமாய் வந்ததற்காக ஒரு சமயம் பாகவதர் அவளைக் கடிந்து கொள்ளவே, அந்த எளிய ஸ்திரீ, "சுவாமி, நான் என்ன செய்வது? ஓடக்காரனுக்காக வெகுநேரம் காத்திருக்க வேண்டியிருக்கிறது," என்று கூறினாள். அதுகேட்ட பாகவதர் சொன்னதாவது :-

"ஆ பெண்ணே! பகவானுடைய நாமத்தை உச்சரிப்பதால் ஜனங்கள் ஸம்ஸாரமாகிய சமுத்திரத்தையே தாண்டிக் கடக்கின்றார்கள்; நீ இந்தச் சின்ன ஆற்றைக் கடக்க முடியாதா?" வஞ்சனை யறியாத மனத்தினளான அந்தப் பெண்மணி பாகவதர் சொன்னதை நம்பிவிட்டாள். அடுத்த நாள் முதல் பகவானுடைய பெயரைச் சொல்லிக்கொண்டே அவள் ஆற்றைக் கடந்து செல்லத் தலைப்பட்டாள். இங்ஙனமாக, ஒருநாள் அப் பாகவதர் முன்போல் இப்பொழுது ஒருநாளும் ஏன் அவள் தாமதமாக வருவதில்லையெனக் கேட்டார். அதற்கு அப் பெண், "சுவாமி, தங்கள் கட்டளைப்படியே நான் பகவானுடைய பெயரைச் சொல்லிக் கொண்டே ஆற்றைக் கடந்து வருகிறேன்" என்றாள். பாகவதர் இதனை யெப்படி நம்புவார்? அப்பெண் ஆற்றை எவ்விதம் கடக்கின்றாள் என்பதைத் தாமே பார்க்க விரும்பினார். அவள் பாகவதரைத் தன்னோடு அழைத்துக் கொண்டு போய், பகவானுடைய பெயரைச் சொல்லிக்கொண்டே ஆற்றின் மேல் நடக்கலானாள். ஆனால், சற்று நேரத்தில் அவள் திரும்பிப் பார்க்க, பாகவதர் தயக்கத்துடன் பின்னால் தொடர்ந்து வருவதையும் தமது துணிகளை உயர்த்திப் பிடித்துக் கொண்டிருப்பதையும் கண்டாள். கண்டதும், "சுவாமி! இது என்ன? கடவுள் பெயரை வாயால் சொல்லுகிறீர்கள்; ஆனால் அதே சமயத்தில் துணி எங்கே நனைந்து விடுகிறதோ என்று அதைக் கையால் தூக்கிப் பிடிக்கிறீர்களே!" என்றாள். பகவானிடத்தில் வைக்கும் தீவிரமான நம்பிக்கையும் பூரணமான சரணாகதியுமே அற்புதங்களுக்கெல்லாம் காரணமாய் இருக்கின்றன.

ஐந்தாறு வருஷங்கள் நாங்கள் பரிவிராஜக வாழ்க்கையைக் கைக்கொண்டிருந்தோம்; அதன் பிறகு கருமத்தில் ஈடுபடலானோம்.(பரிவிராஜகம் என்பது,சாதுக்கள் ஓரிடத்தில் நிலைத்திராது ஊரூராய்த் திரிந்து யாத்திரை செய்தல்.) ஒருநாள் சுவாமி விவேகானந்தர் என்னைத் தனியே அழைத்து, "பரிவிராஜக வாழ்க்கையில் பயன் ஒன்றுமில்லை; கடவுளின் பொருட்டுக் கருமம் செய்" என்று அறிவுறுத்தினர். அவ்வாறே பலவகைக் கருமங்களை நாங்கள் செய்தோம்; அதனால் எவ்விதமான தீங்கும் எங்களுக்கு நேரிட்டதாக நான் நினைக்கவில்லை. உண்மையில் மிக்க நன்மையே எங்களுக்கு விளைந்தது. ஆனால் சுவாமிஜியினுடைய வார்த்தைகளில் எங்களுக்குப் பலமான நம்பிக்கை இருந்தது. நான் உனக்குச் சொல்கிறேன்; ஸ்ரீ ராமகிருஷ்ணர், சுவாமிஜி ஆகிய இவ்விரு மஹாத்மாக்களினிடத்து நீ எல்லையில்லாத நம்பிக்கை கொள்ளவேண்டும்; அவர்களின் பொருட்டாகவே கருமம் செய்யவேண்டும். அஞ்சாதே. உனது நம்பிக்கை மட்டும் உறுதியாக இருக்கட்டும். "நீ மேற்கொண்டிருக்கும் கருமம் ஸ்ரீ ராமகிருஷ்ணருடையவோ அல்லது சுவாமிஜியினுடையவோ சம்பந்த முடையதன்று" என்று கூறிச் சிலர் உன்னைக் கலைக்கப் பார்ப்பார்கள். அவர்களுடைய வார்த்தைக்கு நீ செவிகொடுக்காதே. இவ்வுலகம் முழுமையுமே உனக்கு எதிராய் நின்றாலும், நீ உண்மையென்று ஒருதரம் துணிந்த ஒன்றை ஒருபோதும் கைவிடாதே.

சி:—முற்றிலும் ஞான சாதனைகளில் மாத்திரமே ஒருவன் ஈடுபட்டிருப்பது மிகவும் கடினம். நான் செய்து பார்த்தேன்; நெடுநாள் என்னால் செய்ய முடியவில்லை.

சுவாமிகள்:—ஏதோ இரண்டொருமுறை நீ தவறிவிட்டாய் என்பதற்காக உன்னால் முடியவே முடியாதென்று ஏன் நினைக்கிறாய்? திரும்பத் திரும்ப ஒருவன் முயற்சி செய்யவேண்டும். "புதிதாய்ப் பிறந்த கன்றுக்குட்டி எழுந்து நிற்பதற்கு முயல்கிறது; ஆனால் பலதடவை கீழே விழுகிறது. ஆயினும் அது முயற்சியை விடுவதில்லை. திரும்பத்திரும்ப முயல்கிறது. பிறகு கடைசியில், அது எழுந்து நிற்பது மாத்திரமன்று; ஓடுவதற்குங்கூடக் கற்றுக்கொள்கிறது," என்று ஸ்ரீ ராமகிருஷ்

ணர் சொல்வது வழக்கம். ஆத்மீய வாழ்க்கையின் ஆரம்பத்திலே, ஒருவன் யாதாமொரு கருமத்தை மேற்கொண்டு ஒழுங்குறச் செய்துவந்தால் மனமானது நல்ல பழக்கத்தைப் பெறுகின்றது. பிறகு, அப்படிப் பழக்கப்பட்ட மனத்தை தியானத்திலும் மற்ற ஞான சாதனைகளிலும் ஈடுபடச் செய்யலாம். ஒழுங்கின்றித் திரியவிடப்படும் மனமானது ஞான சாதனைகளைச் செய்கின்ற காலத்திற்கூடத் திரியவே செய்யும்.

ஆத்மீய வாழ்வில் முன்னேற்றமடைந்த ஒருவனுக்கு கடவுளைத் துதிப்பதிலும் தியானம் செய்தலிலுமே தன்னை முற்றிலும் ஈடுபடுத்த விரும்புவதான காலம் ஒன்று வருகின்றது. அச்சமயத்தில் கருமமானது அவனைவிட்டு நழுவிவிடுகிறது. மனமானது ஆத்ம ஞான வழியில் விழித்தெழும்பொழுது இவ்விதம் நிகழ்கின்றது. இஃதின்றி ஒருவன் தன் இச்சையின் வலிமையினால் மாத்திரமே ஞான சாதனைகளில் முற்றிலும் ஈடுபடுவதான வாழ்க்கையைக் கைக்கொண்டால், அவன் சில நாளைக்குத்தான் அவ்வாறு ஒழுகமுடியும். பிறகு சலித்துப் போகிறது. மேலும் பிடிவாதமாய்ச் செய்வதால் சிலர் பைத்தியம் பிடித்துவிடுகின்றனர். மற்றவர்கள் ஏதோ அரைகுறையாக ஞான மார்க்கத்தைக் கடைப்பிடித்து, ஏனைய விஷயங்களிலும் மனத்தைச் செலுத்திக்கொண்டிருப்பர்.

பிரம்மசரியத்தினால் பெரும் வலிமையைப் பெறலாம். ஓர் உண்மை பிரம்மசாரி இருபத்தைந்து ஆட்கள் செய்யும் வேலையைச் செய்தல் இயலும். முன்காலத்தில் பிரம்மசரியம் என்றால், புலனடக்கம் பயில்வதோடு ஜபம், தியானம், சாஸ்திர ஆராய்ச்சி, யாத்திரை செல்லுதல், சத்சங்கம் ஆகிய இவையும் இன்னும் பிறவும் சேரும்.

எல்லா மனிதரும், தத்தமக்கு நன்மையானது எது வென்பதை அறிந்துகொள்ளுதல் இயலாது. ஆகையினாலே, ஒருவன் சாதுசங்கத்தைக் கைக்கொள்ள வேண்டும். இங்கு நான் உங்களுக்குப் பூர்ண சுயேச்சை தருகிறேன். எங்கே, நீங்கள் எவ்வளவு நாளைக்குச் சரியான மார்க்கத்தில் செல்ல முடியும் என்பதை நான் பார்க்கிறேன். இயலாது; சில நாட்களுக்குமேல் இயலாது.

ஐந்தாறு வருஷங்கள் நாங்கள் பரிவிராஜக வாழ்க்கையைக் கைக்கொண்டிருந்தோம்; அதன் பிறகு கருமத்தில் ஈடுபட லானோம்.(பரிவிராஜகம் என்பது,சாதுக்கள் ஓரிடத்தில் நிலைத்திராது ஊரூராய்த் திரிந்து யாத்திரை செய்தல்.) ஒருநாள் சுவாமி விவேகானந்தர் என்னைத் தனியே அழைத்து, "பரிவிராஜக வாழ்க்கையில் பயன் ஒன்றுமில்லை; கடவுளின் பொருட்டுக் கருமம் செய்" என்று அறிவுறுத்தினார். அவ்வாறே பலவகைக் கருமங்களை நாங்கள் செய்தோம்; அதனால் எவ்விதமான தீங்கும் எங்களுக்கு நேரிட்டதாக நான் நினைக்கவில்லை. உண்மையில் மிக்க நன்மையே எங்களுக்கு விளைந்தது. ஆனால் சுவாமிஜியினுடைய வார்த்தைகளில் எங்களுக்குப் பலமான நம்பிக்கை இருந்தது. நான் உனக்குச் சொல்கிறேன்: ஸ்ரீ ராமகிருஷ்ணர், சுவாமிஜி ஆகிய இவ்விரு மஹாத்மாக்களினிடத்து நீ எல்லையில்லாத நம்பிக்கை கொள்ளவேண்டும்; அவர்களின் பொருட்டாகவே கருமம் செய்யவேண்டும். அஞ்சாதே. உனது நம்பிக்கை மட்டும் உறுதியாக இருக்கட்டும். "நீ மேற்கொண்டிருக்கும் கருமம் ஸ்ரீ ராமகிருஷ்ணருடையவோ அல்லது சுவாமிஜியினுடையவோ சம்பந்த முடைய தன்று" என்று கூறிச் சிலர் உன்னைக் கலக்கப் பார்ப்பார்கள். அவர்களுடைய வார்த்தைக்கு நீ செவிகொடுக்காதே. இவ்வுலகம் முழுமையுமே உனக்கு எதிராய் நின்றாலும், நீ உண்மையென்று ஒருதரம் துணிந்த ஒன்றை ஒருபோதும் கைவிடாதே.

சி:—முற்றிலும் ஞான சாதனைகளில் மாத்திரமே ஒருவன் ஈடுபட்டிருப்பது மிகவும் கடினம். நான் செய்து பார்த்தேன்; நெடுநாள் என்னால் செய்ய முடியவில்லை.

சுவாமிகள்:—ஏதோ இரண்டொருமுறை நீ தவறிவிட்டாய் என்பதற்காக உன்னால் முடியவே முடியாதென்று ஏன் நினைக்கிறாய்? திரும்பத் திரும்ப ஒருவன் முயற்சி செய்யவேண்டும். "புதிதாய்ப் பிறந்த கன்றுக்குட்டி எழுந்து நிற்பதற்கு முயல்கிறது; ஆனால் பலதடவை கீழே விழுகிறது. ஆயினும் அது முயற்சியை விடுவதில்லை. திரும்பத்திரும்ப முயல்கிறது. பிறகு கடைசியில், அது எழுந்து நிற்பது மாத்திரமன்று; ஓடுவதற்குங்கூடக் கற்றுக்கொள்கிறது," என்று ஸ்ரீ ராமகிருஷ்

ணர் சொல்வது வழக்கம். ஆத்மீய வாழ்க்கையின் ஆரம்பத்திலே, ஒருவன் யாதாமொரு கருமத்தை மேற்கொண்டு ஒழுங்குறச் செய்துவந்தால் மனமானது நல்ல பழக்கத்தைப் பெறுகின்றது. பிறகு, அப்படிப் பழக்கப்பட்ட மனத்தை தியானத்திலும் மற்ற ஞான சாதனைகளிலும் ஈடுபடச் செய்யலாம். ஒழுங்கின்றித் திரியவிடப்படும் மனமானது ஞான சாதனைகளைச் செய்கின்ற காலத்திற்கூடத் திரியவே செய்யும்.

ஆத்மீய வாழ்வில் முன்னேற்றமடைந்த ஒருவனுக்கு கடவுளைத் துதிப்பதிலும் தியானம் செய்தலிலுமே தன்னை முற்றிலும் ஈடுபடுத்த விரும்புவதான காலம் ஒன்று வருகின்றது. அச்சமயத்தில் கருமமானது அவனைவிட்டு நழுவிவிடுகிறது. மனமானது ஆத்ம ஞான வழியில் விழித்தெழும்பொழுது இவ்விதம் நிகழ்கின்றது. இஃதின்றி ஒருவன் தன் இச்சையின் வலிமையினால் மாத்திரமே ஞான சாதனைகளில் முற்றிலும் ஈடுபடுவதான வாழ்க்கையைக் கைக்கொண்டால், அவன் சில நாளைக்குத்தான் அவ்வாறு ஒழுகமுடியும். பிறகு சலித்துப் போகிறது. மேலும் பிடிவாதமாய்ச் செய்வதால் சிலர் பைத்தியம் பிடித்துவிடுகின்றனர். மற்றவர்கள் ஏதோ அரைகுறையாக ஞான மார்க்கத்தைக் கடைப்பிடித்து, ஏனைய விஷயங்களிலும் மனத்தைச் செலுத்திக்கொண்டிருப்பர்.

பிரம்மசரியத்தினால் பெரும் வலிமையைப் பெறலாம். ஓர் உண்மை பிரம்மசாரி இருபத்தைந்து ஆட்கள் செய்யும் வேலையைச் செய்தல் இயலும். முன்காலத்தில் பிரம்மசரியம் என்றால், புலனடக்கம் பயில்வதோடு ஜபம், தியானம், சாஸ்திர ஆராய்ச்சி, யாத்திரை செல்லுதல், சத்சங்கம் ஆகிய இவையும் இன்னும் பிறவும் சேரும்.

எல்லா மனிதரும், தத்தமக்கு நன்மையானது எதுவென்பதை அறிந்துகொள்ளுதல் இயலாது. ஆகையினாலே, ஒருவன் சாதுசங்கத்தைக் கைக்கொள்ள வேண்டும். இங்கு நான் உங்களுக்குப் பூர்ண சுயேச்சை தருகிறேன். எங்கே, நீங்கள் எவ்வளவு நாளைக்குச் சரியான மார்க்கத்தில் செல்ல முடியும் என்பதை நான் பார்க்கிறேன். இயலாது; சில நாட்களுக்குமேல் இயலாது.

எல்லாவகைக் கஷ்டங்களும் எழுவது, மனமானது சரியான படி பழக்கப் படாமையினாலேயே. சோம்பேறித்தனமான வீண் பேச்சைவிட அதிகக் கெடுதலை விளைவிக்கும் விரோதி வேறொன்றும் இல்லை. அஃது ஒருவனை முற்றிலும் பாழாக்கி விடுகின்றது.

ஒருவன் ஏகாந்தத்தில் சிறிது நேரம் கழித்தாலல்லது, தன் மனத்தின் காரியங்களைத் தெரியவும் உண்மையை அறியவும் முடியாது. மனத்தில் குழப்பமும் கொந்தளிப்பும் உள்ள நிலைமையில், குறிப்பிட்ட எந்த வழியாலும் ஒருவன் ஞான உயர்வினை அடைதல் இயலாது.

நான் யாவருக்கும் சுயேச்சையைக் கொடுக்கிறேன். ஒவ்வொருவரும் அவரவருடைய வழியில் முன்னேற்ற மடைவதையே யான் விரும்புகிறேன். ஆனால் ஒருவன் அவ்விதம் செய்ய இயலாதிருப்பதை நான் காணும்போது, அவனுக்கு உதவி செய்ய் முற்படுகின்றேன். எங்கேனும் ஒரு குறிப்பிட்ட இடத்தில் தங்கியிருந்து ஏதாயினும் ஒருவகைத் தொண்டினை மேற்கொள்வது எல்லா வகையானும் நன்மையை யளிப்பதாகும். இந்த ஸ்தாபனத்துக்கு உபயோகமாக ஏதாவதொரு பணியைச் செய்யாமல் நீண்டநாள் இங்கு இருப்பாயானால், நீ சாந்தியை இழந்து துன்பப்படுவாய். மற்று, எவ்வகையான தொண்டாயினும் நாள்தோறும் நீ சிறிதளவு செய்து வருவாயானால், மனத்தாலும் உடலாலும் நீ நலமுற்று வருவதைக் காண்பாய்.

நாங்கள் உழைப்பினை ஊக்கத்தோடு மேற்கொண்டிருந்த நாட்களில், உயர்ந்த மனோபாவங்களும் உற்சாகமும் உடையவர்களாய் இருந்ததோடு, மேலான சரீர சுகமும் உள்ளவர்களாய் இருந்தோம். முறையான பணி எதுவும் நாங்கள் செய்யாதிருக்கும் இந் நாட்களைவிட அதிக சுகத்தோடு அந்நாளில் இருந்தோம் என்று நினைக்கிறேன். என் மனப்பூர்வமான எண்ணங்களையே, உண்மையாக நான் உணர்வதையே, உனக்குச் சொல்லுகிறேன். தீவிரமான உழைப்பினின்று நான் இப்போது ஓய்வெடுத்துக்கொண்டிருக்கிறேன். உதாரணமாய்க் காட்டுவதற்காகவே உனக்கு என்னைப்பற்றி எடுத்துச் சொல்லுகிறேன். சிலபேர், தாங்களும் என்னைப் போல் நடிக்கவும் வேலை செய்யா

மல் இருக்கவும் நினைக்கின்றனர். அத்தகைய எண்ணத்துக்கு உன் உள்ளத்தில் ஒருபோதும் இடங்கொடாதே.

நித்திய வாழ்வு உன்முன் இருக்கிறது. ஸ்ரீ ராம கிருஷ்ணர், சுவாமி விவேகானந்தர் ஆகிய இவர்களின் பொருட்டுச் சில ஜன்மங்களைச் செலவழித்தால்தான் என்ன? அவ்வாறு செய்வது பிசகாகவே இருந்தாலுங்கூட, சில ஜன்மங்கள் வீணாய்த்தான் போகட்டுமே. ஆனால், யான் சொல்லுகிறேன். அவ்விதம் ஒருக்காலும் ஆகப்போவதில்லை. ஸ்ரீ ராமகிருஷ்ணர், சுவாமி விவேகானந்தர் ஆகிய இவர்களின் அருளினாலே, எவ்வளவு உன்னதமான ஞான உச்சிகளில் நீ ஏறித் திளைப்பாய் என்பதை நீயே காணுவாய்.

கஷ்டமும் உழைப்பும் இல்லாத சுலபமான வாழ்வை நீ இனிக் கணமும் மேற்கொள்ளாதே. அவ்விதம் செய்தால், ஞான சாதனைகளைச் செய்ய உன்னால் இயலாது. எந்தப் பணியை மேற்கொண்டாலும், அதனை முழுமனத்துடன் செய். சுவாமிஜி அடிக்கடி சொல்லியிருப்பது போல, இதுதான் கர்ம ரகஸியம். பணியில் மூழ்கி நில். ஒரு பத்திரிகையை நடத்தும் பணி உனக்கு இடப்பட்டிருக்கிறது; உற்சாகத்தோடு அதனைச் செய். அது உனக்கொரு பொருட்டல்ல; மிக எளிதில் நீ அதனைச் செய்தல் கூடும்.

நீ உனது பணியைத் தொடங்குமுன், இறைவனை நினைந்து அவனைத் தொழு. கருமம் செய்யுங் காலத்தும் இடையிடையே அவ்வாறு செய். கருமம் முடிந்த பிறகும் அவ்வாறு செய். ஸ்ரீ ராமகிருஷ்ணர் சுவாமிஜி ஆகிய இவர்களின் வாழ்க்கையையும், உபதேசங்களையும், கட்டளைகளையும் எண்ணுவதிலேயே உன் காலத்தையெல்லாம் கழி. உன் உள்ளத்தினுள்ளே, நீ செய்யும் கருமமெல்லாம் அவர்களின் பொருட்டானதே என்று கருது.

---

# 6

# இன்பம்

[காசியில் நடந்த சம்பாஷணை]

சுவாமிகள் :—உங்கள் எல்லாரையும் இறைவனிடத்து முழு மனத்துடன் ஈடுபடும்படியாக நான் ஏன் அவ்வளவு அழுத்த மாக வற்புறுத்திச் சொல்லுகிறேன் என்பதை அறிவீர்களா? நாங்கள் உங்கள் வயதிலே இருக்கும்போது, பகவான் ஸ்ரீ ராம கிருஷ்ணர் எங்களை இழுத்து இழுத்து வைத்து ஞான சாதனை களைச் செய்யச் சொல்லுவது வழக்கம். இளம் பிராயத்தில் மனமானது களிமண்ணைப் போல மிருதுவாக இருக்கின்றது. யாதொன்றுடன் மனம் சம்பந்தப்படுகின்றதோ அதனுடைய அடையாளமானது அழியாதபடி அதிற் பதிந்துவிடுகின்றது. களிமண்ணானது மிருதுவாகவே இருக்கும் வரையில் உங்களுக்கு விருப்பமான எவ்வகை வடிவத்தையும் அதற்குக் கொடுக்கலாம். ஆனால் அக் களிமண் சுடப்பட்டுவிட்டாலோ அவ்விதம் செய்ய முடியாது. உங்களுடைய மனமானது இப்போது சுடப்படாத களிமண்ணைப் போன்றிருக்கின்றது. உங்களுக்கு விருப்பமான எவ்வகை வடிவமாகவும் அதனைச் செய்யலாம். அது இன்னும் அழுக்குப் படாமலும் பரிசுத்தமாயும் இருக்கின்றது; ஆதலால் மிக எளிதாக அதனை இறைவனிடத்துச் செலுத்தலாம். இது முதற்கொண்டே மனத்தை முற்றிலும் கடவுளைப்பற்றிய எண் ணங்களிலேயே ஈடுபட்டிருக்கும்படி செய்தால், பிற எண்ணங் கள் பின்னர் அதனைக் கலக்கமுடியாது. மனத்தை இப்பொழுதே இறைவன்பால் உறுதியாக நிலைத்திருக்கும்படி செய்துவிட்டால், ஆத்மீய முன்னேற்றத்தைப் பற்றிய கவலை உங்களுக்கு வேண் டியதில்லை.

மனமானது ஒரு கடுகுப் பொட்டணத்தைப் போன்றது. கடுகு விதைகள் ஒருதரம் கீழே இறைக்கப்பட்டுவிட்டால், அவற் றைச் சேர்த்து எடுப்பது மிகவும் கடினம். ஆகையால், உங்களு

டைய மனத்தை, அதன் சக்திகளெல்லாம் சிதறி விடுவதற்கு முன்னதாகவே, உருப்படுத்தும்படியாக நான் உங்களுக்குச் சொல்லுகிறேன். நீங்கள் வயது முதிர்ந்தவர்களாகி, உங்கள் மனத்தின் சக்தியானது சிதறிப்போய் விடுமாயின், பின்னர் அதனை ஒருமுகப் படுத்துவதற்கு மிகக் கடுமையான முயற்சியை மேற்கொள்ளவேண்டி வரும். அங்கு மிங்கும் ஓடாது ஒரு குறிப்பிட்ட பொருளில் அதனை நிலைக்கும்படி செய்யுங்கால், அதிதீவிரமான கஷ்டத்தை உணர்வீர்கள். சிறு பையன் ஒருவனுடைய மனமானது எவ்வளவு சுலபமாக விஷயங்கள் படியக்கூடியதாய் இருக்கின்றதென்பதை நீங்கள் காணவில்லையா? அச்சிறுவனைப் போன்று நீங்கள் இப்போது இருக்கின்றீர்கள். நீங்கள் ஒரு குறித்த லட்சியத்தை அடைய விரும்புவீர்களானால், உங்கள் பதினாறுவது வயது முதல் முப்பதாவது வயது வரையில், அதன் பொருட்டுத் தீவிரமாகப் பாடுபடுங்கள். அதற்கப்பால் ஞான ஒளியைப் பெறுவது மிகவும் கடினம். முப்பதாவது வயது வரையில் உடலும் மனமும் இளமைபொருந்தி யிருக்கின்றன. மனமானது வேண்டியதொரு வடிவினை அடையச் செய்வதற்கு அதுவே தக்க காலம். ஆனால் உங்களது வாழ்க்கையின் நோக்கத்தினை அடையும் பொருட்டு நீங்கள் கடுமையாக உழைத்து முழுமனத்துடன் அதில் ஈடுபடவேண்டும். வாலிப தசையில் மனத்தில் எந்த விஷயமானது படிகின்றதோ, அது உயிருள்ளளவும் நிலைத்திருக்கும். ஆதலால் கடவுளை அடைதற்காக ஞான நெறியைக் கடைப் பிடிப்பதென நீங்கள் தீர்மானம் செய்துவிட்டீர்களானால், இன்று முதலே உங்களால் இயன்ற வரையில் பாடுபடுங்கள். இப்போது உங்கள் உடல் நலம் செம்மையாகவே இருக்கின்றது. மனமும் இளக்க முள்ளதாகவே இருக்கின்றது. ஞான சாதனைகளுக்கு இதுதான் தக்க காலம். இடைவிடாத போராட்டத்தின் மூலம் உங்கள் மனத்துக்கு ஒரு வடிவு கொடுங்கள். உங்கள் ஆயுட்காலத்தின் இந்தப் பகுதியானது கழிந்துவிட்டால், பிறகு எதையும் செய்வது மிகவும் கடினமாகும்.

இந்தக் காலத்திலேயே நீங்கள் மனத்தினிடத்து ஒரு முத்திரையைப் பதிய வைத்து விடுவீர்களானால், இறைவனையே உங்

களது வாழ்வின் சாரமும் முடிவுமாக நீங்கள் அமைத்துக்கொள்ள முடியுமானால், அவனை அடைதற் பொருட்டே உண்மையாக நீங்கள் ஈடுபடக் கூடுமானால், எல்லாவிதத் துயரங்களினின்றும் நீங்கள் விடுபட்டவர்களாவீர்கள். துன்பமோ, துயரமோ எதுவும் உங்களைக் கலங்கச் செய்ய வல்லதாகாது. தெய்விக இன்பத்தையும் நித்தியானந்தத்தையும் அடையப்பெற்றவர்களாவீர்கள்.

மனிதன் வேண்டுவது யாது? அவன் இன்பத்தையே விரும்புகிறான். அதைத் தேடி அவன் எப்படி அலைகிறான்! என்னென்ன யுக்திகளைச் செய்கிறான்! எவ்வளவு கடுமையாக முயலுகிறான்! ஆனால், அது அவனுக்குக் கிடைக்கின்றதா! பல யுக்திகளைக் கோலிய பிறகும், பல முயற்சிகளைச் செய்த பிறகும், எண்ணம் நிறைவேறாமற் போவதைக் கண்டு கலக்கமடைகிறான். திரும்பத் திரும்ப யுக்திகளைச் செய்கிறான்; ஆனால் பயன் இல்லை. இப்படியே அவன் ஆயுள் முழுவதும் கழிந்துவிடுகிறது. ஆனந்தத்தையும் சாந்தத்தையும் அனுபவிக்கும் பாக்கியம் அவனுக்கு இல்லை. ஒரு சாதாரணக் கூலியாளைப்போல அவன் கஷ்டப்பட்டு உழைக்கிறான்; அதன் பயனாக அவன் அடைவதோ துன்பமும் துயரமுமே. பின்னர் இவ்வுலகத்தைவிட்டுப் போய்விடுகிறான். இவ்வாறாக அவன் வீணிலே மாய்ந்து போகின்றான். வாழ்க்கையின் நோக்கத்தை மறந்து, வெறும் சுக போகங்களுக்காக ஓடி அலைபவன் இதைவிட மேலானது ஒன்றை எதிர்பார்க்க இயலாது.

உண்மையான இன்பத்தை நீங்கள் அடைய விரும்புவீர்களானால், எல்லா உலக சுகங்களையும் நீங்கள் விட்டுவிடவேண்டும்; அநித்யமான போகங்களில் உள்ள பற்றுக்களை யெல்லாம் விடவேண்டும்; உங்கள் மனத்தினது சக்தி முழுமையும் இறைவனை நோக்கிச் செலுத்தவேண்டும். இறைவனை நோக்கி எவ்வளவுக்கெவ்வளவு முன்னால் செல்கின்றீர்களோ அவ்வளவுக்கவ்வளவு அதிக ஆனந்தத்தை நீங்கள் அடைவீர்கள். உலகத்தினிடத்தும் இந்திரிய சுகங்களினிடத்தும் உங்கள் மனமானது அதிகமாக பற்றுடையதாகுமளவு, அதிகமான துன்பத்தை நீங்கள் அடைவீர்கள்.

சாதாரண மனிதனுடைய சுபாவம் எப்படிப்பட்டதென்பதை அறிவீர்களா? அவன் சுகத்தையும் இன்பத்தையும் நாடிப் புதுப்புது விஷயங்களில் இச்சையைச் செலுத்துகிறான். ஆரம்பத்திலிருந்தே, இந்தப் பிழையை அவன் செய்கிறான். இன்ப சுகத்தை நாடுவோரில் நூற்றுக்குத் தொண்ணூற்றொன்பது பேர் உண்மையான இன்பம் இன்னதென்பதை அறியமாட்டார்கள். கையண்டையில் எதைக்காண்கிறார்களோ அதனைக் கெட்டியாகப் பிடித்துக்கொண்டு, தாங்கள் நாடிய பொருளை அடைந்துவிட்டதாக நம்புகிறார்கள். பின்னர் ஏமாற்ற மடைந்தவர்களாகி, வேறொன்றைப் பற்றுகிறார்கள். திரும்பவும் அம்மாதிரி ஏமாற்ற மடைந்து, தங்கள் பரிதாப நிலையைக் கருதி அவர்கள் துக்கப் படுகிறார்கள். அவர்கள் செய்யும் பிழையைத்தான் கவனியுங்கள் :—திரும்பத் திரும்ப அவர்கள் ஏமாற்ற மடைகின்றார்கள்; அப்படியிருந்தும் தங்கள் போக்கை மாற்றிக்கொள்ள மாட்டார்கள்; சரியான மார்க்கத்தைப் பின்பற்ற மாட்டார்கள். வாழ்க்கையில் இடிக்குப் பின் இடியாகத் தாங்கள் பட்டும், தங்கள் கதியை நினைந்து வருந்தியும் வாழ்நாளைக் கழித்து விடுகிறார்கள். அவர்களைப் பகவான் ஸ்ரீ ராமகிருஷ்ணர் ஓர் ஒட்டகத்துக்கு ஒப்பிடுவது வழக்கம். ஒட்டையானது, நல்ல புல் தன் அருகாமையில் இருந்தாலும், அதைத் தின்னாது. முட்செடியைத் தின்றால் வாயில் இரத்தம் வரும் என்பதை அது நன்றாய் அறியும்; ஆனாலும், அந்த முட்செடியைத் தின்பதற்கே அது முற்படுகின்றது. அதைப் போன்று, மனிதனும் பிழையான எண்ணங்களினாலும் பிசகான ஆசைகளினாலும் துன்பப்படுகின்றான்.

நீங்கள் சிறுவர்கள்—இளஞ்சிறார். வெளியுலகிலிருந்து எந்த விதமான தீய பதிவுகளும் உங்கள் மனத்தில் இன்னும் பதிந்துவிடவில்லை. இப்பொழுது தொடங்கியே நீங்கள் கஷ்டப்பட்டு உழைக்கக் கூடுமானால், வாழ்க்கையின் துன்பத் துயரங்களினின்றும் தப்பித்துக்கொள்ள வல்லவர்க ளாவீர்கள்.

நீங்கள் எவ்வளவுதான் செல்வம் உடையவர்களாக ஆனாலும், சீரும் சிறப்பும், சுகமும், போகமும் பொருந்திய வாழ்க்கையை நடத்தக்கூடிய சந்தர்ப்பங்கள் எவ்வளவுதான் உங்களுக்கு இருந்தாலும், எவ்வளவு விரிவான அன்பர்களும் அபி

மானிகளும் அடங்கிய நண்பர்குழாம் உங்களுக்கு இருந்த போதிலும், உண்மையான இன்பத்தை நீங்கள் அடையமாட்டீர்கள். இவை யாவும் சில நிமிஷங்களே நிற்கக் கூடியன; அதிகமானால் ஒரு மணி நேரம்; நீண்ட காலம் நில்லா. பிறகு உண்டாவது எதிர்த்தாக்கான துன்பமே. இவ்விதமாக, எப்போதும் சுகத்தைப் பின்பற்றி, அதன் எதிர்மறையான துக்கமே உண்டாகின்றது. உண்மையான நித்தியானந்தத்தை ஒருவன் அடைய வேண்டுமானால், எந்த ஒரு சுகத்தைப் பின்பற்றி அதற்கு எதிரிடையான துக்கமானது ஏற்படாதோ, அந்தவிதமான சுகத்தையே நாடவேண்டும். அந்த உண்மையான நித்தியானந்தம் எங்கே இருக்கின்றது? இறைவனை அறிவதில்தான் அது இருக்கின்றது. இந்தத் தெய்விக இன்பம் ஒன்றைப் பின்பற்றினால்தான் அதற்கு எதிரிடையாகத் துன்பம் உண்டாவதில்லை. நீங்கள் கூறக்கூடிய மற்றெல்லா வகைச் சுகங்களையும் பின்பற்றி, எதிர்மறையான துக்கமானது நிச்சயம் தொடர்ந்து வருகின்றது. எங்கெல்லாம் எதிர்த்தாக்கல் இருக்கின்றதோ அங்கெல்லாம் துன்பமும் துயரமுமே விளைகின்றன என்பதை நீங்கள் அறியவேண்டும்.

மனித வாழ்க்கையின் இலக்ஷியத்தை ஒருபோதும் மறக்காதீர்கள். ஒரு மிருகத்தைப் போல, உண்பதிலும் பருகுவதிலும் உறங்குவதிலுமோ அல்லது சோம்பேறியாய் வீண்பேச்சுப் பேசுவது முதலான காரியங்களிலுமோ காலத்தைக் கழிப்பதற்காக இப்பிறவியானது நமக்கு ஏற்பட்டதன்று. நீங்கள் மனிதராகப் பிறந்திருப்பதனாலே, இந்த உலகபோகங்களையெல்லாம் நீங்கள் வெறுத்துத் தள்ளிவிடுங்கள். கடவுளை அறிந்து எல்லையில்லாத ஆனந்தத்தை அடைவதென உறுதியுடன் தீர்மானம் செய்யுங்கள். இம்முயற்சியில் உங்கள் உயிரே போவதானாலும் சற்றேனும் பின் வாங்காதீர்கள்.

பகவான் ஸ்ரீ ராமகிருஷ்ணருடைய பெயரால் நீங்கள் எதற்காக வீடு வாசல்களையெல்லாம் விட்டுவிட்டு வந்திருக்கிறீர்கள்? கடவுளைக் காண்பதற்காக அல்லவா? இந்த உலகத்தின் துன்பத்துயரங்களிலிருந்து விலகி நித்தியமான சாந்தியையும் ஆனந்தத்தையும் அடைவதற்காகவே அன்றோ!

பின், உடல் வலிமையும் மனவலிமையும் இருக்கிறவரை யிலே, வாழ்வின் இலட்சியத்தை அடையப் போராடுங்கள். "பிற்காலத்திலே இலக்ஷியத்தை அடையப் பெறுவோம்; கடவுள் கிருபை ஒன்றினால் மாத்திரமே நாம் அதனை அடையமுடியும்," என்று கூறிக்கொண்டு உங்கள் முயற்சிகளை எவ்வகையாலும் தளர விட்டுவிடாதீர்கள். சோம்பேறிகளே அவ்விதம் பேசுவார்கள். உங்கள் காலத்தை நீங்கள் சோம்பலாகக் கழிப்பதை நான் ஒப்பமாட்டேன். உங்களுக்கு விருப்பமில்லை யென்றால், வெளிப்படையாகச் சொல்லிவிடுங்கள். "உலக சுகங்களை அனுபவிக்க எனக்கு ஆசையிருக்கின்றது. மெய்ப்பொருளைக் காண்பதற்கு, அதாவது கடவுளை அடைவதற்கு உண்மையான ஆசை எனக்கு இல்லை," என்று தெளிவாகச் சொல்லிவிடுங்கள். உங்கள் கருத்தும் பேச்சும் ஒன்றாய் இருக்கட்டும்.

ஞான சாதனைகளை எப்போது நீங்கள் செய்யப் போகின்றீர்கள்? நான் சொன்னது போல, வாழ்நாளின் மேன்மையான பகுதி பதினாறுவது பிராயம் முதல் முப்பதாவது வயதுவரையில் தான். அருமையான இந்தக் காலத்தை உபயோக மில்லாத வழிகளிற் சென்று விரயம் செய்துவிட்டு, வயதான கிழப் பருவத்தில் ஞான சாதனைகளைப் பழகுவதற்கு இயலுமென்று நம்புகின்றீர்களா? அது தன்னைத் தானே ஏமாற்றி மோசம் செய்துகொள்வதாகும். உங்களையே நீங்கள் மோசம் செய்து கொள்ளாதீர்கள்.

---

## 7

## உலக வாழ்க்கையும் ஆத்மீய வாழ்க்கையும்

[பேலூர் மடத்தில் நடந்த சம்பாஷணை]

சுவாமிகள் :—மக்களிற் பெரும்பாலோர் அற்ப வியவகாரங்களில் தங்கள் வாழ்நாளை வீணாக்குகின்றனர். பிறகு, கிழப் பருவம் வந்ததும், உத்தியோகங்களில் இருக்கும் அநேகர் உபகாரச் சம்பளத்துடன் ஓய்வெடுத்துக்கொண்டு, தங்கள்

கடைசி நாட்களை ஏதாவதொரு க்ஷேத்திரத்தில் கழிக்கின்றனர். இப்படியாகப் பக்தியையும் முக்தியையும் சுலபமாக அடைந்து விடலாமென்று அவர்கள் நினைக்கின்றார்கள். தாங்கள் செய்த பாவங்களை யெல்லாம் க்ஷேத்திரங்களில் வசிப்பதால் போக்கிக் கொண்டு விடலாமென்றும் நம்புகிறார்கள். அவ்வாறு கருதுவது வெறும் பைத்தியமே யல்லவா? வேறென்னவாயிருக்க முடியும்? தீர்த்தங்களுக்கிருக்கும் பரிசுத்தப்படுத்தும் சக்தியில் உறுதியான நம்பிக்கை உள்ள ஒருவன், உண்மையில் அதிலிருந்து கொஞ்சம் ஆத்மீய ஊக்கத்தைப் பெறுவான் என்பதில் சந்தேகமில்லை. தீர்த்தங்கள் எப்பொழுதும் பரிசுத்தமும் தெய்விகத் தன்மையும் வாய்ந்தனவே. நல்ல சம்ஸ்காரங்கள் (நல்லியல்புகள்) உள்ளவர்கள் அவற்றால் ஏதோ ஓரளவு நன்மையைப் பெறுகின்றனர்; அவ்வளவுதான். அதைவிட அதிகமாக அவற்றிலிருந்து எதையும் எதிர்பார்க்க முடியாது. ஆனாலும், காசி க்ஷேத்திரம் மட்டும், இதற்கு ஒரு விலக்காகக் கருதப்பட வேண்டும். இக்காரணத்தினால் அநேகம் பேர் தங்கள் வாழ்வின் இறுதி நாட்களை அங்குக் கழிக்க ஆவலுள்ளவர்களாய் இருக்கின்றார்கள்; அந்தப் புண்ணிய நகரத்தில் இறந்தால், தாங்கள் முக்தியடைந்துவிடுவர் என்ற உறுதியான நம்பிக்கை உள்ளவர்களாய் இருக்கிறார்கள். காசியில் ஒருவன் இறந்தால், அவன் பிறப்பிறப்பாகிய சம்ஸாரத் தளையினின்றும் விடுதலை அடைகிறான் என்பது உண்மையே. விசுவநாதன் *ஜகத்துக் கெல்லாம் நாதனாய் இருக்கின்றார். அவருடைய செயல்கள் எல்லாம் அதிசயமாயும் அறிவுக் கெட்டாதனவாயும் இருக்கின்றன.

ஆயினும், துன்பத்திலும் துயரத்திலுமே வாழ்ந்திருந்து, பின்னால் முக்தியை அடைவது விரும்பத் தக்கதா? அவ்வாறின்றித் தற்கால வாழ்வையே ஞான சாதனையும் பக்தியுமாகிய ஆனந்த நிலையிற்கழித்து இன்புற்று, அதன்பிறகு எல்லையில்லாத நித்தியானந்த வீட்டினுள் முடிவாக நுழைந்து விடுவது அதை

---

*சிவபெருமானுடைய பெயர். காசி நகரில் இறப்பவர்கட்கு அவர் உயர்ந்த ஞானத்தைப் புகட்டி, மோக்ஷத்தை யளிக்கின்றார் என்பது பக்தர்களுடைய கோட்பாடு.

விட விவேகமுள்ள தல்லவா? பகவான் ஸ்ரீ ராமகிருஷ்ணர் சொல்லியிருப்பது போல, "நீ ஒரு வீட்டுக்குள் அதன் முன் வாயில் வழியாகப் பிரவேசிக்கலாம், அல்லது புழக்கடையின் வழியாகவும் நுழையலாம்." இவ்விரண்டில் எது நல்லது? முன் வாயில் வழியாகச் செல்ல இடமிருக்கும்போது, நாம் ஏன் புழக்கடை வழியாக நுழையவேண்டும்? இவ்விரண்டில் எது உங்களுக்குத் தகுந்தது என்பதை இப்போதே தீர்மானப்படுத்துங்கள்—நிமிஷ நேரத்துச் சுகத்தையா, அல்லது எல்லையற்ற ஆனந்தத்தையா; இம்மையில் உள்ள சுகபோகங்களையா, அல்லது யாண்டுமுள்ள நித்திய சாந்தியையா?

கருதற் பாலதோர் அரும்பெரும் விஷயமாவது கடவுட் கிருபை. இறைவனுடைய கிருபையாகிய இனிய காற்றானது எப்பொழுதும் வீசிக்கொண்டிருக்கிறது. உங்கள் கப்பலின் பாய்களை விரித்து விடுங்கள்; அப்போது அக்காற்று உங்களுக்கு உளதாகின்றது. பாய்களை நீங்கள் விரிக்காம லிருந்தால், அக்காற்றினால் நீங்கள் பயனுறுவது எப்படி? இப்பொழுதே பாய்களை விரித்து விடுங்கள்; இனிச் சற்றும் தாமதம் செய்யாதீர். உலக போகங்களின்மீதுள்ள ஆசைகளையும், பேர் புகழ் முதலியவற்றிலுள்ள மோகத்தையும்விட்டு இறைவனிடத்தில் முற்றிலும் சரணமடையுங்கள். உலக போகங்களை அனுபவித்துக்கொண்டே, அதே சமயத்தில் கடவுளையும் அறிவதென்பது சற்றும் இயலாத காரியம். கடவுளையும் போகப் பிசாசையும் ஒரே சமயத்தில் வழிபடுதல் உங்களால் இயலாது. கடவுளை அடையும் விருப்பம் உங்கட்கு இருந்தால், நீங்கள் உலக சுகங்களை விடவேண்டும். அதற்கு மாறாக, அநித்திய சுகங்களை அனுபவிக்க விரும்புவீர்களானால், கடவுளை விட்டுவிட வேண்டும். இரண்டு ஓடங்களில் கால்களை வைத்துக்கொள்ளாதீர்கள். அவ்விதம் வைத்துக்கொள்வீர்களானால், துன்பத்தையே அடைவீர்கள். உங்கள் வாழ்க்கையின் நோக்கம் இன்னதுதான் என்பதைத் தெளிவாக உணரவேண்டும். எந்த வாழ்க்கையை நடத்த விரும்புகிறீர்கள் என்பதை இப்பொழுதே தீர்மானம் செய்யுங்கள். அது க்ஷணமாத்திரமான அநித்திய சுகங்களைப் பற்றியதா, அல்லது அழிவில்லாத நித்தியானந்தத்தைப் பற்றியதா?

நீங்கள் சிறுவர்கள், குற்றமறியாத பரிசுத்த நெஞ்சத்தினர். உங்கள் உள்ளத்திலே உலகத் தன்மையாகிய பாசி இன்னும் படிந்துவிடவில்லை. இதுபோழ்தே முனைந்து உழைப்பீர்களானால், உலக வாழ்வின் சோதனைகள் கஷ்டங்கள் ஆகியவைகளினின்றும் தப்பித்துக்கொள்வீர்கள். உங்கள் கொள்கைகள் இன்னவைதாம் என்பதை இப்பொழுதே நிலவரப்படுத்துங்கள். அது இப்பொழுதே செய்யப்படாவிட்டால், பின் எப்பொழுதும் செய்யப்படமாட்டாது. மேற்புல் மேய்வது போன்று அரைகுறையாகக் காரியம் செய்வதால் அடையும் பயன் யாதும் இல்லை. உங்களது லக்ஷியத்தைக் கைப்பிடியுங்கள்; அதனை உறுதியாகப் பிடியுங்கள்; அப்பிடியை ஒருபொழுதும் நழுவ விடாதீர்கள். கடவுளையே தன் வாழ்க்கையின் சாரமும் முடிவுமாகக் கொண்டவன் எவனோ, விஷய போகங்களிலுள்ள விருப்பங்களையும் ஆசைகளையும் விட்டவன் எவனோ அப்படிப்பட்டவனுக்குக் கடவுள் சமீபத்தில் இருக்கின்றார். தன்னுடைய அன்பாகிய கயிற்றினால், அப்படிப்பட்ட ஒருவன், யசோதையும், கோபிகளும் கோபாலனைக் கட்டியது போலக் கடவுளைப் பிணித்துவிடுகிறான்.

“இறைவன் பொருட்டாக எவனொருவன் தன்னைத்தான் தியாகம் செய்துவிட்டானோ, அவனுக்கு இறைவனிடம் தடையில்லாத உறுதிபெற்ற உரிமை உண்டு,” என்று ஸ்ரீ ராமகிருஷ்ணர் சொல்வது வழக்கம். ஒரு குழந்தை தன்னுடைய பெற்றோரிடத்திலிருந்தோ அல்லது நெருங்கிய உற்றாரிடத்திலிருந்தோ தனக்கு வேண்டிய எதையும் பரிவுடன் எப்படிப் பிடிவாதம் செய்து கேட்கக்கூடுமோ, அதுபோல ஒரு பக்தன், கடவுளை, “ஐயனே, எனக்கு உன் காட்சியைக் கொடு; நீ கொடுக்க மாட்டாயா? கொடுத்தே ஆகவேண்டும்,” என்று இவ்வண்ணம் கேட்பதற்கு உரிமையுடையவனாவான். பக்தன் மனப்பூர்வமாகப் பிரார்த்தித்தால், கடவுள் இசையாதிருக்க முடியாது; அவர் விரைந்து வந்து பக்தனைத் தமது மடிமீது உட்கார வைத்துக் கொள்ளுகிறார். ஆ! அந்த இன்பந்தான் இப்படிப்பட்டதென்று வாயாற் சொல்லவும் முடியுமா? அந்த ஆனந்தந்தான் ஓர் எல்லைக்கடங்கியதா? அவ்வுயர்ந்த அனுபவத்தை எவர்

அடையப் பெற்றனரோ, அவரே அதனை அறிவர். அதனோடு ஒப்பு நோக்கும்போது, மக்களிற் பெரும்பாலோர்க்குப் பிரியமாயிருக்கும் இவ்வுலக இன்பங்கள் சாரமற்றவையாயும் பிரயோஜனமற்றவையாயும் ஆய்விடுகின்றன.

"இறைவன் பொருட்டாகச் சரீர சுகங்களையெல்லாம் விட்டுவிட்டவன் தன்னுடைய பிரயாணத்தில் முக்காற் பங்கை முடித்துவிட்டான்," என்று ஸ்ரீ ராமகிருஷ்ணர் சொல்வது வழக்கம். எல்லாச் சுகங்களையும் விட்டுவிடுவதென்பது சுலபமான காரியமா? யார் ஒருவன் கடவுளுடைய கிருபையைப் பெற்றிருக்கிறானோ, பூர்வ ஜன்மங்களில் தீவிரமாகத் தவம் செய்திருக்கிறானோ அவன் மாத்திரமே அப்படிப்பட்ட துறவுக்கு உரிய வலிமையைப் பெறக் கூடியவனாவான். உங்கள் மனத்தைத் தீய எண்ணங்கள் அங்கே தலைகாட்ட முடியாதபடி பரிசுத்தம் செய்யுங்கள்.

நீங்கள் எல்லாரும் பிரம்மசாரிகள். விவாகம் செய்து கொள்ளப் போவதில்லை. சுகங்களையும், போகங்களையும், மற்றனைத்தையும் இறைவன் பொருட்டாக விட்டுவிட்டு, உங்கள் வாழ்க்கையை அவனிடத்து ஒப்படைத்து விட்டீர்கள். ஆனால், பரிசுத்தமான மலினமற்ற வாழ்க்கையை நடத்துவது மிகவும் கடினமானது என்பதை மனத்தில் வையுங்கள். அது இளைஞராகிய நீங்கள் கருதுவது போன்று அவ்வளவு எளியதன்று. அது எப்படிப்பட்டதென்று உங்களுக்குத் தெரியுமா? உருவிய வாளின் கூர்நுனிமேல் நடப்பதை ஒக்கும். ஒவ்வொரு க்ஷணத்திலும் வீழ்ச்சி அடையக்கூடிய, துண்டுகளாய் வெட்டுப்படக் கூடிய ஆபத்து அதில் உண்டு. வழுவாத பிரம்மசரியமே இந்த வாழ்க்கையின் வெற்றிக்குரிய நிபந்தனையாகும். கடவுளிடத்தில் பக்தியும் சிரத்தையும் இல்லாவிட்டால், பூரணமான பரிசுத்தத் தன்மையைப் பழகுதல் கடினமாகும்; ஏன், முடியாதென்றே சொல்ல வேண்டும். ஆசையும் போகமும் நிறைந்துள்ள இவ்வுலகத்திலே நீங்கள் வசிக்க வேண்டும்; நூற்றுக்குத் தொண்ணூற்றொன்பது பேர் விஷய போகங்களிலேயே பித்துப் பிடித்து அலைவதைக் காணுவீர்கள். எனவே, தீய எண்ணங்களால் உங்கள் மனமானது மலினமடையக் கூடிய ஆபத்து

எப்போதும் உண்டு. அப்படி உங்கள் மனம் அவற்றால் மலினப் பட்டு விட்டால், உங்களுக்கு விமோசனம் இல்லை.

பிரம்மசரிய வாழ்க்கையைக் கைக் கொள்ள விரும்புவோர் நல்ல நூல்களைப் படிப்பதும், உயர்ந்த விஷயங்களைப் பற்றியே விசாரணை செய்வதும் ஆகிய நல்ல எண்ணங்களிலேயே தங்கள் மனத்தை எப்போதும் ஈடுபடுத்த வேண்டும். அவர்கள் இறைவனை வழிபடுவதிலும், பக்தர்களுக்குத் தொண்டு புரிவதிலும், சாது சங்கத்திலும், தியானம் முதலான ஞான சாதனைகளிலுமே தங்கள் காலத்தைக் கழிக்கவேண்டும். ஒழுக்கத்தை உருப் படுத்துவதற்கு இஃது ஒன்றே உரிய வழி.

முதலாக பிரம்மசரிய ஒழுக்கத்தில் உறுதியாக நில்லுங்கள், மற்ற யாவும் தாமே வரும். ஞான சாதனைகளைப் பழகாமல், பூரண பிரம்மசரியத்தைப் பெற முடியாது. பூரணமான பிரம்ம சரியம் இல்லாமற்போனால், இறைவனைக் காணுதல் இயலாது. இறைவனைக் காணாமல், உண்மையான ஆனந்தத்தை அடைய முடியாது. உண்மையான ஆனந்தம் இல்லையெனில், மனித வாழ்க்கையை வீணிலே கழித்ததாகும். நீங்கள் எல்லாரும் இளைஞர்கள்; தூய மனமும் உயர்ந்த நோக்கமும் கொண்டவர் கள். எனதன்பார்ந்த குழந்தைகாள், நான் உங்களை வேண்டிக் கொள்வது இதுதான். ஒரு சிறிது சாதனை செய்யுங்கள். அது சிரத்தையையும் பக்தியையும் எவ்வாறு உங்கள் உள்ளே எழுப்பி விடும் என்பதை நீங்கள் அப்போது காண்பீர்கள். அழிவில்லா ஆனந்தத்திற்கு உரிமைபெற்ற புதல்வர்களாவீர்கள்; உங்கள் இஷ்ட தெய்வத்தின், எல்லாம் வல்ல இறைவனின், காட்சியைக் காணும் அருளைப் பெற்றவர்களாவீர்கள். அப்போது மனித வாழ்க்கையின் முடிவான இலக்ஷியத்தை நீங்கள் அடைவீர்கள்.

---

## 8

# சரணாகதியால் கடவுளை அடைதல்

[பேலூர் மடத்தில் நடந்த சம்பாஷணை]

சுவாமிகள் :—கற்புடைய மனைவி கணவனிடம் வைக்கும் அன்பு, ஒரு லௌகிகன் உலகத்தினிடம் வைக்கும் ஆசை, ஒரு லோபி சேமித்துவைத்திருக்கும் தன்னுடைய பொருளின்மீது வைக்கும் பற்று—ஆகிய இவை மூன்றும் ஒன்றாற் போன்ற அவ்வளவு தீவிரமான பக்தி யுள்ளவனே கடவுளை அடையமுடியும் என்று ஸ்ரீராமகிருஷ்ணர் கூறுவது வழக்கம். இத்தகைய தீவிரமான அன்பிருந்தால் ஒருவன் கடவுளை அடைதல் நிச்சயம் கூடும். இதன் கருத்து யாது என்பது உங்களுக்குத் தெரியுமா? எந்த க்ஷணத்தில். ஒருவனுடைய மனம் எல்லா ஆசைகளையும் நீக்கப்பெற்று, கடவுளை அடையவேண்டும் என்ற உண்மையான அருள் தாகம் ஒன்றே நிறையப் பெறுகின்றதோ, அந்த க்ஷணமே அவன் கடவுளை அடைந்து அவருடைய காட்சியையும் ஆத்மஞான அனுபவத்தையும் பெறுவான்.

**सर्वं धर्मान् परित्यज्य मामेकं शरणं व्रज ।**

"சர்வ தர்மங்களையும் தியாகம் செய்துவிட்டு என்னையே சரணமாக அடை" என்று பகவான் கீதையில் கூறுகிறார். சரணாகதி, சரணாகதி, சரணாகதி—இது ஒன்றே வழி; வேறொன்றில்லை. இந்தக் கலியுகத்தில் மனிதனுக்கு வயிற்றுப் பாடுதான் பெரிய பாடு. அத்துடன் ஆயுளும் அற்ப ஆயுள். இவ்வற்ப வாழ்நாளில் அவன் செய்யவேண்டிய காரியங்களோ அநேகம். எனவே கடவுளைத் தரிசித்தற்கு அவசியமான சக்தி, பலம், தியாகம், தைரியம், விரதம் முதலியன அவனிடம் இல்லை. அவன் மனமானது பலவீனமா யிருக்கிறது; அதனால் இயல்பாகவே போகங்களை நாடி ஓடுகின்றது. ஆனால், நிலைமை இவ்வாறெல்லாம் இருந்தபோதிலும், நாம் கடவுளை அறியவே வேண்டும்.

கடவுள் தரிசனம் இல்லையென்றால், வாழ்வு வியர்த்தமான வாழ்வா கின்றது; ஒருவன் உலகத்திலே பிறந்தும், மதித்தற்குரிய தான காரியம் எதையும் சாதிக்காமலேயே இறந்துவிடுகிறான். அது சரியன்று. மனிதன் கடவுளைக் காணுதல் வேண்டும். அதற்குச் சரணாகதியைவிட எளிதான மார்க்கம் வேறொன் றில்லை.

சரணாகதி என்றால், நாம் தெரிந்துகொள்வது என்ன? ஒன் றுமே நாம் செய்யவேண்டியதில்லை, சும்மா உட்கார்ந்திருக்க வேண்டியதுதான் என்பது அதன் பொருளா? இல்லை, அது வன்று அதனுடைய கருத்து. பக்தன் பரிசுத்த உள்ளத்துடன் இடைவிடாது இம்மாதிரியாகப் பிரார்த்திக்க வேண்டும்:— "ஆண்டவனே, எனக்கு நன்மையானது எது, தீமையானது எது என்பதை நான் அறியேன். முற்றிலும் உன்னையே அண்டி யிருக்கின்றேன். என்னுடைய ஆத்மீய வாழ்க்கைக்குத் தேவை யான அனைத்தையும் நீயே கொடுத்தருள்வாயாக. மேன்மை யான நன்மையை அளிக்கவல்ல மார்க்கத்திலேயே என்னை அழைத்துச் செல்க. இடையறாது உன்னை நினைந்திருப்பதற் கும் உன்னையே தியானிப்பதற்கும் தகுந்ததான சிரத்தையையும் வலிமையையும் தந்தருளுக."

சரணாகதி அடைதல் என்பது, அதாவது ஒருவன் இறைவ னிடம் மனப்பூர்வமாக முற்றிலும் தன்னை ஒப்படைத்து விடுதல், உண்மையில் அவ்வளவு எளிதான காரியமன்று. அநேகம் பேர், "என்னையும் என் பொருள் அனைத்தையும் நான் இறைவனிடம் ஒப்படைத்துவிட்டேன்; அவன் ஆட்டிவைப்பது போலவே நான் ஆடுகிறேன்", என்று வாயினால் சொல்லுகின்றார்கள். ஆனால், அவர்களுடைய வாழ்க்கையைக் கவனித்துப் பார்த்தால், அவர்கள் சொல்லுவதற்கு நேர் விரோதமாகவே அவர்க ளுடைய காரியங்க ளெல்லாம் இருக்கின்றன என்பதைக் காண் போம். ஏதேனும் ஒரு நற்காரியத்தைச் செய்துவிட்டார்க ளானால், அதன் பெருமையைத் தாங்களே மேற்கொள்ளுகிறார் கள்; அதைக் குறித்து மிகவும் களிகூர்கிறார்கள். "ஓ! எவ்வளவு பெரிய காரியத்தை நான் செய்துவிட்டேன்," என்று நினைக் கிறார்கள். ஆனால், ஏதோ ஓர் அற்பமான துன்பம் அவர்க

ளுக்கு வருமாயின் உடனே, "ஆ, எவ்வளவு பெரிய துன்பத்தைக் கடவுள் எனக்குக் கொடுத்து வருத்துகின்றார்!" என்று கூறிக் கடவுள் மீது குற்றஞ் சாட்டுகிறார்கள். இப்படித்தான் அநேகமாய் எல்லோரும் வாழ்நாளைக் கழிக்கின்றனர்.

நாம் மாந்தரை அவர்களுடைய வெளிச் செயல்களைக் கொண்டு மதிப்பிடுகிறோம்; ஆனால், கடவுளோ அவர்களுடைய உள்ளத்தினுள்ளே ஆராய்கின்றார். எவனொருவன் உண்மையான உள்ளத்தோடு பிரார்த்திக்கின்றானோ அவனிடம் கடவுள் ஓடி வருகின்றார். இஃது உண்மையென்று அறியுங்கள். உள்ளத்தில் தூய்மை உள்ளவர்களாய் இருங்கள். உங்கள் வாய்ச் சொல் வேறாகவும் மனம் வேறாகவும் இல்லாதிருக்கட்டும். உங்களுடைய மதிப்புக்குத் தக்கபடியே கடவுளும் வெகுமதி யளிப்பார்.

"யான் செய்திருக்கும் ஞான சாதனையில் ஒரு வீசம் பங்கு நீங்கள் செய்வீர்களானால் போதும்," என்று ஸ்ரீ ராமகிருஷ்ணர் சொல்வது வழக்கம். நாம் செய்ய வேண்டிய சாதனையை அவர் அவ்வளவு எளிதாக்கிவிட்டார். நாமோ இவ்வளவு சோம்பலாய் இருக்கின்றோம்; நமது கடமையினின்றும் விலகி நமது கருமத்தைச் செய்யா தொழிகின்றோம்; இப்படிச் செய்வதால் நம்மையே நாம் ஏமாற்றிக் கொள்கிறோம். யாரேனும் ஒருவர் நமக்கு நல்ல தின்பண்டங்களைக் கொடுத்தால், அவற்றை நம்முடைய வாயில் கொண்டுவந்து வைக்கவேண்டும் என்று விரும்புகிறோம். ஞானோபதேசம் செய்யும்படி அநேகம் பேர் என்னை வேண்டுகிறார்கள். அவர்களுடைய வார்த்தைகளைக் கேட்கும் போது என்னால் சிரிக்காமல் இருக்க முடியவில்லை. நான் என்ன செய்யச் சொல்லுகிறேனோ அதனை அவர்கள் செய்வதில்லை. என் முன்னிலையை விட்டு அப்புறம் போனவுடனே தங்களுக்கு இஷ்டமானது எதுவோ அதனையே அவர்கள் செய்கிறார்கள். அவர்களில் யாரேனும் ஒருவனை, யான் சொன்னபடி நடக்கின்றானோ என்று கேட்டால், அவன் உடனே, "இல்லை ஐயனே, அதைச் செய்வதற்கு எனக்கு நேரங் கிடைக்கவில்லை," என்றோ, அல்லது, "நான் தீமை நிறைந்த மனமுடையவனாயும் சக்தியற்றவனாயும் இருத்தலினாலே, அதைச் செய்ய என்னால்

இயலவில்லை,” என்றே சொல்வான். என் சொற்படி நடக்க உண்மையான இச்சையில்லாதவர்களும், என்னிடம் நம்பிக்கையில்லாதவர்களும், என்னை வந்து கேட்காமலேயே, அவர்கள் இஷ்டப்படியே எதையும் செய்யலாமன்றோ? என் சொற்படி நடக்கமாட்டார்கள்; ஆனாலும் என்னிடம் ஞானோபதேசம் பெறுவதற்கு மட்டும் விரும்புகிறார்கள். அப்படிப்பட்ட மக்கள் என்னிடம் வரும்போது, நானும் ஏதேதோ விஷயங்களையும் வேடிக்கை விநோதங்களையும் பற்றிப் பேசிக் காலத்தைப் போக்கிவிடுகிறேன். ஞான சாதனைகளைப்பற்றி, அவற்றைக் கடைப்பிடித்து ஒழுகாத மக்களிடம் பேசிப் பேசி யான் அலுத்துப்போவதால் பயன் உண்டோ? யார் என்னுடைய சொற்களைக் கேட்டு, அவற்றின்படி நடப்பார்களென்று நான் கருதுகின்றேனோ அப்படிப்பட்ட மிகக் குறைவான ஒரு சிலரிடமே நான் உயர்ந்த ஞான விஷயங்களைப்பற்றிப் பேசுகிறேன். அப்படியிருந்தும், நான் சொல்வது போல அவர்கள் முற்றிலும் ஒழுங்காகச் செய்வதில்லை. எப்போதும் தங்கள் கடமையினின்றும் வழுவியே பழக்கமுற்றிருப்பதால், அவர்கள் எவ்வித உழைப்பும் இல்லாமலேயே எல்லாவற்றையும் பெற விரும்புகிறார்கள்.

கடவுளின் கிருபைக்கு எப்பொழுதும் பஞ்சமென்பதில்லை. பின் இடையூறுதான் யாது என்றால், மாந்தர் அதனைப் பயன்படுத்திக்கொள்ள முயலுவதில்லை என்பதே. சோம்பலான வீண் பேச்சிலேயே அவர்கள் சந்தோஷப்படுகின்றனர். எல்லாவற்றிற்கும் மேலான உண்மைப் பொருளை உணர ஒருவருக்கும் விருப்பம் இல்லை. மனிதன் அறிவற்ற பேச்சிலேயே, அதாவது, தனது வாழ்நாளை எவ்வாறு கழிக்கின்றான் என்பதைப்பற்றிப் பேசுவதிலேயே அவன் இறுமாப்புக் கொள்ளுகின்றான். அவன் எதை விதைக்கின்றானோ அதையே அறுக்கின்றான். “ஆயிரக் கணக்கான ஆசாரியர்கள் கிடைப்பார்கள்; ஆனால் உண்மையான சிஷ்யன் ஒருவன் கிடைப்பது அருமை.” ஆசாரியர்களாகத் தங்களை ஆக்கிக் கொள்பவர் அநேகர் இருக்கின்றனர்; ஆனால் அவர்களுடைய உபதேசங்களைக் கேட்போரும் அவற்றின்படி நடப்போரும் எங்கேயுளர்? குரு வாக்கியத்தில் உறுதியான

நம்பிக்கை கொண்டு உயரிய வாழ்க்கைக்காக ஒருவன் உழைத்துக் கொண்டே போவானாயின், அப்பொழுது அவனுடைய துன்பங்களுக்கெல்லாம் முடிவு ஏற்பட்டு விடுகின்றது. அப்படிப்பட்ட நம்பிக்கை எவனிடம் இருக்கின்றதோ அவன் சஞ்சலப்பட்ட மனத்துடன் அங்குமிங்கும் ஓடி அலையவேண்டியதில்லை. அவனுடைய தேவைகளையெல்லாம் இறைவனே கவனித்துக் கொள்கிறான். ஈசுவரனே அவனுடைய கையைப் பிடித்துச் சரியான மார்க்கத்திலே அவனை அழைத்துச் செல்லுகிறான். கடவுளருளைப் பெற்றவனுக்குக் கவலை எதுவும் வேண்டுவதில்லை.

லக்ஷத்தில் ஒருவன்தான் தெய்வ சிந்தனையையும் உத்தமமான ஆசைகளையும் மனத்திற் கொள்ளக்கொடுத்துவைத்திருக்கின்றான். அத்தகைய பாக்கியம் பெற்ற ஜீவர்களிலும் வெகு சிலரே கடைசி வரையில் தங்களுடைய இலக்ஷியங்களில் நிலை பெற்றிருக்கக் கூடும். யாருடைய உள்ளத்திலே நல்ல எண்ணங்கள் ஏற்கெனவே உண்டாயிருக்கின்றனவோ அவர்கள் தங்களாற் கூடியவரையிலே அவற்றைப் பலப்படும்படியும் நிலை பெறும்படியும் செய்துகொள்ள வேண்டும். தங்கள்பால் உள்ள ஆர்வமானது குறைந்து போகாவண்ணம் நிலைபெறச் செய்தற் பொருட்டு இறைவனை அவர்கள் இடையீடின்றி, "ஆண்டவனே, அடியேனுக்கு உமது கிருபையைத் தந்தருளுவீராக; எப்போதும் அக் கிருபை என்பால் நிலைத்திருக்கும்படி அருளுக," என்று பிரார்த்திக்க வேண்டும். "ஒரு வீட்டில் வேலை செய்யும் வேலைக்காரி ஒருத்தி தனது எஜமானுடைய பொருள்களனைத்தையும் தன் பொருளைப் போலவே பார்த்துப் பராமரிப்பதுபோன்று காணப்படுகின்றாள்; ஆனால் அவளது உள்ளத்தினுள்ளே அப்பொருள்கள்யாவும் தன்னுடையனஅல்லஎன்பதை அறிவாள்," என்று ஸ்ரீ ராமகிருஷ்ணர் சொல்வது வழக்கம். அவ்வாறே, நாம் இவ்வுலகத்தில் வாழுமளவும் பற்றில்லாது கருமங்களைச் செய்துவர வேண்டும். நமது உள்ளத்தினுள்ளே, இந்த உலகமானது நம்முடைய சாசுவதமான வீடன்று, இது தாற்காலிகமாக ஏற்பட்ட வீடுதான் என்று அறிதல் வேண்டும். நாம் எங்கிருந்து வந்தோமோ அந்தப் பரமபத வீடாகிய கடவுளினிடத்தே நம் மனத்தைச் செலுத்த வேண்டும்.

மெய்ப்பொருளைப் பற்றியோ, ஈசுவரனைப் பற்றியோ கவலை கொள்பவர் எத்தனை பேர்? கர்வம் தலைக்கேறி, அதனால் மனிதன், கடவுள் ஒருவர் உளர் என்பதையே மறுத்துப் பேசுவதான அவ்வளவு உயர்ந்த ஸ்தானத்தில் சில வேளைகளில் ஏறி விடுகின்றான். ஒவ்வொருவனும் தன்னுடைய வாக்கே பிழைபடாத வேதவாக்கென்றும், தன்னுடைய வழியே கடைத்தேறும் வழியென்றும் நினைக்கின்றான். அப்படிப்பட்ட ஒருவன் என்ன சொல்லுகிறான் என்பது உங்களுக்குத் தெரியுமா? "எங்கள் அறிவுக்கு உட்படாத ஒன்றை நாங்கள் ஒப்புக்கொள்வதில்லை," என்று அவன் கூறுகிறான். அவனுடைய அறிவு எவ்வளவு சிறுமையுடையது என்பதை அவன் நினைப்பதில்லை! இன்றைக்கு எதைச் சரியென்று நினைக்கின்றானோ அதையே நாளைய தினம் தப்பென்று விட்டுவிடுகிறான். இவ்வாறாக அவனுடைய கொள்கையானது நாளுக்கு நாள் மாறுகிறது. தன்னுடைய அறிவையே விளம்பரப்படுத்தும் வகையால், எது உயர்ந்ததும் மேலானதுமான பொருளோ அதனை அவன் சிறிதும் சட்டை செய்யாதவனா யிருக்கிறான். இவ்விதமாக எத்தனை வழிகளாலே மனிதனானவன் மாயைக்கு உட்படுகிறான் என்பதை இறைவியாகிய அப் பராசக்தியே அறிவாள்.

ஒவ்வொரு மனிதனும் தன் புல்லறிவுக்குத் தக்கபடியே கடவுள் இப்படிப்பட்டவர் என்று எண்ணிக்கொள்ளுகிறான். ஆனால், கடவுளைப் பற்றிய நம் கருத்தோ அம்மாதிரி வரம்புக் கடங்கியதாய் இருத்தல் கூடாது. ஏனென்றால், கடவுள் தம்முள்ளே எல்லாம் அடங்கப்பெற்றவராய் இருக்கின்றார். அவரே எல்லாமாயும் இருக்கின்றார். மனத்தாலும் புத்தியாலும் அவர் அறியப்படாதவர். எவனொருவனுக்கு கடவுள் தாமே தமது இரகசியங்களை யெல்லாம் காட்டியருளுகின்றாரோ அவன் மாத்திரமே அவருடைய இயல்பை அறியமுடியும். கடவுளை யறியும்போது ஞான வாயில்கள் எல்லாம் திறக்கப்படுகின்றன; ஹிருதயக் கிரந்திகள் (உள்ளத்தின் முடிச்சுகள் அல்லது கட்டுகள்) அறுத்தெறியப் படுகின்றன; வரம்பில்லாத ஞானம் அடையப்படுகின்றது. இந்த நிலையை மனிதன் அடையும்போதுதான் அவன் தனக்கும் கடவுளுக்கும் உள்ள சம்பந்தத்தை, அதாவது கடவுள் அவனுக்குச் சொந்தமானவர், அவன் கடவுளுக்குச்

சொந்தமானவன் என்பதை முற்றிலும் அறிந்துகொள்ள முடியும்.

ஜகன் மாதாவாகிய அன்னை அறிவித்தாலல்லது மனிதன் எத்தகைய ஞானத்தையும் பெறுதல் இயலாது. மகா மாயையாகிய அவள் தன்னுடைய கிருபையினாலே காட்டும் போது தான், இம்மை மறுமையாகிய இவ்விரண்டினுடைய இரகசியங்களை மனிதன் அறியமுடியும். சாதாரணமாக அறிவு என்று சொல்லப்படுவது உண்மையான அறிவன்று. அதனுடைய அரசு, அதனுடைய எல்லை, மிகமிக அளவுக்கு உட்பட்டன. இந்த ஜன்மத்திலேயே உண்மையான ஆனந்தத்தை அடைய விரும்புபவர்கள், வாழ்க்கையின் சிக்கல்களான இப்பிரச்னைகளைத் தீர்த்துக்கொள்ளும் விருப்ப முடையவர்கள்,—"நான் யார்? இங்கு எதற்காக வந்துள்ளேன்? இத்தனைத் துன்பங்களால் நான் கஷ்டப்படுவது ஏன்? ஒரு மனிதன் தெய்வத் தன்மையை அடைவதும், வேறொருவன் கேவலம் ஒரு மிருகமாகவே இருப்பதும் எதனால்?" என்ற இவை போன்ற கேள்விகளுக்கு விடையைத் தெரிந்துகொள்ள விரும்புபவர்கள் செய்யவேண்டிய கடமை ஒன்றே ஒன்று. அதாவது கூடுமான எல்லா வழிகளினாலும் கடவுளை அறிய முயற்சி செய்தலேயாம். அவனை அறிந்த அந்த க்ஷணமே வாழ்க்கையி னுடைய சிக்கல்களான பிரச்னைகள் எல்லாம் தீர்க்கப்பட்டுவிடும்.

குழந்தைகள் தூணைப் பிடித்துக்கொண்டு சுற்றி வருவதில் இன்பமடைகின்றன. அப்போது அவர்களுடைய கவனம் எதில் நிலைத்திருக்கிறது தெரியுமா? தூணிலேதான்; தங்கள் பிடியைக் கொஞ்சம் தளர்த்திவிட்டால், அவர்கள் கீழே விழுந்து காயமடைவார்கள் என்பது அக்குழந்தைகளுக்கு நன்றாய்த் தெரியும். ஆகையால் வாழ்க்கைத் தூணாய் இருப்பது எதுவோ அதனை முதலில் உறுதியாகப் பற்றிக் கொள்ளுங்கள்; அதன் பிறகு எத்தனை தடவை வேண்டுமானாலும் அதனைச் சுற்றிச் சுற்றி வரலாம்; கீழே விழுந்து விடுவோம் என்ற பயம் அப்போது இல்லை. வாழ்க்கையினுடைய முதன்மையும் முக்கியமுமான கடமை,கடவுளை அறிவதேயாகும். அவன்தான் தூண் என்பதைஅறியுங்கள். நீங்கள் எதைச் செய்தாலும், அவனைப் பற்றிக்

கொண்டு செய்யுங்கள்; அப்போது நீங்கள் எவ்விதமான தப்பு வழியிலும் சென்று விழுந்துவிட மாட்டீர்கள்; நீங்கள் செய்வது எதுவாயினும், அது சரியானதாகவும் உங்களுடையவும் உலகத்தினுடையவும் நன்மைக் கானதாகவுமே இருக்கும்; இப்பூவுலகில் உங்கள் வாழ்வானது அருள் நிறைந்ததாக அமையும்.

---

# 9

## கடவுள் கிருபை

[பேலூர் மடத்தில் நடந்த சம்பாஷணை]

சுவாமிகள் :—ஈசுவரனுடைய திருநாமம் உடல், உள்ளம் ஆகிய இரண்டையும் பரிசுத்தப்படுத்துகிறது. "ஈசுவர நாமத்தை நான் கைக்கொண்டுள்ளேன்; எதற்காக நான் அஞ்சுதல் வேண்டும்? என்னைக் கட்டுப்படுத்தக் கூடியது இவ்வுலகில் யாது உளது? கடவுள் பெயரைக் கைக்கொண்டதனாலே யான் அழியாத் தன்மையை அடைந்துவிட்டேன்"—என்ற இத்தகைய அதிதீவிர நம்பிக்கையுடன் ஒருவன் ஞான சாதனைகளைப் பழக வேண்டும்.

ஞான சாதனைகளைப் பயிலுவதன் நோக்கம் என்ன? அது கடவுளை அறிதல், கடவுள் கிருபையைப் பெறுதல் என்பதேயாம். சாதனைகள் எல்லாம் உள்ளத்திற் காமத்தாலும் வேறு ஆசையினாலும் ஏற்பட்ட அழுக்கைத் துடைப்பதற்கேயாம். இதைச் செய்தாலொழிய நீங்கள் எவ்வளவுதான் அதிகமாக முயன்றாலும் உங்கள் நோக்கத்தைப் பெற முடியாது.

உங்கள் உள்ளத்தைப் பரிசுத்தம்செய்தாலொழிய, நீங்கள் கடவுள் கிருபையைப் பெறவோ அல்லது அவனை அறியவோ முடியாது. எண்ணில்லாத பிறவிகளின் மூலம் அழுக்குகள் அதிற் சேர்ந்திருக்கின்றன. அவை நீக்கப்படவேண்டும். ஸ்ரீ ராமகிருஷ்ணர் அழகியதோர் உதாரணத்தை எடுத்துக் காட்டுவது

வழக்கம். "ஊசியானது எதுவரையில் மண்ணால் மூடப்பட்டிருக்கிறதோ அதுவரையில் அது காந்தத்தால் இழுக்கப்படுவதில்லை. ஆனால் மண்ணானது கழுவப்பட்டவுடனே அவ்வூசி தன்னியற்கையாகவே காந்தத்தினிடம் இழுக்கப்படுகிறது." அதுபோலவே ஒருவன் கடவுளை நினைந்து அவனைத் தியானம் செய்தால் மனத்திலுள்ள மாசு கழுவப்படுகின்றது. "ஈசா! என்னை மன்னிக்கவேண்டும். இனிமேல் யான் குற்றம் செய்ய மாட்டேன்," என்று கூறி ஒருவன் தன்னுடைய குற்றங்களுக்காக வருந்தி இறைவனிடம் முறையிடக்கூடுமானால், மனமானது பரிசுத்தமடையும்; அடைந்த அந்த க்ஷணமே கடவுளாகிய காந்தம் மனமாகிய ஊசியைத் தன்னிடம் இழுத்துக்கொள்கிறது. மனம் பரிசுத்தமடைவது எந்த க்ஷணமோ அந்த க்ஷணத்திலேயே கடவுள் கிருபையானது பொழிகின்றது. அதன் பிறகு ஈசுவர தரிசனம் தானே இயல்பாய் நிகழ்வதாகின்றது.

கடவுள் ஞான சூரியன். காண விரும்புவார்க்கு அவன் தானே தனது மகிமையைக் காட்டினாலொழிய அவனைக் காணுதல் இயலாது. உண்மையில், ஒரு மனிதன் எவ்வளவு காலம் உலக போகங்களில் ஆசை வைத்திருக்கிறானோ அதுகாறும் ஞானத்தையாவது ஈசுவர தரிசனத்தையாவது அடையவேண்டுமென்ற உண்மைக் காதல் அவனிடம் உண்டாக மாட்டாது. குழந்தைகள் விளையாடுவதற்குப் பொம்மைகளோ அல்லது உண்ணுவதற்குத் தின்பண்டங்களோ கிடைத்தால் தங்களையே மறந்துவிடுகின்றன. ஆனால் கொஞ்ச நேரத்தில் அப் பொம்மைகளினிடம் அவற்றிற்கிருந்த வசீகரம் எல்லாம் நீங்கிப்போகின்றது; அக் குழந்தைகள் தாயிடம் போக விரும்புகின்றன. மனிதனுடைய தன்மையும் இத்தகையதே தான். உலக போகங்கள் சப்பிட்டுப் போனபிறகே மாந்தர் கடவுளை அடைய ஆவல் கொள்ளுகின்றனர். அப்போது கடவுளைக் காணவேண்டும் என்னும் எண்ணம் அவர்களுடைய மனத்தில் முதன்மையாக நிற்கத் தலைப்படுகின்றது. கடவுளைப்பற்றி மற்றவர்கள் சொல்லக் கூடியவற்றைக் கேட்பதற்கு ஆவல் உடையவர்களாய் இருக்கிறார்கள். தங்களுடைய வாழ்க்கையிலேயே அவனை அறிவதன்பொருட்டு அவர்கள் முயலுகின்றார்கள்.

உத்தமமான ஆசைகள் மனத்தினிடத்து எளிதில் எழுவதில்லை. இதனை உண்மையென அறிவீர்களாக. யாரிடம் அவை எழுகின்றனவோ அவர்களிடம் கடவுளுடைய விசேஷ கிருபையினாலேயே அவை எழுகின்றன. இந்த மாய உலகில் எண்ணிறந்த இடிகளைப் பெற்றுச் சொல்லற்கரிய துன்பங்களை அனுபவிக்கின்றனர். அப்படியிருந்தும் தங்களுடைய போக்கை மாற்றிக்கொள்ள அவர்கள் விரும்புவதில்லை. மிகவும் ஆச்சரியப் படும்படியாக, இடிக்குப் பின் இடிபடுதற்பொருட்டே திரும்பத் திரும்ப அதே இடத்துக்கு அவர்கள் செல்லுகின்றனர். யாரேனும் ஒருவர் அவர்கட்கு நற்புத்தி புகட்டினால், அப்படிப்பட்டவரிடம் அவர்கள் வெறுப்படைகின்றனர்.

நெருப்பில் கை வைத்தால் அது சுட்டுவிடுமென்பதை மக்கள் நன்றாக அறிவர். ஆனாலும் திரும்பத் திரும்ப அவர்கள் அதையே செய்கின்றார்கள். அது மாத்திரமல்ல. அப்படியே செய்ய மற்றவர்களையும் அழைக்கின்றனர். எந்த மனிதனாவது அவர்களுக்கு மாறாகச் சென்றால் அவனைப் பைத்தியக்காரன் என்கிறார்கள்; அவனைத் துன்புறுத்தவும் துணிந்து விடுகிறார்கள்.

சமய நெறியைக் கைக்கொள்ள, ஒரு சந்யாஸியினுடைய வாழ்வைக் கடைப்பிடிக்க, ஓர் இளைஞன் விரும்புவதாக வைத்துக் கொள்ளுங்கள். அவனுடைய மார்க்கத்தில் அவனது பெற்றோரும் தங்களால் ஆனவரையில் இடையூறுகள் உண்டாக்குவதைப் பார்க்கின்றீர்களன்றோ? ஆனால் ஒருவன் தீ நெறியிற் சென்று தீய வாழ்வு நடத்தித் தனக்கும் தன் தேசத்திற்குமே கொடுமை விளைவிப்பவனாக இருந்தால் அவனைத் திருப்பிக் கொண்டு வருவதற்கு எள்ளளவும் அவர்கள் முயல்வதில்லை. எல்லா ஆக்ஷேபங்களும் ஒரு பையன் நன்னெறியில் வாழ விரும்பும்போது தான் ஏற்படுகின்றன. மக்கள் தங்களால் கூடியவரையில் அவனைக் கீழிழுத்துத் தங்களுடைய நிலைமைக்குக் கொண்டுவர முயல்கின்றனர்.

ஒரு சந்யாஸியினுடைய தகப்பனார் ஒரு சமயம் தம்முடைய சொந்த மகனைக் குறித்து என்ன சொன்னாரென்பது உங்களுக்குத் தெரியுமா? "சந்யாஸியாவதற்குப் பதிலாக அவன் செத்துப் போயிருந்தால் நான் மிகச் சந்தோஷப்பட்டிருப்பேன்.

சாவை மீறுவதற்கோ முடியாது; ஒருவன் அதற்கு உட்பட்டே ஆகவேண்டும். ஆனால் எனக்குரியவனான என் மகன் மற்றவர் கையில் (சாதுக்கள் கூட்டத்தில்) சேருவதைக் காண என்னால் சகிக்கமுடியவில்லை," என்று அவர் சொன்னார். இதுதான் உலகம் எனப்படுவது; அது அவ்வளவு சுயநலம் நிறைந்தது!

சுயநலம் பாதிக்கப்படுமானால் மாந்தர் அந்த க்ஷணமே கோபத்தில் மூழ்கிவிடுகின்றனர். ஒரு மனிதன் ஓர் உண்மைச் சந்யாஸியாக இருக்கக்கூடுமானால், அவன் தனக்கு நன்மை விளைவித்துக் கொள்வதே யன்றித் தன் னருகேயுள்ள மற்றவர்களுடைய ஞான முன்னேற்றத்துக்கும் வழி கோலுபவனாகிறான் என்பதை அறிந்துகொள்ளும் உணர்வு உலகத்தவர்களிடம் இல்லை.

இக் காலத்தில் ஒரு காரியத்தைச் செய்யுமுன் அதனைத் தீர எண்ணித் துணியும் பொறுமை மனிதர்க்கில்லை. அவ்வளவு அதிகமாய் அமைதி யிழந்தவர்க ளாய்விட்டார்கள். எதிரில் என்ன வந்தாலும் அதனை மேற்கொண்டுவிடுகின்றனர். அது தமக்கு நன்மையளிக்கக் கூடியதா அல்லவா என்பதைச் சிந்தித்துப் பார்ப்பதில்லை. தீங்கு இதனோடு முடிவதில்லை. மாந்தர் தம் மக்களை வளர்ப்பதும் அவ்வாறே; வயது வரும்போது அவர்களும் தங்களைப் போலவே துன்பமுறும்படியான வழியில் அவர்களை வளர்க்கின்றனர்.

ஒவ்வொருவரும் கடந்துபோன எண்ணற்ற பிறவிகளில் உண்டான சம்ஸ்காரங்களுடன் (உள்ளப் பதிவுகளுடன்) பிறந்திருக்கின்றனர். அதனால் போகங்களைத் துய்ப்பதற்கான நாட்டம் ஏற்கெனவே பலமாய் இருக்கின்றது. அதோடு குழந்தைப் பருவத்தில் கொடுக்கப்படும் பயிற்சியோ இந்த நாட்டத்தைப் பலப்படுத்துவதாகவே இருக்கிறது. ஆகையால், ஆத்மீய வாழ்வைக் குலைக்கக்கூடிய பலவகையான ஆபத்துக்களி னின்றும் ஏற்கெனவே தப்பித்துக்கொண்டவர்களோ, அல்லது தப்ப முயன்று கொண்டிருப்பவர்களோ எவ்வளவு பாக்கியசாலிகளாய் இருக்க வேண்டும்!

பகவானுடைய கிருபையினாலேயே நீங்கள் உலகைத் துறக்கக்கூடியவர்க ளானீர்கள். நீங்கள் கோரிய லக்ஷியத்தை அடை

வதற்குரிய இந்த அரிய சந்தர்ப்பத்தை இழந்துவிடாதபடி நீங்கள் ஜாக்கிரதையாய் இருங்கள். முனைந்து நின்று காரியத்தில் ஈடுபடுங்கள். கடவுளைக் காணுங்கள். வேறொன்றையும் கவனியாதீர்கள்; அவனையே நோக்குங்கள். அவன் உங்கள் பாரத்தையெல்லாம் ஏற்றுக்கொள்ளுவான். அப்போது உங்கள் கீழான ஆசைகளும் அவாக்களும் உங்களைவிட்டு முற்றும் நீங்கிவிடுமென்பதை நீங்கள் காணுவீர்கள்.

நமது அற்ப அறிவினைக்கொண்டு பகவானைப்பற்றி நாம் யாது அறிந்துகொள்ள முடியும்? ஒன்றும் முடியாது. ஆகையால் அவனிடமே முற்றிலும் சரணாகதி யடைந்து விடுங்களென்று யான் உங்கட்குச் சொல்லுகிறேன். அவன் இச்சைப்படியே யாவும் நடக்கும்! அவனே சர்வ சக்திமான்! மனிதனிடம் என்ன சக்தி யிருக்கிறது? நீங்கள் செய்யக்கூடியதெல்லாம் இறைவனிடத்து அன்பு செலுத்துவதேயாம். அவனை அடைய அதிதீவிர ஆவல்கொண் டிருங்கள். இந்த உலகமெலாம் ஏதோ ஒரு பொருளுக்காகப் பித்துப் பிடித்து அலைகின்றது. இவ்வுலகின்கண் ணுள்ள அழிந்துபோகக் கூடிய அநித்யப் பொருள்களைப் பின்பற்றிப் பித்தராய் அலைவது எதற்காக? நமது லக்ஷியமோ கடவுளைக் காணுதல். கருமம் புரிதலே எந்நாளும் வாழ்வின் நோக்கம் ஆகாது. தன்னலப் பற்றற்ற கருமங்கூட, தானே முடிவாக அமையாது; கடவுட் காட்சிக்குச் சாதனமாகவே இருக்கின்றது.

ஆத்ம சாதனைகளைப் பழகிக் கடவுள் மார்க்கத்தில் முன்னேறுங்கள். அப்போது, கடவுள் ஒருவரே உண்மை; மற்றவை யாவும் மாயை என்பதையும், வாழ்வின் முடிவான நோக்கம் கடவுளைக் காண்பதே என்பதையும் நீங்கள் உணர்வீர்கள். சில நாளைய ஆத்ம சாதனப் பயிற்சியின் பின்னர் நீங்கள் இன்னும் கொஞ்சம் அதிக ஒளியைப் பெறக்கூடும். ஆனால் அதோடு எல்லாம் அடைந்துவிட்டதாக எண்ணிவிடாதீர்கள். சாதனைகளைத் தொடர்ச்சியாகப் பயின்றுகொண்டே மேலும் மேலும் முன்னேறிச் செல்லுங்கள். அப்போது நீங்கள் கடவுளை அறிவீர்கள். கடவுளைக் காணும் பேறு பெறுவீர்கள். அந்தரங்கமாகத் தெரிந்துகொள்ளும் வல்லமையைப் பெறுவீர்கள்.

எனது அன்பார்ந்த குழந்தைகாள், யான் சொல்வதைக் கேளுங்கள். நீங்கள் எல்லாரும் நல்ல குடும்பங்களிற் பிறந்து நன்றாகப் படித்துத் தேர்ந்திருக்கின்றீர்கள். நீங்கள் போது மான அளவு படித்துத் தர்க்கித்து வாது புரிந்திருக்கின்றீர்கள். அவை இன்னும் எதற்காக? இப்போது உங்கள் உள்ளத்தை ஒருமுகப்படுத்தி அதனை இறைவன்மீது நிலை நாட்டுங்கள். "கடவுள் என்னும் கடலில் மூழ்கிவிடு, மனமே," என்று உங்கள் மனத்துக்குச் சொல்லுங்கள். நீங்களோ உலக வாழ்வைத் துறந்து வந்தவர்கள். திரும்பவும் அக் குப்பையில் மனத்தைச் செலுத்தி இறைவனிடம் உங்களை அர்ப்பணம் செய்யாதிருப்பீர்களானால், இம்மை மறுமை ஆகிய இரண்டையும் நீங்கள் இழந்தவர்க ளாவீர்கள். இறைவனுடைய அருளால் நீங்கள் உத்தமமான எண்ணங்களும் ஆசைகளும் உள்ளவர்களாய் இருக்கின்றீர்கள். இந்தத் தெய்வீக அருளை நீங்கள் நன்கு பயன்படுத்திக் கொள்ளுங்கள். அநித்தியமான உலக இன்பங்களின் பொருட்டு அளவிலடங்காத கடவுள் இன்பத்தைத் துறந்து விடாதீர்கள். "ஈசா! உன்னை நான் அணுகும் மார்க்கத்தில் ஏற்படும் இடையூறுகளையெல்லாம் நான் தாண்டிவருவதற்கான வலிமையை எனக்கு நீ தந்தருளுவாயாக," என்று இறைவனைப் பிரார்த்தியுங்கள்.

பேரானந்தமாகிய அக் கடவுளின்பத்தை ஒருதரம் ருசித்தபேர்க்கு உலக இன்பங்கள், யாவும் சிறிதளவேனும் ருசியில்லாதவைகள் ஆய்விடுகின்றன. உலகத்தில் என்ன இருக்கிறது? பேரோ, புகழோ, செல்வமோ, மக்களோ, எதுவாயினும் - ஒன்றேனும் மனிதனுக்குச் சாந்தியை அளிக்காது. இவை யாவும் அவனுடைய துன்பங்களையும் கவலைகளையும் அதிகமாகவே ஆக்குகின்றன.

உங்கள் குடும்பங்களையும் வீடு வாசல்களையும் விட்டு நீங்கள் எதற்காக இங்கு வந்திருக்கிறீர்கள்? உங்கள் பாரத்தைக் குறைத்துக்கொள்ளவா அல்லது அதிகப்படுத்திக் கொள்ளவா? உங்கள் கண்முன் நீங்கள் காணும் போகத்துக்குரிய விஷயப் பொருள்கள் யாவும், உங்கள் மூச்சு அடங்கின மாத்திரத்தில் மறைந்துவிடப் போகின்றன. உண்மையைக் கூறினால், மேலும்

மேலும் அதிகமான இருளிலேயே, அஞ்ஞானத்திலேயே, உங்களை ஆழ்த்தக்கூடியனவாய் அவைகள் இருக்கின்றன. அஞ்ஞான வழியிற் செல்ல நீங்கள் விரும்புகிறீர்களா, அல்லது ஞான மார்க்கத்தில் செல்ல விரும்புகிறீர்களா? ஞான ஒளியை நீங்கள் ஒருமுறை கண்டுவிட்டால், அதினின்றும் உங்கள் முகத்தை நீங்கள் திருப்புதல் ஒண்ணாது. உலகப் பொருள்களை நீங்கள் நோக்காதீர்கள். அப்படி நோக்குவீர்களானால், அவற்றில் மூழ்கி உங்களை இழந்துவிடுவீர்கள். ஆசைகளின் வலிமை எவ்வளவு அதிகமானதென்பது உங்கட்குத் தெரியுமா? ஒருமுறை உங்கள் மனத்தில் அவை பதிந்துவிடுமாயின், உங்களை மேலும் மேலும் கீழ் நோக்கி இழுத்துச்சென்று இழிவடையச் செய்யும்; அப்படிச் செய்யினும், அவ்வாறு இழிவடைவதை நீங்கள் சற்றும் உணராதபடியும் அடித்துவிடும். இந்த ஆபத்துக்களினின்றும் தப்புவதற்கான ஒரே வழி யாதெனில் இறைவன் மாட்டு உங்களை முற்றிலும் நீங்கள் அர்ப்பணம் செய்துவிடுவதே யாம்.

---

# 10

## தியாகத்தின் வலிமை

[பேலூர் மடத்தில் நடந்த சம்பாஷணை]

சுவாமிகள் :—முற்றிலும் கடவுளிடம் சரணாகதி அடைதல் என்பது அவ்வளவு சுலபமான ஒரு விஷயம் அன்று. மனம் எப்போதும் சந்தேகங்களை உண்டாக்கிக்கொண்டும் இது போன்ற கேள்விகளை எழுப்பிக்கொண்டும் இருக்கிறது :— நான் கடவுளைப் பார்த்தது மில்லை, அறிந்தது மில்லை. அப்படியிருக்க, அவனிடம் அன்பு பூண்டு சரண் புகுவதற்கு என்னால் எவ்விதம் முடியும்?" மனத்தின் இயல்பான தன்மையோ நம்மை மேலான எண்ணங்களினின்றும் உயர்ந்த நோக்கங்களினின்றும் கீழிழுத்து உலக விஷயங்களிலே செலுத்துவதாய் இருக்கின்றது.

ஒரு நாள் ஒருவன் ஸ்ரீ ராமகிருஷ்ணரை அணுகி, "சுவாமி, பகவந் நாமத்தை பஜிப்பதில் எனக்கு மனம் ஓடவில்லை," என்று குறை சொல்லிக்கொண்டான். "அப்படியானால், உன் மனத்தைப் புறம்பே இழுத்துக்கொள்ளும் பொருள் தான் எது?" என்று ஸ்ரீ ராமகிருஷ்ணர் கேட்டார். "அது நான் வளர்க்கும் ஆடு. மற்றவை எல்லாவற்றையும் விட அதனிடத்தில் எனக்கு அன்பு அதிகம் உண்டு" என்று பதில் சொன்னான். அதற்கு ஸ்ரீ ராமகிருஷ்ணர், "நல்லது, உன் ஆட்டுக்கு நீ ஆகாரமளித்து உபசரிக்கும் போது, நீ பகவானுக்கே உணவளித்து உபசரிப்பதாக எண்ணிக்கொள். உண்மையாகக் கொஞ்ச காலம் இவ்விதம் செய்துவா. எல்லாம் நன்மையாகும் என்பதை நீ காண்பாய்," என்று உபதேசித்தார்.

குருவானவர் நித்தியமான பேரின்ப வாழ்வுக்குரிய மார்க்கத்தைச் சிஷ்யனுக்குக் காட்டி, எல்லாவகையான துன்பங்களினின்றும் அவனைக் காப்பாற்றுகின்றார். குரு வாக்கியத்தில் முழு நம்பிக்கை வைத்துச் சிஷ்யன் அதன்படி நடக்கட்டும். கொஞ்ச நாளில், தன் மனத்தின்கண் உள்ள மாசெல்லாம் மறைந்துவிட்டன வென்றும், தெய்வ ஒளி தன்னுள்ளே தோன்றுகின்றது என்றும் சிஷ்யன் உணர்வான். குருவினிடம் கொள்ளும் சிரத்தையினாலேயே எல்லாம் அடையப் படுகின்றது என்பதிற் சந்தேகம் இல்லை. அவர், இப் பூவுலகில் திருவுருத் தாங்கி வந்துள்ள கடவுளே யாவர் என்று சிஷ்யன் கருதவேண்டும். குருவை இடைவிடாது சிந்தித்துத் தியானம் செய்வதனாலே சிஷ்யனுடைய மனமும் உடலும் பரிசுத்தம் அடைகின்றன. பிறகு குரு, சிஷ்யனுக்குப் பிரத்யக்ஷமாகி, அவனுக்கு இஷ்ட தெய்வத்தின் காட்சியை அருளித் தாம் மறைந்துவிடுகின்றார்.

குருவணக்கத்தில் இவ்விதம் சொல்லப்பட்டிருக்கிறது.—

गुरुर्ब्रह्मा गुरुर्विष्णुः गुरुर्देवो महेश्वरः ।
गुरुरेव परं ब्रह्म तस्मै श्रीगुरवे नमः ॥

"குருவே பிரம்மா; குருவே விஷ்ணு; குருவே சிவன். குரு உண்மையில் எல்லாவற்றிற்கும் மேலான பிரம்மத்தைத் தவிர வேறன்று. அந்தக் குருவை வணங்குகிறேன்."

குருவினிடம் சிஷ்யனுக்கு உண்மையான நம்பிக்கை இருந்தால், அவன் கடவுள் ஞானத்தையும் ஈசுவர பக்தியையும் அடைதல் மிகவும் எளிது. குருவினிடம் நம்பிக்கையாகிய இஃது ஒன்றே தேவை. இதைப் பெற்றுவிட்டால், எல்லாவற்றையும் பெற்றதாகும்.

உள்ளமானது பரிசுத்தம் அடையாமல் கடவுளைத் தரிசித்தல் இயலாது. "குரு ஞானஒளி பெற்றுச் சித்தி அடைந்த ஒருவராய் இருந்தால், சிஷ்யனின் 'நான்' என்னும் அகங்காரம் உடனே அழிந்து போகின்றது. ஆனால், குரு தாமே ஞானத்தைப் பெறாதவராய் இருந்தாரானால், குரு சிஷ்யன் ஆகிய இருவரும் அதிக கஷ்டத்தை அடைவார்கள். எப்படியும் சிஷ்யன் தன்னுடைய அகங்காரத்தினின்றோ உலக பந்தங்களினின்றோ விடுபட முடியாதவனாக இருக்கிறான்," என்று ஸ்ரீ ராமகிருஷ்ணர் சொல்வது வழக்கம். ஞான வொளியைப் பெறாத குருவினால் சிஷ்யனுக்கு முக்தி உண்டாகச் செய்ய முடியாது. சாதாரண மனிதன் ஒருவனால் இன்னொருவனை உலக பந்தங்களினின்றும் எவ்விதம் காப்பாற்ற முடியும்? இவ்வுலக மயக்கமாகிய மாயையை உண்டாக்கும் இறைவன் ஒருவனுக்கே அவ்வலையினின்றும் மனிதனை விடுவிக்க முடியும்.

கடவுளை அறிந்தவர் மாத்திரமே மற்றொருவருக்கு முக்தி வழியைக் காட்டுதல் கூடும். கடவுளைக் காணாத ஒருவன், அவரிடமிருந்து ஆதேசத்தைப் பெறாதவன், தெய்வீக சக்தியால் தான் வல்லமையை அடையாதவன், இப்படிப்பட்டவன் ஒரு ஜீவனை உலக பந்தங்களிலிருந்து விடுவிப்பது எப்படி? குருடன் குருடனுக்கு வழி காட்டினால் இரண்டு பேரும் துன்பத்தை அடைவது நிச்சயம். கடவுட் காட்சியைப் பெற்ற பிறகே, ஒருவனுக்கு ஞானதிருஷ்டி ஏற்படுகின்றது. அதன் பிறகுதான் அவன் மற்றொருவனுடைய கஷ்டங்களை உண்மையாக உணரவும் அவனுக்குச் சரியான உபதேசம் செய்து வழிகாட்டவும் வல்லவனாகின்றான்.

கடவுளை யடையவேண்டுமென்ற உண்மைக் காதல் ஒருவனிடம் இருந்தால், அவன் கடவுள் நெறியைக் கடைப்பிடித்து ஒழுக ஆவலுள்ளவனாய் இருந்தால், அக்கடவுளுடைய கிருபையி

னுலேயே, அவன் ஓர் உண்மையான குருவைக் காண்பது நிச்சயம். ஆகையால், குருவைக் கண்டு பிடிக்கும் விஷயத்தில் சாதகன் ஒருவன் கவலைப்பட வேண்டுவதில்லை.

கடவுளை யறிந்த ஒரு குருவை அடைந்து அவர் காட்டும் வழியில் நிற்போர் தம்முடைய ஞான முன்னேற்றத்தைப் பற்றி எள்ளத்தனையும் கவலைப்பட வேண்டியதில்லை. அவர்களுக்குச் சரியான வழி காட்டப்பட்டிருக்கிறது. இப்போது அவர்கள் செய்ய வேண்டியதெல்லாம் அவ்வழியைப் பின்பற்றி நடக்க வேண்டியதொன்றே. அவர்களுக்கு ஏதேனும் இடையூறு நேரிட்டாலும், அல்லது ஏதாவது ஒரு தப்பு அவர்கள் செய்து விட்டாலும், பகவான் அவர்களைக் காப்பாற்றி அவர்களுக்கு நல்வழி காட்டுவார் என்பது நிச்சயம். குருவினுடைய வார்த்தைகளில் உண்மையான நம்பிக்கை கொண்டு, அவர் காட்டிய வழியிலேயே அவர்கள் நடக்கட்டும்: அது போதும்.

இவ்வுலகம் எதைப் போன்றது? மரிமாங்காயைப் போன்றது—(வெறும் கொட்டையும் தோலுமாய்ச் சதைப் பற்றே இல்லாதிருப்பது இக் காய். மேலும், தின்றால் வயிற்று வலியை உண்டாக்குவது.)

நீங்கள் அனைவரும் பரிசுத்த ஆத்மாக்களான இளைஞர்கள். உங்கள் மனமானது இப்போது அடங்கியிருக்கிறது; உலக எண்ணங்களினாலே அலைக்கப்படவில்லை. இப்போதிருந்தே முயலுவீர்களானால், நீங்கள் கடவுளை எளிதாக அடையலாம். நீங்கள் சிறுவர்களாய் இருக்கும் வரையிலே அதிக சிரமம் இல்லாமலேயே உங்கள் மனத்தைக் கடவுளிடம் நீங்கள் நிலைக்கச் செய்யலாம். ஆனால், மனமானது ஒருதரம் சிதறிப் போகுமானால், அதனைக் கட்டுப்படுத்தி அடக்குதல் மிகவும் கடினமாகும்.

"மூன்றினுடைய கிருபை ஜீவனுக்கு இருக்கின்றது—(குரு, பகவான், பக்தர்); ஆனால் ஒன்றினுடைய கிருபை யில்லாமல் அது பாழாய்ப் போகின்றது," என்ற இவ்வழகிய வாக்கியம் வைணவர்களிடையில் வழங்கி வருகின்றது. இதன் கருத்து இதுவே: சிஷ்யன் குருவினுடைய கிருபையைப் பெற்றிருக்கிறான்; கடவுளுடைய கிருபையினாலே உயர்ந்த நோக்

கங்களும் அவன் உள்ளவனாக இருக்கின்றான்; இவை யிரண்டோடு சத் சங்கமும் அவனுக்கு உண்டு. இப்போது அவனுக்கு வேண்டியது ஒன்றினுடைய, அதாவது மனத்தினுடைய, கிருபை. மனம் சாதகமாய் இருந்துவிட்டால், எல்லாம் அடையப் பெற்றதாயிற்று. மனமானது அமைதியற்ற நிலைமையினின்றும் விடுபட்டிருக்கும் போதுதான் ஏனையவற்றின் கிருபையை உணரலாம். மனத்தை அடக்கவேண்டும். இதைச் செய்தாலொழியப் பிற முயற்சிகள் யாவும் பயன்படா.

ஆகையால்தான் என் சிறுவர்காள், நான் உங்களுக்கு எச்சரிக்கை செய்கிறேன். ஜாக்கிரதை! உங்கள் மனமானது சுற்றித் திரிய இன்னும் கற்றுக்கொள்ளவில்லை. அவ்விதம் செய்வதற்கு முன்னதாகவே கடிவாளத்தை இழுத்துப் பிடியுங்கள். ஒரு பெரிய யானையை அதன் மாவுத்தன் முன்னதாக நன்றாய்ப் . பழக்கிய பிறகன்றோ தான் விரும்பிய வாறெல்லாம் அதைச் செய்யும்படி பண்ணுகிறான்? அது போலவே, நம்முடைய கட்டளைப்படியே நடக்கும் வண்ணமாக நாம் நம் மனத்தைப் பழக்கவேண்டும். அது நம்முடைய எஜமானாக இருக்கக் கூடாது. மனத்தைப் பழக்குதற்கான ஒரே வழி எது எனில், உலக போகங்களில் வைக்கும்படியான ஆசையை விட்டுவிடச் செய்தலேயாம். இந்தக் காரணத்தை முன்னிட்டே பகவத்கீதை முதலிய சாஸ்திரங்களெல்லாம் தியாகத்தின் பெருமையைப் பற்றித் திரும்பத் திரும்ப எடுத்தோதுகின்றன.

நமக்கு வேண்டுவது தியாகந்தான். அது ஒன்றே வழி. எவர்களுடைய மனம் உலகப் பொருள்களாலே கவரப்படாதிருக்கின்றதோ அவர்களே துறவியின் பெருமையை அறிதல் கூடும். கிளியானது, இளமையாயிருக்கும்போதே கற்றுக்கொடுத்தால் சொல்லும் வார்த்தைகளைத் திருப்பிச் சொல்லக் கற்றுக்கொள்ளும். ஒரு குறித்த வயதுக்குமேல் வளர்ந்து போய்விட்டால், அக்கிளி ஒன்றையும் கற்றுக்கொள்ளாது; அப்போது அது 'கீ, கீ' என்றுதான் கத்தும்," என்று ஸ்ரீ ராமகிருஷ்ணர் சொல்வது வழக்கம்.

கடவுளைப் பற்றிய எண்ணங்கள் இளமையான மனத்தில் ஆழப் பதிகின்றன. வாலிப தசையிலே ஒருவன் வாழ்வின்

உயர்நோக்கங்களை அறியவும், அறிந்து ஆதரிக்கவும் வல்லவனு யிருக்கிறான். ஆனால் வயது ஏற ஏற மனமானது பலவகை யான எண்ணங்களில் மூழ்கிவிடுகின்றது; அது அமைதியை இழந்து விடுகிறது; அங்கு மிங்கும் அலைய விரும்புகிறது; நிலையாக நிற்பதில்லை; நீடித்து நினைக்கும் வலிமையையும் இழந்துவிடுகிறது. அதன் பிறகு அம்மனத்தில் கடவுளைப் பற்றிய எண்ணம் ஆழ்ந்து பதியும்படி செய்தல் மிகவும் அரிது.

சிறு பிள்ளைகளிடம் நம்பிக்கையானது எவ்வளவு எளிமை யும் உறுதியும் உடையதாக இருக்கின்றது! மற்றவர்கள் சொல் வதை நம்பி அவர்கள் அதன்படி நடக்க முயலுகின்றார்கள். தங்கள் அலையாத மனத்தைச் செலுத்தி அவர்கள் எக்காரியத் திலும் வெற்றி பெறுகின்றார்கள். ஆனால் வயது முதிர்ந்து விட்டால், சந்தேகப்படும் குணம் ஏற்படுகின்றது. வயது முதிர முதிர, எல்லாவற்றிலும் அவர்களுக்குச் சந்தேகமே உண்டாகின்றது. கடைசியாக, யாதொன்றிலும் நம்பிக்கை வைக்கமுடியாத ஒரு நிலைமைக்கு அவர்கள் வந்துவிடுகிறார்கள். ஆகையால், உங்கட்கு யான் சொல்லுகிறேன், நீங்கள் செய்ய விரும்புவது எதுவோ அதனை இப்போதே, நீங்கள் சிறுவர்களா யிருக்கும்போதே, செய்யுங்கள்.

எங்கள் குருநாதருடைய வாழ்க்கையிலே, அவர் துறவற நெறியைப்பற்றி முக்கியமாகச் சிறுவர்களிடமே பேசி வந்தார் என்பதை நாங்கள் கண்டிருக்கிறோம். வாழ்வின் உயர்ந்த நோக்கமானது கடவுளைத் தரிசித்தலே என்பதை அவர்க ளுடைய மனத்தில் நன்கு பதியச் செய்வார். அவருடைய லக்ஷியத்தை முற்றிலும் ஏற்றுக்கொள்ள வல்லவர் இளைஞரே என்பதை அவர் உணர்ந்திருந்தார். அதிருஷ்டவசமாக நீங்கள் எல்லாம் சிறுவர்களாய் இருக்கின்றீர்கள்; உங்கள் மனம் உலக எண்ணங்களால் கறைபடவில்லை. ஆசைகளையெல்லாம் விட்டு இறைவனிடம் முற்றிலும் உங்களை அர்ப்பணம் செய்து விடுங் கள். கடவுளின்பத்தையும் உலக போகங்களையும் ஒரே சமயத் தில் நீங்கள் பெற்று வாழமுடியாது. ஒன்றை ஒழித்தாலன்றி இன்னொன்றை நீங்கள் பெறமுடியாது. மேலான ஒன்றினிடம் ருசி இருந்தாலொழியக் கீழானதை நீங்கள் விடமுடியாது.

உங்கள் உள்ளத்தைக் கடவுள் எண்ணத்தால் பூரணமாக நிரப்புவதற்கு இதுவே தக்க காலம். இறைவனை உங்கட்குச் சொந்தமாக்கிக் கொள்ளுங்கள். "அவனே என்னுடைய எல்லாம்"—என்ற இந்தக் கருத்து உங்கள் மனத்தில் உறுதியாக நிலைபெறச் செய்யப்பட்டால் உங்கள் துன்பங்கள் எல்லாம் ஒழிந்துபோகும். அதன் பிறகு இம்மையிலோ மறுமையிலோ உங்களுக்குத் துன்பம் செய்ய ஒருவராலும் இயலாது.

கற்கண்டின் பாகைப் பருகியவர் வெல்லத்தை விரும்புவார்களா? கடவுளின்பமாகிய தெய்வாமிருதத்தில் ஒருவனுக்கு ருசி ஏற்பட்டுவிட்டால், அவனுக்கு உலக இன்பங்களெல்லாம் ருசியிழந்தவையாகின்றன. போக விஷயங்கள் எல்லாம் துச்சமாவதுடன் நிச்சயமாய்க் கசப்பாகவும் ஆய்விடுகின்றன. உங்களுக்கு யான் சொல்ல விரும்புவது இதுவே—மனப்பூர்வமாக இறைவனிடம் உங்களை ஒப்படைத்து விடுங்கள்; அவர் தமது இச்சைப்படியே உங்களை நடத்தும்படி விட்டுவிடுங்கள்.

---

# 11

## பிரம்மசரியம்

[பேலூர் மடத்தில் நடந்த சம்பாஷணை]

சுவாமிகள் :—ஆத்ம சாதனைகளில், எல்லாருக்கும் ஒரே வகையான நியதியை ஏற்படுத்த முடியாது. சாதகர்களுக்கு வழி காட்டும் பொருட்டு எவ்வகையான உபதேசத்தையும் செய்வதற்கு முன்னதாக, அவர்கள் ஒவ்வொருவருடைய மனப்போக்கும் எப்படிப்பட்டதென்பதை நாம் கண்டறியவேண்டும். குறிப்பிட்ட ஒருவனுடைய மனப்போக்கின் இயல்புக்கு மாறாய் அமையக்கூடியவாறு உபதேசமானது செய்யப்படுமானால், அது அவனுக்கு நன்மை பயவாமற் போவதுமன்றிப் பல கெடுதல்களையும் விளைத்துவிடக்கூடும். ஆகையினால், குருவானவர் தம் சிஷ்யர்களில் ஒவ்வொருவருடைய மனப்போக்கும் பிரத்தியேகமான இயல்பும் எத்தகையன வென்பதை நெருங்கிப் பழகி நேரிற் காணவேண்டும்; அவரவர்களுடைய மனப்பான்மைக்கு

ஒத்து எளிதில் ஏற்றுக்கொள்ளக் கூடிய வண்ணம் உபதேசங்களைச் செய்தல் வேண்டும்.

இரண்டொரு பொது விதிகள் நீங்கலாக, "இந்த மார்க்கத்தையே நீ கடைப்பிடிக்க வேண்டும்" என்று குறிப்பிட்ட ஏதோ ஒரு வழியைப் பிறருடைய முன்னிலையில் ஒருவருக்குச் சொல்லுதல் கூடாது. ஸ்ரீ ராமகிருஷ்ணர் எப்படி ஒவ்வொரு சிஷ்யரையும் தனியே இட்டுச் சென்று அந்தரங்கமாக அவரவர்க்குரிய, பிரத்தியேகமான உபதேசத்தைச் செய்தார் என்பதை நான் பார்த்திருக்கிறேன். உங்களுடைய சாதனை சம்பந்தமான எந்த விஷயத்தைப் பற்றியேனும் உங்கள் குருவை நீங்கள் கேட்க வேண்டுமானால், அதைத் தனியே அந்தரங்கமாகக் கேட்டுக்கொள்ள வேண்டும். பொதுவாக, ஞான சாதனைகளில் ஈடுபடும் எல்லாச் சாதகர்களுக்கும் நன்மை தரக்கூடிய சில விதிகளைப்பற்றி எடுத்துக் கூறலாம். முதலாவதாக, நீங்கள் கடவுளிடம் உறுதியான நம்பிக்கை உள்ளவர்களாக இருக்க வேண்டும். கடவுளை யறிந்து அவருடைய கிருபையைப் பெற்றால், உங்கள் வாழ்வின் சிக்கல்கள் எல்லாம் தீர்க்கப்பட்டுவிடும் என்றும், இந்தப் பிறவி எடுத்ததின் நோக்கமானது நிறைவேறிவிடும் என்றும், நித்யானந்தமாகிற அமிருதத்தைப் பருகி அழியாத் தன்மையை நீங்கள் அடைந்து விடுவீர்கள் என்றும் பூரணமாய் நம்பியிருத்தல் வேண்டும்.

அடுத்தபடியாக பிரம்மசரியம். வழுவாத பிரம்மசரியம் இல்லாது உயர்ந்த நோக்கங்களில் உறுதிப்பாடு ஒருவருக்கும் இருத்தல் முடியாது. சரீரம், மனம், புத்தி ஆகியவற்றின் வளர்ச்சியையும் சக்தியையும் பூரணமாய்ப் பெறுவதற்குப் பிரம்மசரியம் அவசியமானது. பிரம்மசரிய விரதத்தைக் கண்டிப்பாய் அனுசரித்து வருபவர்களிடம் அபாரமான ஞாபக சக்தியும் ஆச்சரியமான புத்தி கூர்மையும் உண்டாகின்றன. பிரம்மசரியத்தால் புதிய நாடி யொன்று ஏற்படுகின்றது; அதன் வலிமையால் இந்த அபூர்வமான சக்திகள் எல்லாம் உண்டாகின்றன. நமது பெரிய ஆசார்யர்கள் எல்லாரும் பிரம்மசரியத்தைப் பற்றி அவ்வளவு அதிகமாக ஏன் வற்புறுத்தியிருக்கின்றனர் என்பது உங்களுக்குத் தெரியுமா? இதில் ஒருவன் வீழ்ச்சியுற்றால்,

அவன் எல்லாம் இழந்தவனாகிறான் என்பதை அவர்கள் அறிந்திருந்ததனாலேயாம். உண்மையான பிரம்மசாரி தன் சக்தியை இழப்பதில்லை. அவன் ஒரு பயில்வானைப் போன்று இல்லாதிருக்கலாம்; ஆனால் அவனுடைய புத்தியானது அறிவுக் கெட்டாத விஷயங்களையும் அறியவல்ல அபூர்வ சக்தியோடு கூடிய கூர்மையைப் பெறுகின்றது.

ஒரு பிரம்மசாரி அனுசரிக்க வேண்டிய நியமங்கள் உண்டு. பரபரப்பையும் காமத்தையும் உண்டாக்கும் உணவு, மிதமிஞ்சிய தூக்கம், அளவு கடந்த உழைப்பு, சோம்பல், கெட்டவர் சேர்க்கை, கேடான சம்பாஷணை ஆகிய இவற்றை அவன் தவிர்த்தல் வேண்டும். வீண்பேச்சில் ஈடுபடுவீர்களானால், உங்கள் மூளையானது கொதிப்படையும்; உங்கள் எண்ணங்களை நீங்கள் அடக்கமுடியாது; தூக்கமில்லாமை முதலான பல வாதனைகளால் துன்பப்படுவீர்கள்.

நாக்கையும் கட்டுப்படுத்துதல் அவசியம். இல்லாவிட்டால் பல கஷ்டங்களுக்கு உட்படுவீர்கள். "உங்கள் பூடி (வயிறு) யையும், மூடி (மூளை)யையும் குளிர்ச்சியாக வைத்திருங்கள்," என்று ஸ்ரீ ராமகிருஷ்ணர் சொல்வது வழக்கம். அதாவது உங்கள் வயிறும் மூளையும் குளிர்ச்சியாயும் சாந்தமாயும் இருந்தால்தான் நீங்கள் நன்றாகச் சாதனம் செய்யக்கூடும் என்பதாம். நாக்கை அடக்காத பெருந்தீனிக்காரன் தனது உடலுக்கும் மனத்துக்கும் நாசத்தைத் தேடிக்கொள்ளுகிறான். வெங்காயம், வெள்ளைப்பூண்டு, மிளகாய் முதலான இவை போன்ற உணவுப் பொருள்களை ஒருவன் அதிகமாய்த் தின்றால், உடம்பில் பதற்றம் உண்டாகும்; மனத்தை அடக்குதல் அவனுக்கு மிகவும் கஷ்டமானதாகும். ஆத்மீய வாழ்க்கையை அனுசரிக்க விரும்புவோர் தாங்கள் உண்ணும் உணவுப் பொருள்கள் எத்தகையவை யென்று ஆராய்ந்து பார்ப்பது அவசியமென நான் நம்புகிறேன். சத்துள்ளதாயும் சுலபமாய் ஜீரணமாகக் கூடியதாயும் உள்ள ஆகாரத்தையே உட்கொள்ளுதல் வேண்டும். வயிற்றுக்குள் அளவுக்குமேல் ஆகாரத்தைத் திணிப்பதால் ஒரு நன்மையும் இல்லை.

உணவைப்பற்றிக் கண்டிப்பான விதி ஒன்றையும் ஏற்படுத்துதல் இயலாது. சிலருக்கு மிக நன்றாய் ஒத்துக்கொள்

ளக் கூடியதாயிருக்கும் உணவு இன்னும் சிலருக்குத் தீமையை விளைவிக்கக்கூடும். ஒவ்வொருவரும் அவரவர்க்கு ஒத்துக்கொள் ளக்கூடிய ஆகாரம் இன்னதுதான் என்பதைத் தங்கள் தங்கள் அனுபவத்தைக் கொண்டே அறிந்து கொள்ளுதல் வேண்டும்.

நம்முடைய சரீரமானது தகுந்த நிலைமையில் நின்று, நாம் நமது நிஜஸ்வரூபத்தை அறியவல்லவர்கள் ஆகவேண்டும் என்ப தன் பொருட்டே, நாம் உணவை உட்கொள்ள வேண்டும்.

"சரீரமாத்யம் கலு தர்ம ஸாதனம்," என்று சாஸ்திரங் கள் கூறுகின்றன. அதாவது, ஞான சாதனைக்குச் சரீர சௌக் கியம் பிரதானமானது என்பதாம். இதனால், ஒருவன் இரவும் பகலும் தன் உடம்பையே நினைத்துக்கொண்டு உட்கார்ந்திருக்க வேண்டும் என்பது அர்த்தம் இல்லை. சரீர சக்திக்குக் கேடு உண்டாகாதபடி பார்த்துக்கொள்ளவேண்டும் என்பதுதான் இதன் கருத்து. உடம்பிற் கொதிப்பையோ அல்லது சோம் பலையோ உண்டாக்கக் கூடிய பொருள்களை நீக்கி நல்ல புஷ்டி யைத் தரும் உணவையே ஒருவன் சாப்பிட வேண்டும்.

"பகலில் உனக்கு விருப்பமான அளவு நீ சாப்பிடலாம்; ஆனால் இரவில் மிகவும் குறைவாகவே சாப்பிடவேண்டும்" என்று ஸ்ரீராமகிருஷ்ணர் சொல்வது வழக்கம். அதன் கருத்து, இரவில் நீங்கள் குறைவான ஆகாரத்தை உட்கொண்டால், சரீரம் இலேசாக இருக்கும்; மனத்தைச் சுலபமாகக் கட்டுப் படுத்தித் தியானத்தில் நிலைநிற்கச் செய்யலாம் என்பதே. இல்லாவிட்டால், தூங்கிவிடவோ அல்லது சோம்பலாகக் காலங் கழிக்கவோ உங்களுக்குத் தோன்றும். இரவைத் தூக்கத்தி லேயே கழித்துவிடவா, அல்லது தியானத்தில் செலவழிக்கவா உங்களுக்கு விருப்பம்? பகற் காலத்தில் மனத்தை ஈர்த்துச் செல்வதற்குப் பல முகாந்திரங்கள் இருக்கின்றன; அதனால் தியானத்துக்கு அது ஏற்றதன்று. ஆனால் இரவிலோ, எல்லா ஜீவராசிகளும் உறங்கிவிடுகின்றன; இயற்கையே நிச்சப்தமாயும் சாந்தமாயும் இருக்கின்றது. சாதகர்கள் கடவுளைத் தியானிப்ப தற்கு இது தகுந்த காலம். நடு நிசியில் மனம் சுலபமாக ஒன்று பட்டுத் தியானத்தில் ஆழ்ந்து விடுகின்றது.

ஞான சாதனைகளைச் செய்யும்போது பிறருக்குக் காட்டிக் கொள்ளும் நோக்கத்தோடாவது அல்லது எல்லாரும் பார்க்கக் கூடியவாறு வெளிப்படையாக வாவது செய்தல் கூடாது. மற்றவர்கள் முன்னிலையில் அவற்றைச் செய்தால், அவர்களால் கெடுதி உண்டாகும். ஜனங்கள் பரிகாசம் செய்வார்கள்; வலுவிலே உபதேசிக்க வருவார்கள்; ஒன்றுக் கொன்று முரணான பல யோசனைகளைச் சொல்வார்கள். இவற்றின் பயனாக உங்கள் ஆத்மீய முன்னேற்றமானது தடைப்பட்டு நின்றுவிடும். மேலான சாதகன் எவ்வாறு நடந்துகொள்வான்? அவன் இரவில் கொசுவலையை இழுத்து விட்டுக்கொண்டு படுத்துக் கொள்கிறான்; அவன் தூங்குகிறான் என்றே ஒவ்வொருவரும் நினைக்கிறார்கள். ஆனால் உண்மையில், அவன் இரவெல்லாம் அமைதியாகப் படுக்கையில் படுத்தவாறே, தியானத்திலேயே பொழுதைக் கழிக்கிறான்.

நீங்கள் இளைஞரா யிருக்கும்போதே தெய்விக இன்பத்தை ருசிப்பதன் பொருட்டு மிகுதியாகப் பாடுபடவேண்டும். ஒரு முறை அதன் ருசியை நீங்கள் பெற்று விடுவீர்களானால், உங்கள் ஞானசாதனையை நீங்கள் ஒருகாலும் கைவிடமாட்டீர்கள். உயிர் போகக்கூடிய ஆபத்து வந்தாலும் உங்கள் ஆத்ம சாதனைகளை விடாது நீங்கள் செய்து வருவீர்கள். இரவில் தூக்கத்தால் அதிக தொந்தரவு அடையக் கூடியவர்கள், இரவைத்தியானத்தில் கழிக்கும் பொருட்டு, பகற் பொழுதில் கொஞ்சம் தூங்குதல் நலம். தியானத்துக்குரிய சிறந்த நேரமாவது விடியற்காலையும், மாலை வேளையும், நடு நிசியுமாகும். பெரும்பாலும் மக்கள் இவ்வரிய நேரத்தை உபயோகமற்ற வழிகளிலேயே கழித்து விடுகின்றனர்.

ஸ்ரீ ராமகிருஷ்ணர் ஒருபோதும் இரவைத் தூக்கத்திற் கழிப்பதில்லை; தம்மோடிருக்கும் சிஷ்யர்களையும் அதிக நேரம் அவர் தூங்க விடுவதில்லை. மற்றவர்கள் எல்லாம் தூங்கிவிட்ட பின்னர், அவர் தம் சிஷ்யர்களை எழுப்பிவிடுவார்; அவர்களுக்குக் குறிப்பிட்ட சாதனைகளை உபதேசித்துப் பஞ்சவடிக்கோ, தேவியின் சந்நிதிக்கோ, அல்லது சிவன் கோயிலுக்கோ அனுப்பி, தியானம் செய்யும்படி ஏவுவார். அவர் சொன்ன

படியே அவர்கள் இரவு முழுமையும் தியானத்திலே கழித்து விட்டுப் பகலில் படுத்துக் கொள்வார்கள். இப்படித்தான் அவர் தமது சிஷ்யர்களைப் பலவகையான ஞானசாதனைகளில் பயிலுவித்து வந்தார். "யோகிகள், போகிகள் (உலக போகங்களில் நாட்டமுடையவர்), ரோகிகள் (நோயாளிகள்) ஆகிய மூன்று வகையாரும் இரவில் கண் விழித்திருப்பார்கள்; நீங்களெல்லாம் யோகிகள்; இராப்பொழுதை நீங்கள் ஒருகாலும் தூக்கத்தில் கழித்து விடக்கூடாது," என்று அவர் அடிக்கடி சொல்வது வழக்கம்.

---

# 12

## சத்சங்கம்

[பேலூர் மடத்தில் நடந்த சம்பாஷணை]

சுவாமிகள் :—தியானத்தில் ஒருதரம் நீங்கள் நிலைபெற்று விட்டீர்களானால், அதனுடைய இன்பம் எவ்வளவு ஆனந்தமானது என்பதை நீங்கள் அறிவீர்கள். இரவும் பகலுமாக நாட்கள் பல கழிவதே தெரிவதில்லை. கரைகாணாத ஆனந்த சாகரத்தில் நீங்கள் மிதந்துகொண்டிருப்பதாக உணர்வீர்கள். உங்கள் ஆத்மானுபவங்களைப் பற்றி எல்லாரிடமும் பேசாதீர்கள்; அதிலும், மாறான குணமுடைய மனிதர்களிடம் பேசுதல் சிறிதும் ஒண்ணாது. அது உங்கள் வளர்ச்சிக்கு இடையூறாகும். உங்கள் இயல்புக்கு ஒத்த குணமும் தன்மையும் உடையவர்களோடு அந்த அனுபவங்களைப்பற்றிச் சம்பாஷிப்பீர்களானால், உங்கள் முன்னேற்றத்துக்கு அது உதவிசெய்யக் கூடியதாய் இருக்கும். இருவரும் ஒரே வழியில் பிரயாணம் செய்பவர்கள். ஒருகால் உங்கள் துணைவன் அவ்வழியில் முன்னமே சிறிது நடந்து அதிலுள்ள ஆபத்துக்களையும் கஷ்டங்களையும் அறிந்திருக்கவுங் கூடும். அவனுடைய அனுபவங்களின் உதவியைக் கொண்டு அந்த ஆபத்துக்களையும் கஷ்டங்களையும் நீங்கள் நிவர்த்தித்துக் கொள்ள வல்லவர்கள் ஆகலாம்.

சத்சங்கத்தின் நோக்கம் என்ன என்பது உங்கட்குத் தெரியுமா? சாதுக்களின் அனுபவங்கள் ஒரு சாதகனுக்குப் பெருந்

துணையாயிருக்கின்றன. நீங்கள் ஒரு புதிய ஊருக்குப் போகும் போது அங்கு ஊரைச் சுற்றிக் காட்ட ஒரு நல்ல துணை உங்களுக்குக் கிடைத்தால், அவ்வூரில் பார்ப்பதற்குரிய எல்லாவற்றையும் வெகு சீக்கிரத்தில் நீங்கள் பார்த்துவிடலாம். மேலும் புதிதாய் வருபவர்கள் தெரியாமல் சிக்கிக் கொள்ளக்கூடிய ஆபத்துக்கள் கஷ்டங்கள் ஆகியவற்றினின்றும் தப்பியவர்களாவீர்கள். அதுபோல, ஆத்மஞான அபிவிருத்தி அடைந்தவர்களான சாதகர்களின் கூட்டுறவினால், மிக் அருமையான ரகசியங்களை நீங்கள் அறிந்துகொள்ள முடியும். ஞானத்தைப் பெற நீங்கள் எடுத்துக்கொள்ளும் உழைப்பும் மிகச் சுலபமாய்விடும். சாதாரண மனிதன் ஒருவனுடைய அறிவு அதிகதூரம் செல்வதில்லை. நம்முடைய ஆயுளும் அற்ப ஆயுள். செய்ய வேண்டிய காரியங்களோ அநேகம். ஆதலால் உங்களுடைய காரியத்தை எவ்வளவு சீக்கிரம் முடிக்கமுடியுமோ அவ்வளவு சீக்கிரத்தில் முடித்தற்கேற்ற உத்தமமான வழியை நீங்கள் கண்டுபிடிக்க வேண்டும். அதற்காகத் தான் சத்சங்கம் அவசியமாயிருக்கிறது.

இந்த ஜன்மம் இன்னும் சில வருஷங்கள் கழிந்து முடிவடையலாம், அல்லது இன்றைக்கே முடியலாம். முடிவு எப்பொழுது வரும் என்பது யாருக்கும் தெரியாது. கூடிய சீக்கிரமே பிரயாணத்துக்கான ஏற்பாடுகளைச் செய்துகொள்வது நல்லது. தெரியாத ஒரு புதிய இடத்துக்கு வெறுங்கையோடு போனால் துன்பமும் துயரமும் அதிகம் ஏற்படும். பிறந்த பின் கட்டாயம் இறந்தே யாகவேண்டும். இறத்தல் என்றால் தெரியாத ஓர் இடத்துக்குப் போவது என்று அர்த்தம். ஆகையால் பிரயாணத்துக்கான வசதிகளையெல்லாம் தேடிக்கொள்ள வேண்டும். இங்குள்ள உங்கள் கடமைகளையெல்லாம் நீங்கள் முடித்துவிட்டு மேலிருந்து வரும் அழைப்புக்கு எப்போதும் தயாராய் இருங்கள். அப்போது நீங்கள் சிரித்த முகத்துடனே இவ்வுலகை விட்டுப் பிரிந்து செல்வீர்கள். உங்கள் காரியங்களையெல்லாம் நீங்கள் முடித்துவிட்டால், பின்னர் உங்களுக்குப் பயம் என்பது இல்லை. பிரயாணத்துக்கான வசதிகளையெல்லாம் தேடியாய்விட்டதென்று உங்கட்குத் தெரியுமல்லவா?

குழந்தைகள் தூணைச் சுற்றிவரும்போது அதை உறுதியாகப் பிடித்துக்கொள்ளுகின்றன என்பதை நீங்கள் பார்த்திருக்கிறீர்கள். நீங்களும் வாழ்க்கைத் துணாகிய இறைவனைக் கூடுமான வழிகள் எல்லாவற்றாலும் உறுதியாகப் பற்றிக்கொள்ள வேண்டும். சுய நம்பிக்கையுள்ளவர்களாய் இருங்கள். "நான் மனிதனன்றோ? எதையும் நான் செய்து முடிப்பேன்," என்ற நம்பிக்கையைக் கொள்ளுங்கள். இத்தகைய பலமான சுய நம்பிக்கையோடுகூட முன்னடைந்து செல்லுங்கள். உங்கள் வாழ்க்கையின் இலட்சியத்தை அடைந்து நீங்கள் என்றென்றும் அழியாத நித்ய அருளைப் பெற்றவர்களாவீர்கள்.

பயமே பாபத்துக்கெல்லாம் முதன்மையானது. பயத்தையும் பலஹீனத்தையும் அடியோடு ஒழித்துவிடுங்கள். கடவுளையறியவேண்டும் என்ற ஆசை உங்களிடம் உயிர்பெற்றிருக்கும் பொழுது, ஞான வாழ்க்கையில் நடப்பதற்கான சந்தர்ப்பம் உங்களுக்கு வாய்த்திருக்கும்பொழுது, உங்கள் சக்தியையெல்லாம் அதிற் செலுத்தி நீங்கள் தெய்விக இன்பமாகிய பரமாநந்தத்தைச் சற்றே பருகுங்கள். பிறப்பு இறப்பு ஆகிய சக்கரமானது துன்பம் நிறைந்தது. இந்த ஜன்மத்தை நீங்கள் நன்கு பயன்படுத்திக்கொள்ளுங்கள். இச் சக்கரத்தினின்றும் நீங்கள் விடுபட்டு இறைவனோடு இணைபிரியாத துணைவர்களாய்விடுங்கள்.

உங்கள் மனத்தைக் கடவுள்மீது நிறுத்தினலன்றி, இவ்வுலகில் நீங்கள் பரிசுத்தமுடையவர்களாயிருத்தல் மிகவும் கடினமாகும். மகா மாயையாகிய திவ்விய மாதாவானவள் பலவேறு வகையாக லீலை புரிகின்றாள். அவளால் சிருஷ்டிக்கப்பட்டுள்ள எண்ணிலாத மோக வலைகளிலே விழாமல் தப்புவது எளிதன்று. காமம், கோபம், லோபம் ஆகியவை அநேகமாய் ஜயிக்கப்பட முடியாதவையே. அவற்றை அடக்குவது குழந்தையின் விளையாட்டன்று. தெய்வ பலத்தால் மாத்திரமே நீங்கள் மாயையாகிய வலையை அறுத்துக் கொண்டு விடுதலை பெறலாமேயன்றி வேறெவ்வழியாலும் இயலாது.

ஆகையால்தான் தெய்வ பலத்தைக் கொண்டே நீங்கள் பலமுடையவர்களாக வேண்டும் என்று யான் உங்களைத் தூண்டுகிறேன். அதன் பின்னர், அத்தெய்வத்தின் இச்சைப்படியும்

அவனால் நடத்தப்படுகின்ற வகையிலேயும் உங்கள் வாழ்வின் மீதி நாட்களை நீங்கள் கழிக்கலாம். சாதாரண மாந்தர்க்குத் தங்கள் சுய பலத்தைக்கொண்டே கடவுளை அறிதல் என்பது இயலாத காரியம். யாருக்கு இறைவன் தானே தன்னருளி னாலே காட்சி கொடுப்பானோ அவர்கள் மாத்திரமே அவனை அறியமுடியும். அத்தகைய பாக்கியவான்கள் மாத்திரமே ஸம் ஸாரமாகிய உலக வலையினின்றும் விடுபட்டுச் சுத்த பக்தியை யும் முக்தியையும் பெறுகின்றார்கள்.

ஞான சாதனைகளுக்குக் குறிப்பிட்ட நேரம் முதலியன கொண்ட திட்டம் ஒன்று வைத்துக்கொள்ள வேண்டும். நிஷ்டை (ஒன்றை உறுதியாகப் பற்றி விடாது நடத்தல்) மிகவும் முக்கிய மானதொரு அம்சம். அஃது இல்லாமல் பெரிய காரியம் ஒன் றையும் சாதிக்க முடியாது. உங்களுடைய நிஷ்டையானது எத் தகையதாய் இருக்கவேண்டுமென்றால், நீங்கள் எங்கிருப்பினும், எந்த நிலைமைகளுக்குட்பட் டிருந்தாலும், நீங்கள் ஏற்படுத்திக் கொண்ட நியமங்களை எவ்வளவு கஷ்டமானாலும் தவறாது நிறை வேற்றக்கூடிய வகையினதாய் இருக்கவேண்டும். உங்களுடைய தியானம், உங்களுடைய படிப்பு, உங்களுடைய விசாரணை, உங் களுடைய தூக்கம் ஆகிய இவற்றிற்கெல்லாம் குறிப்பான நேரங் களை நீங்கள் வைத்துக்கொள்ள வேண்டும். ஓர் ஒழுங்கு முறை யில்லாத வாழ்வை நீங்கள் நடத்துவீர்களானால், ஒன்றிலும் நீங் கள் வெற்றியடைய முடியாது. உடற் பயிற்சியானாலும், அல் லது உள்ளப் பயிற்சியானாலும், அதனை அடைவதற்குரிய ஒரே வழி யாதெனில், தவறாது முறைப்படி நடத்தும் ஒழுங்கான வாழ்க்கையேயாகும். மணி காட்டும் கடியாரம் ஒன்று சரியாக ஓடாவிட்டால், கடியார ரிப்பேர் செய்பவன் (பழுது பார்ப்ப வன்) அதனை ஒழுங்காக ஓடும்படி செய்கிறான். பிறகு அது சரி யான மணியைக் காட்டுகின்றது. மனிதனுடைய மனமும் அப் படித்தான். பல காரணங்களினாலே அது முறை தவறி விடு கிறது. நல்லாரோடு இணங்கி யிருப்பதன்மூலம் உங்களுடைய மனத்தை நீங்கள் சரியாய் ஓடச்செய்யலாம். மகான்களுடைய உபதேசங்களுக்கிணங்க உங்களது வாழ்வை அமைத்துக் கொள்ள நீங்கள் முயலுவீர்களானால், வாழ்வில் உண்டாகும் மோக வலைகளிலும், பாசக் குழிகளிலும் விழாது நீங்கள் சுலப

மாக விலகிக்கொள்ளலாம். அவர்களுடைய வழியைப் பின் பற்றி அவர்கள் அடைந்த லக்ஷியத்தை நீங்களும் அடைந்து வாழ்வின் நோக்கத்தை நிறைவேற்றியவர்க ளாவீர்கள்.

மனமானது கட்டுப்படாதிருக்கும் வரையில் சில குறிப் பிட்ட நியமங்களைத் தவருது அனுஷ்டித்து வருதல் மிகவும் அவ சியம். அவைக ளின்றி உங்கள் மனத்தை நீங்கள் ஒருபோதும் ஜயிக்கமுடியாது. மனத்தின் இயல்பான குணம் காரியங்களைச் செய்யாமல் தப்பித்துக்கொள்ளப் பார்ப்பது. ஆனால், நீங்கள் ஓர் ஒழுங்குமுறையை வகுத்துக்கொண்டு விட்டால், "இது உனக்கேற்படுத்தப்பட்டுள்ள நியமம்; நீ விரும்பினாலும் விரும் பாவிடினும் இதைக் கட்டாயம் அனுசரிக்க வேண்டும்" என்று உங்கள் மனத்துக்குச் சொல்ல வேண்டும். இவ்வாருக, உங் கள் மனத்தைக் கட்டுப்படுத்த நீங்கள் முயலவேண்டும். இதில் நீங்கள் வெற்றியடைந்து விட்டீர்களானல், அதற்குமேல் வேறெந்த நியமமும் நீங்கள் அனுஷ்டிக்க வேண்டியதில்லை. நியமங்களைக் கடந்த நிலையை நீங்கள் அடைந்து விடுவீர்கள்.

ஆயுட் காலமானது ஆற்றைப்போல வேகமாக ஓடிக்கொண் டிருக்கிறது. ஒருதரம் கழிந்துபோன நாள் மறுதரம் வரப் போவதில்லை. ஆகையால் உங்கள் காலத்தை நன்ருய்ப் பயன் படுத்திக்கொள்ளுங்கள். கடைசிக்காலத்தில் "ஐயோ! ஐயோ!!" என்று கதறுவதால் ஒரு பயனுமில்லை. ஆகையால் இப்பொ ழுதே எழுந்து நின்று வேலை செய்யுங்கள். இலட்சியத்தை அடைவது, அல்லது அம்முயற்சியிலேயே உயிரை விடுவது என்று தீர்மானம் செய்துகொள்ளுங்கள். சாவு நிச்சயம். அது இன்றே வரலாம். அல்லது நாளை வரலாம். கடவுளைக் காணும் முயற்சியிலே நீங்கள் உயிரை யிழந்தால், அது நஷ்டமாகாது; ஆனல் நிச்சயமாக லாபமே யாகும்.

கடவுளினிடமே மனத்தை நிறுத்த முயலுங்கள்; அவனை அறிவதென்றே உறுதியாகத் தீர்மானம் செய்யுங்கள். இந்த உலகத்தில் என்ன இன்பம் இருக்கின்றது? எல்லாம் துன்பமும் துயரமுமே அன்றி வேறில்லை. உலகை மதிப்பற்றதெனத் தள் ளுங்கள். எல்லாத் துன்பத் துயரங்களையும் கடந்து நீங்கள் செல்லவேண்டும். கடவுட் காட்சி ஒருதரம் கிடைத்து விட்

டால் நீங்கள் நித்தியானந்தத்தைப் பெற்றவர்களாவீர்கள். இந்திரிய சுகங்களினிடத்துள்ள ஆசைகளெல்லாம் உங்களை விட்டு நீங்கிவிடும். நீங்கள் கடவுளினிடம் ஒருதரம் வந்துவிடுவீர்களானால், பின் பயத்துக்கும் கவலைக்கும் இடமே யில்லை.

உலகப் பொருள்கள் எல்லாவற்றையும் விட்டுவிட்டுக் கடவுளையே நாடுங்கள்; வேறோரிடமின்றி அவனிடமே இருப்புக் கொள்ளுங்கள்.

---

## 13

## உலகமும் கடவுளும்

[பத்ராக், நாயாபஜார் பங்களாவில் நடந்த சம்பாஷணை]

சுவாமிகள் :—கடவுள் கற்பதரு (அடியில் உட்கார்ந்து கொண்டு யார் எதை விரும்பினாலும் அதைத் தருகின்ற மரம்). ஒருவன் எதைக் கேட்டாலும் அதை அவரிடமிருந்து பெறலாம். ஆனாலும் பெறுதற்கரிய பேறாகிய மனிதப் பிறவியை ஒருவன் பெற்றிருந்தும், அவன் கடவுளுடைய பாதகமலங்களில் தன் மனத்தைச் செலுத்த விரும்புவதில்லை. அதற்குப் பதிலாக, ஆழ்ந்த ஸம்ஸாரக் கடலினுள் தானே மூழ்கி, “ஆ! நான் எவ்வளவு ஆனந்தத்தோடிருக்கிறேன்!” என்று சொல்லிக்கொள்ளுகிறான். கடவுளும் அவனை அதே நிலைமையில் இருக்கும்படி விட்டுவிடுகிறார். துன்பமும் துயரமும் ஆகிய அலைகளால் மோதப்பட்டு, கழிந்த நாட்களைக் குறித்து வருத்தமுற்று, “ஐயோ! என்ன செய்தேன் நான்!” என்று அவன் கதறுகிற வரையில் அவனை இஷ்டம்போல் இருக்க விட்டு, அதன்பின்னர், அவனைத் தனது குற்றத்தை உணரும்படி அவர் செய்கின்றார். மனிதனே கற்ப தருவின் நிழலில் உட்கார்ந்திருப்பதைப் போன்றிருக்கின்றான். அவன் ஒரு தேவதையாக இருக்க விரும்பினால், அவ்வாறே இருக்கக் கூடும். ஒரு மிருகமாக இருக்க விரும்புவானாயின், அப்படியும் இருக்கலாம்.

மனிதனுக்கு வித்தை அவித்தை ஆகிய இரண்டையும் பகவான் கொடுத்திருக்கிறார். வித்தை என்பது விவேகமும் வைராக்

கியமு மாகும். அதைக்கொண்டு மனிதன் கடவுளுடைய கிருபையைப் பெறலாம். அவித்தை என்றால் காமம், குரோதம், லோபம், மோகம், மதம், மாச்சரியம் என்பனவாம். அவித்தையானது மனிதனை மிருகத்தின் நிலைமைக்குக் கொண்டுபோய் விடுகின்றது. வித்தையை வளர்ப்பதால் அவித்தை ஒழிந்து, மனிதன் பரமானந்தப் பிராப்தி அடையத் தகுதியுள்ளவனாகின்றான். அவித்தை வளருமானால், "நான்," "எனது" என்னும் எண்ணத்தைப் பலப்படுத்தி, அவனை மேலும் மேலும் உலக பந்தத்தில் அழுத்துகின்றது. கடவுளினின்றும் அவன் நாளுக்கு நாள் அதிகதூரம் நடத்தப்படுகிறான். அநேக துன்பங்களையும், கஷ்டங்களையும் அவன் வகிக்க வேண்டியவனாகிறான். மனிதனிடம் வித்தை, அவித்தை ஆகிய இரண்டும் இருப்பதோடன்றி, அவ் விரண்டையும் பகுத்தறியும் சக்தியுங் கூட இருக்கின்றது. அவன் எதை ஏற்கிறானோ அதைப் பொறுத்திருக்கின்றன அவனுடைய வாழ்வின் வெற்றியும் தோல்வியும்.

நீங்கள் படும் துன்பங்களுக்குக் கடவுளிடம் பொறுப்பை ஏற்றுவது குற்றமாகும். உங்கள் இச்சைக்கும் இன்பத்துக்கும் உகந்ததான ஒரு மார்க்கத்தை நீங்கள் கைக்கொண்டீர்கள்; நீங்கள் கைக்கொண்ட மார்க்கத்தின் விளைவையே இப்போது நீங்கள் அனுபவிக்கிறீர்கள். கடவுள்மீது நீங்கள் எப்படிக் குற்றத்தைச் சாட்டமுடியும்? ஒரு நொடிப்பொழுது சுகத்துக்காக மற்றைய எல்லாவற்றையும் நீங்கள் மறந்தீர்கள். சரியா, தப்பா என்று யோசிக்க நீங்கள் சற்றும் பொறுக்கவில்லை. உங்கள் கையை நெருப்பில் வைத்தால், அது கையைச் சுட்டுவிடுவது சுபாவந்தானே. அது நெருப்பினுடைய குற்றமா? இல்லை. அதற்கு நீங்கள்தான் காரணம். ஸ்ரீ ராமகிருஷ்ணர் இவ்வண்ணம் கூறுவது வழக்கம்: "ஒரு விளக்கு எரிந்துகொண்டிருக்கிறது. அவ் விளக்கின் வெளிச்சத்தைக் கொண்டு சிலர் பாகவதம் படிக்கலாம்; வேறு சிலர் பொய்ப் பத்திரம் தயாரிக்கலாம்; அல்லது வேறு தீய காரியம் செய்யலாம். அதற்காக விளக்கின் மீது குற்றம் சாட்டுவது எப்படி?" நல்லது, கெட்டது ஆகிய இரண்டு வழிகளையும் கடவுள் மனிதர்முன் வைத்திருக்கின்றார். உங்களுக்கு எது விருப்பமோ அதை நீங்கள் கடைப்பிடியுங்கள்.

நீங்கள் எதைக் கருதுகின்றீர்களோ அதுவே ஆகின்றீர்கள். விவேகம், வைராக்கியம் ஆகிய இரண்டின் உதவியைக் கொண்டு கடவுளை அறியுங்கள்; அறிந்து அளவிலடங்காத ஆநந்தத்தை அனுபவித்தற்குரிய அதிகாரிகளாகுங்கள். உலக விஷயங்களைப் பின்பற்றி ஓடுவீர்களானால், ஏதோ கொஞ்ச காலம் இந்திரிய சுகங்களை நீங்கள் அனுபவிப்பீர்கள் என்பதில் சந்தேகமில்லை. ஆனால் உங்கள் எதிர்கால வாழ்க்கையானது இருள் சூழ்ந்து நிற்க, முடிவில்லாத துன்ப துயரங்களில் நீங்கள் மூழ்கிச் செல்லவேண்டி வரும் என்பது நிச்சயமெனக் கொள்ளுங்கள். உங்களுக்கு இன்பம் வேண்டுமானால் நீங்கள் அத்துடன் துன்பத்தையும் அடையுமாறு இவ்வுலகமானது அமைக்கப்பட்டிருக்கிறது. நீங்கள் விரும்பினாலும் விரும்பாவிட்டாலும், இவற்றுள் ஒன்றைவிட்டு ஒன்றை மட்டும் பெறுவதென்பது இயலாது.

"மலய மாருதம் வீசும்போது மரங்கள் எல்லாம் சந்தன மரங்களாய்விடும் என்றும், ஆனால் கெட்டியில்லாத மூங்கில், வாழை போன்ற மரங்கள் மாத்திரம் முன்னிருந்தது போலவே இருந்துவிடும் என்றும் பொதுவாக மக்கள் கூறுவார்கள். அதுபோல இவ்வுலகில் இருவகையான மனிதர்கள் இருக்கின்றார்கள்" என்று ஸ்ரீராமகிருஷ்ணர் சொல்வது வழக்கம். இவ் விருவகைப்பட்ட மனிதரில் முதல் வகையினரோ வெகு சுலபமாக ஆத்ம போதனைகளால் நன்மை யடைகின்றனர்; விவேகமும் வைராக்கியமும் அவர்களிடம் உண்டாகின்றன. உலக சுகத்தைத் துச்சமெனக் கருதிக் கடவுள் கிருபையைப் பெற அவர்கள் ஆத்திரப்படுகின்றனர். உயிர் போனாலும் சரி, கடவுளைக் காண்பதென்றும், வாழ்வின் ரகசியத்தை உணர்ந்தே தீருவதென்றும் அவர்கள் உறுதிகொண்டிருக்கிறார்கள். இப்படிப்பட்ட உறுதியான தீர்மானத்துடன் அவர்கள் தங்கள் சாதனையை ஆரம்பித்து, முடிவில் வெற்றியடைகின்றார்கள். இரண்டாவது வகை மனிதரோ வாழ்வில் ஏற்படும் துன்ப துயரங்களாலும் விழித்துக்கொள்வதில்லை; அன்றி, உயர்ந்த ஆத்மீய எண்ணங்களாலுங்கூட அவர்கள் ஒருகாலும் விழித்துக் கொள்ள மாட்டார்கள். தாங்கள் எப்போதும் சாசுவதமாக வாழ்ந்திருக்கப் போவதாக எண்ணுகிறார்கள்; தங்களையில்லாது

உலகம் நடக்காது என்றும் அவர்கள் கற்பனை செய்துகொண்டிருக்கிறார்கள். "என் கையில் இருப்பது எதுவோ அதை நான் முற்றிலும் அனுபவிக்க வேண்டும்; இல்லாவிட்டால் நான் முட்டாள் ஆவேன்,"—என்று இவ்வண்ணம் எண்ணிக்கொண்டு அஞ்ஞானமும் துன்பமும் ஆகிய ஆழ்கடலில் அழுந்திவிடுகிறார்கள்.

நீங்கள் விரும்புவது எது? சந்தனத்தின் பரிமளமான வாசனையா, அல்லது கசுமலத்தின் கெட்ட நாற்றமா? உங்களுக்கு வேண்டியது சாந்தியா அல்லது கவலையா? எது வேண்டுமென்பதைத் திட்டமாக நிச்சயப்படுத்துங்கள்; அதைப் பெறுவதற்காக, முயற்சி செய்யுங்கள். காலமானது வேகமாய் ஓடும் ஓர் ஆற்றைப்போலக் கழிந்து சென்றுகொண்டே யிருக்கிறது. காலங் கழிந்துபோன பின்னர், கடந்த நாளை எண்ணிக் கதறுவதால் பிரயோஜனமில்லை. ஒரு நொடிப்பொழுதையும் வீணாக்காமல், நிகழ்காலத்தை உயர்ந்த முறையில் பயன்படுத்திக் கொள்ளுங்கள்.

வேறொன்றையும் கருதாது எப்பொழுதும் இடைவிடாது கடவுளையே எண்ணிக்கொண்டிருக்கும்படியான வழியில் உங்கள் மனத்தை நீங்கள் பழக்குங்கள். உங்கள் வாழ்நாட்கள் கணக்கிடப்பட்டிருக்கின்றன; அவை வேகமாக ஓடிக்கொண்டிருக்கின்றன. உங்கள் காலத்தை வீணாக்காதீர்கள்.

"ஓ பகவானே! எனக்கு ஞானத்தைக் கொடு; என்னை உன்னுடையவனாக ஆக்கிக்கொள்," என்று மனப்பூர்வமாக நீங்கள் கடவுளைப் பிரார்த்தியுங்கள். "நான்", "எனது" என்பதற்குப் பதிலாக, "நீ", "உனது" என்பதைக் கொள்ளுங்கள். நீங்கள் இறக்கும் காலத்தில், உங்களுடையது என்று நீங்கள் எண்ணிக் களிக்கும் பொருள் ஒன்றேனும் உங்களோடு கூட வராது. நீங்கள் யாரை உங்கள் அன்புக்குரியவர்களாய் எண்ணிக்கொண்டிருக்கிறீர்களோ அவர்கள் எல்லாம், தங்கள் வேளை வரும்போது, உங்களைப் பொருட் படுத்தாமலேயே போய்விடுவார்கள். எல்லாவற்றையும் விட்டுவிட்டுத் தெரியாத ஓர் இடத்துக்கு நீங்கள் போய்த் தீரவேண்டும். "நான்", "எனது", என்று எவ்வளவு அதிகமாக நீங்கள் எண்ணுகிறீர்

களோ அவ்வளவு அதிகமாக நீங்கள் உங்களைப் பந்தத்துக்குள்ளாக்கிக் கொள்ளுகிறீர்கள். இந்தச் சம்ஸாரத்தின் பொருட்டு உங்கள் வாழ்நாள் முழுவதையும் செலவழிப்பதற்கு, அதில் என்ன இருக்கிறது? பிறப்பு இறப்பாகிய கடலை நீங்கள் தாண்டுவதற்கு இவ்வுலக வாழ்க்கையானது உதவி செய்யுமா? மரணத்தின்பின் நேரக்கூடிய துன்பங்களினின்று அது உங்களைக் காப்பாற்றுமா? எந்தக் காரியத்தை முன்னிட்டு நீங்கள் இந்தப் பிறவியை எடுத்திருக்கின்றீர்களோ அந்தக் காரியத்தை நிறைவேற்றாமற் போவதினும் பார்க்கப் பெரிய துர்ப்பாக்கியம் வேறொன்று உங்களுக்கு ஏற்படக்கூடியது உண்டா? தீவிரமான முயற்சியைக்கொண்டு, உங்கள் லக்ஷியத்தை நீங்கள் அடையும் வண்ணம், பக்தி சிரத்தையோடு பகவானைப் பிரார்த்தியுங்கள்.

தக்ஷிணேசுவர ஆலயத்திலே ஸ்ரீராமகிருஷ்ணர் என்ன செய்துவந்தார் என்பதை நீங்கள் கேட்டதில்லையா? "ஓ அன்னையே, இன்னொரு நாளும் கழிந்துவிட்டதே! இன்னும் எனக்கு உன் காட்சியைத் தந்தருளவில்லையே!" என்று கூறி, திவ்விய மாதாவின் தரிசனத்தை ஒருமுறை காணும் பொருட்டு, அவர் எவ்வளவு துக்கத்தோடு கதறி வந்தார்! தீவிரமான ஆசையோடு கடவுளை நீங்கள் பிரார்த்தித்து அழையுங்கள். இவ்வுலகம் துன்ப வீடே யல்லாது வேறென்ன? இங்கே உங்கள் வாழ்நாளின் பெரும் பகுதியைத் துன்பத்திலும் துயரத்திலும் கழித்துவிட்டீர்கள்; இனிமேலும் அதையே செய்ய நீங்கள் விரும்புகின்றீர்களா?

ஸ்ரீராமகிருஷ்ணருடைய திருவடி நிழலை நீங்கள் அடைந்திருக்கின்றீர்கள். அவருடைய அருள் உங்களுக்குக் கிடைத்திருக்கின்றது என்பதை உணருங்கள். உங்களுக்குக் கிடைத்த அவ்வருளை நீங்கள் நன்கு பயன்படுத்திக் கொள்ளுங்கள். வாழ்வு, மரணம் என்னும் சிக்கலைத் தீர்த்து நீங்கள் நித்தியானந்தத்தைப் பெறாமற் போவீர்களானால், உண்மையில் நீங்கள் துர்ப்பாக்கியவான்களே யாவீர்கள். இக்காலத்துக்கேற்றவர்கள் நீங்கள். கால தர்மத்தை நீங்கள் கண்டு கொண்டீர்கள். அதனுடைய பயன் முழுவதையும் பெற நீங்கள் தவறாதீர்கள்.

ஸ்ரீராமகிருஷ்ணரைப்போல, இவ்வளவு எளிதாகவும் சுலபமாகவும் எவரும் எந்தக் காலத்திலும் வழிகாட்டியதில்லை. இந்த நல்ல தருணத்தை நீங்கள் நழுவ விடுவீர்களானால், நீண்ட நாளைக்கு நீங்கள் கஷ்டப்பட நேரிடும்.

சிரத்தையும் பக்தியுமாகிய கப்பற்பாயை விரித்து, இப்போது வீசிக்கொண்டிருக்கும் ஆத்மீயமாகிய காற்றின் உதவியால், உங்கள் லக்ஷியத்தை நோக்கிச் செலுத்துங்கள். இதைச் செய்தால் உங்கள் கப்பலானது போய்ச் சேரவேண்டிய இடத்துக்கு வெகு சீக்கிரத்தில் போய்விடும். அவர் உங்களுக்காகக் காத்துக்கொண்டிருக்கிறார். எழுந்திருங்கள்! விழித்துக்கொள்ளுங்கள்! அளவில்லாத சக்தி உங்களுக்குள்ளே இருக்கின்றது. உறுதியான சுய நம்பிக்கை கொண்டவர்களாகி, "பகவானுடைய திருநாமத்தைக் கேட்டேன்; அவருடைய திருவடியைப் புகலிடமாகக் கொண்டேன்; பயமும் பலஹீனமும் என்னிடம் வருவதற்கு இடமேது? அவரருளாலே இந்த ஜென்மத்திலேயே யான் அவரை அடைவேன்" என்று கூறுங்கள். பின்னால் திரும்பிப் பார்க்காதீர்கள். முன்னோக்கியே செல்லுங்கள். அவருடைய தரிசனத்தைக் காணுங்கள். இப்படியாக உங்கள் வாழ்வின் நோக்கத்தை நிறைவேற்றி எல்லையில்லாத ஆநந்தத்தை அனுபவியுங்கள்.

## 14

## மனித சுபாவம்

[இடம்: ஸ்ரீ ராமகிருஷ்ண சேவாசிரமம், கங்கல், ஹரித்வாரம்.]

சுவாமிகள்:—இந்த ஸ்தலம் மிகவும் பவித்ரமானது. இந்த இடத்திலே தியானத்தில் மனத்தை ஒருமைப்படுத்துவது கஷ்டமன்று. இங்கு நிறைந்துள்ள ஆகாயமே பரிசுத்தமானது. புனித கங்கையும், கம்பீரமாய்த் தோன்றும் இமயமலையும் இயற்கையாகவே மனத்துக்குச் சாந்தியைக் கொடுத்துத் தியானத்திற் செலுத்துகின்றன. எப்போதும் ஒலித்துக்கொண்டிருக்கும் அநாஹத ஓங்காரத்வனியை இங்கே கேட்கலாம். இப்படிப்

பட்ட புண்ணிய ஸ்தலத்துக்கு வந்தும், நீங்கள் வீணே தூக்கத்திலும் சோம்பலிலும் காலத்தைக் கழிப்பீர்களானால், அது உண்மையில் நிர்ப்பாக்கியமே யாகும். தியான சாதனைகளைச் செய்துகொண்டே இந்த இடத்தில் இறந்துபோவது மிக மிக நன்மையானது.

மனித ஜன்மம் ஞானமும் பக்தியும் அடைதற்பொருட்டே; வீணாக உயிர் வாழ்வதால் லாபம் என்ன? மிருகங்களைப்போல் தின்று, தூங்கி, பல குழந்தை குட்டிகளைப் பெறுவதற்குத்தானா இந்த ஜீவன்? மனித சரீரத்தில் பகவான் விசேஷமாகப் பிரகாசிக்கின்றார். இதைக்கண்டு அறிதற்கு முயலுங்கள். ஸ்ரீ ராமகிருஷ்ணருடைய சிஷ்யர்கள் சத்தியத்தை அறிவதற்காக எவ்வளவு கடோரமான தவம் செய்திருக்கிறார்கள் என்பதை நீங்கள் கேட்டதில்லையா? அவர்கள் ஸ்ரீ ராமகிருஷ்ணரிடத்திலே ஆத்மிக அக்கினி நன்கு ஜ்வலித்துக் கொண்டிருந்ததைக் கண்டார்கள். அதனாலே அவர்களால் அவ்வளவு தவம் செய்ய முடிந்தது. உங்களால் அவர்கள் செய்த அளவு செய்யமுடியாதென்றாலும், முயற்சி செய்யுங்கள்.

உங்களுடைய சாதனை பஜனைகளுக்குச் சௌகரியம் ஏற்படும் என்றே, சுவாமிஜி தமது பிராணனைத் தந்து இந்த மடத்தை ஏற்படுத்தியிருக்கின்றார். ஆஹா! உங்களுக்கு நன்மை செய்வதற்காகவே அளவுக்கு மீறிய சிரமத்தை மேற்கொண்டதனால், அவருடைய ஆயுட்காலமும் அவ்வளவு குறைந்துபோயிற்று. எல்லாரிடமும் எத்தகைய அன்பு அவருக்கு இருந்தது! நீங்கள் நன்றிகெட்டவர்கள் ஆய்விடாதீர்கள். இந்திய நாட்டினிடத்து அவருக்குப் பெரும் நம்பிக்கை இருந்தது. இந்திய இளைஞர்களாகிய உங்களிடம் அவர் தமது பெரும் காரியத்தை, அரிய புண்ணியப் பொறுப்பாக ஒப்படைத்துச் சென்றிருக்கின்றார். நீங்கள் விசுவாஸ காதகர்கள் ஆய்விடாதீர்கள். ஸ்ரீ ராமகிருஷ்ணர் அவர் மூலமாகவே உலகத்தில் பிரகாசமுற்றார். அவருடைய வார்த்தைகளை ஸ்ரீ ராமகிருஷ்ணருடைய வார்த்தைகள் என்றே உணருங்கள். ஸ்ரீ ராமகிருஷ்ணர் எவ்வளவு பெருமை வாய்ந்தவர் என்பது சாதாரண மனிதருடைய மனதுக்கும் எட்டும்படியாக, சுவாமிஜி

ஸ்ரீ ராமகிருஷ்ணரையும் அவருடைய லக்ஷியங்களையும் உலகத்தாருக்கு விளக்கியுள்ளார். அருள் பெற்ற ஜீவர்கள் அனைவரும் அவருடைய கொடியின்கீழ் வந்தே சேரவேண்டும்.

சுவாமிஜியின் நூல்களை நன்றாகப் படியுங்கள். எந்த இடத்தில் நன்றாக அர்த்தமாகவில்லையோ அதை சு............ இடமிருந்தேனும் கேட்டுத் தெரிந்துகொள்ளுங்கள். சாதாரண மனிதர்களுக்கும் விளங்கும்படியான முறையில் சுவாமிஜி ஸ்ரீ ராமகிருஷ்ணருடைய இலக்ஷியங்களை விளக்கியிருக்கின்றார். சுவாமிஜி எடுத்தோதிய உபதேசங்களின் வாயிலாக அல்லாது, வேறுவகையில் ஸ்ரீ ராமகிருஷ்ணருடைய உபதேசங்களை அறிய முயலுவது பயித்தியக்காரத்தனமாகும். சுவாமிஜியின் நூல்களையும் ஸ்ரீ ராமகிருஷ்ணருடைய உபதேசங்களையும் திரும்பத் திரும்பப் படியுங்கள் ; தியானத்திலும் ஜெபத்திலும் ஆழ்ந்து மூழ்குங்கள். இப்போது உங்கள் மனத்தை ஸ்திரப் படுத்த முடியாவிட்டால், பின்னால் கழிந்தது நோக்கி வருந்த வேண்டியிருக்கும். உங்கள் வாழ்க்கையில் ஸர்வோத்தமமான பாகம் இதுதான். இதனை நல்ல முறையில் பயன் படுத்துங்கள். மனத்தை ஒருமுறை ஆத்மீய வாழ்வில் ஸ்திரப்படுத்திவிட்டால், பிறகு பயம் இல்லை. அப்போது அதனை எந்தப் பக்கம் திருப்பினாலும் திரும்பும். பழக்கிய குதிரையைப் போல் மனத்தை வசப் படுத்தவேண்டும். மனம் வசப்பட்டுவிட்டால், காரியம் வெகு தூரம் கைகூடிவிட்டதாகும். மனத்துக்கு எப்போதும் சவுக்கடி கொடுத்துக்கொண்டிருங்கள். கொஞ்சம் இடக்குச் செய்தாலும் பலமாகச் சவுக்கடி கொடுங்கள். எப்போதும் தீவிரமாக அடக்குங்கள். இப்பக்கம் அப்பக்கம் ஒரு மயிரிழையாவது பிசக விடாதீர்கள்.

சாதனை பஜனைகளைச் செய்யும் சாதகர்கள் ஆரம்ப தசையில் சில நியமங்களை—'இவ்வளவு நேரம் ஜபம் செய்வேன்' 'இவ்வளவு நேரம் தியானம் செய்வேன்' 'இவ்வளவு நேரம் சாஸ்திரம் படிப்பேன்' முதலான நியமங்களை—வைத்துக் கொள்ளுதல் மிகவும் நலம். "பிடித்தாலும் பிடிக்காவிட்டாலும், என்னுடைய நியமங்களின்படி நான் நடந்தே ஆக வேண்டும்" என்ற இம்மாதிரியான ஒரு பிரதிக்ஞை செய்து கொள்ள

வேண்டும். இவ்விதம் சிலநாள் கழிந்தால், பிறகு ஓர் அப்பியாசம் உண்டாய்விடும். இப்போது எப்படி தியானம் ஜபம் செய்வதில் உற்சாகமில்லையோ, அப்படியின்றி, அப்போது அதற்கு நேர் மாறான நிலைமை ஏற்படும்; தியானம் ஜபம் செய்யாவிட்டால் மனம் கஷ்டத்தை அடையும். மனம் இவ்வித நிலையை எப்போது அடையுமோ அப்போது நீங்கள் லக்ஷியத்தை நோக்கி முன்னேறிச் சென்றுகொண்டிருக்கின்றீர்கள் என்று உணரவேண்டும். சாப்பாடு கிடைக்காவிடில், தூக்கம் இல்லாவிடில் எவ்விதம் கஷ்டமடைந்து மனம் அலைகிறதோ, அவ்வித நிலைமையை பகவானுக்காக மனம் அடையும்போது, அவர் உங்களுக்கு அருகாமையிலே வந்துவிட்டார் என்று உணருங்கள்.

முதலில் தெய்விக இன்பமாகிய அமிருதத்தைச் சுவைத்து அழியாத் தன்மையை அடையுங்கள். பின்னர் எது வந்தாலும் வரட்டும். அவர் உங்களைச் சிங்காதனத்தின்மீது வைத்தாலும் சரி, அல்லது நடுத்தெருவிலே நிறுத்தினாலும் சரி, பாதகம் இல்லை. ஸ்பரிச வேதியால் தீண்டப்பட்டு இரும்பானது பொன்னாக மாறிவிட்டால், அதைப் பத்திரமாகப் பெட்டியிலே பூட்டிவைத்தாலும் சரி, அல்லது மண்ணிலே போட்டுவைத்தாலும் சரி. பொன் பொன்னாகவே இருக்கும். "அத்வைத ஞானத்தை முன்றானையிலே முடிந்து வைத்துக்கொண்டு எது இச்சையோ அதைச் செய்," என்று ஸ்ரீ ராமகிருஷ்ணர் கூறுவது வழக்கம்; அதாவது, ஞானத்தையும் பக்தியையும் பெற்றுக் கடவுளை அறிந்தால், நீங்கள் எந்த வேலையைச் செய்யப்போனாலும், அப்போது தீமை ஒன்றும் உங்களால் செய்யமுடியாது; தீய வழிக்கு உங்கள் கால் போகாது.

ஸன்மார்க்கத்தில் நிற்பதற்கு இடையூறுகள் அநேகம். அன்னை—மகா மாயை—தன் பிடிப்பிலிருந்து மக்களை இலேசில் விடுவிப்பதில்லை. அவளுடைய கிருபையைப் பெறுவதற்காக ஒருவன் அழவேண்டும்; உள்ளுருகிப் பிரார்த்திக்க வேண்டும். முன் ஜன்மங்களில் சேர்த்த சம்ஸ்காரங்கள் (கர்ம வித்துக்கள்) எவ்வளவு இருக்கின்றன? இன்னும் இந்த ஜன்மத்தில் புதிய சம்ஸ்காரங்கள் சேர்க்கப்பட்டு வருகின்றன.

ஆயுள் முழுவதும் இந்த சம்ஸ்காரங்களுடன் போராட வேண்டும். எவ்வளவு அதிகமாக நீங்கள் அவற்றோடு போராடு வீர்களோ அவ்வளவு அதிகமான பலத்தோடு அவை உங்களைத் தாக்கும். அப்போது தங்களுடைய நோக்கத்தினின்றும் பிறழாது லக்ஷியத்தை உறுதியாகப் பற்றி நடப்பவர்கள் யாரோ, அவர்களே ஜயமடைவார்கள்.

மனிதனுக்குள்ளே நல்லது கெட்டது என்ற இருவகை விருத்திகள் இருக்கின்றன. இந்த இரண்டுக்கும் சதா போராட்டம் இருந்துகொண்டே இருக்கிறது. ஒன்று உலக போகங்களின் பக்கம் இழுக்க விரும்புகிறது; மற்றொன்று தியாகத்தின் பக்கம் இழுத்துச் செல்ல விரும்புகிறது. இவற்றில் எது வெற்றியை அடையுமோ அதைப் பொறுத்திருக்கின்றன, மனிதனுடைய மனிதத் தன்மையும் மிருகத் தன்மையும்.

போகங்கள் நிறைந்த உலகத்திலே, மனிதன், தன் கண்ணெதிரில் அவற்றை அனுபவிக்கப் பல சாதனங்கள் இருப்பதைக் கண்டு, தன்னை மறந்து அவற்றில் மூழ்கிவிடுகிறான்; அதனால், இன்னொரு பக்கம் துன்பம் இருக்கின்றதென்பதை அறியும் அவசியமும் அவனுக்குத் தோன்றுவதில்லை. "வருங்காலம் எப்படியிருக்கும் என்று யாரும் சொல்லமுடியாது. ஆகவே, உள்ளதை அனுபவிக்காமல் விடுவது எதற்காக?" என்று நினைக்கிறான். அதாவது, "கடவுள் தரிசனம் கிடைக்குமோ கிடைக்காதோ, நித்தியானந்தம் அடைவேனோ அடைய மாட்டேனோ என்பது யாருக்கும் தெரியாது. ஆனால் உலக இன்பத்தை அனுபவிப்பதோ என் கையில் உள்ளது. இதை ஏன் விடுவேன்?" என்று எண்ணி விளக்கில் விழும் விட்டில் பூச்சியைப் போல் விழுகின்றான். முடிவில் தீப்பிடித்து ஜ்வாலை விட்டு எரிய ஆரம்பிக்கும்போது, அதாவது, தான்பட்ட கஷ்டத்தால், உலக போகங்கள் துன்ப துயரங்களைக் கொடுக்கின்றனவே யல்லாது சாந்தியையும் ஆநந்தத்தையும் கொடுக்கவில்லையே என்று உணர நேரிட்டபோது, "ஆ! என்ன செய்துவிட்டேன்?" என்று கதறுகிறான். அப்போது சாந்தியை நாடுகிறான். காலம் தவறிவிட்ட பிறகு சாந்தி எங்கிருந்து கிடைக்கும்? அடக்கம் இல்லாத போக வாழ்வில் இறங்கி மனிதன் இந்திரிய வசமாகித்

தானே பந்தத்துக்குட்பட்டு விடுகிறான். அதனால் பிறகு அவனுக்கு இச்சை யிருந்தாலுங்கூட ஒன்றும் செய்ய இயலாதவனாய்விடுகிறான்.

## 15

## கடவுளையே நாடு

ஒவ்வொருவரும் வேண்டுவது இன்பத்தைத்தான். யார் தான் துன்பத்தையும் துயரத்தையும் பெற விரும்புகின்றனர்? இன்பம் எங்கிருந்து கிடைக்கும்? சகல இன்பத்துக்கும் மூலமாய் இருக்கும் பகவானைத் தூரத் தள்ளிவிட்டு, அநித்யமான சில அற்ப விஷயங்களைப் பின்பற்றி ஓடினால் இன்பம் கிடைக்குமா? அவர் அநேகவிதமான விளையாட்டுப் பொருள்களைத் தந்து தம்மை மறக்கச் செய்திருக்கின்றார்; அவ்விளையாட்டுப் பொருள்களை யெல்லாம் தூக்கி எறிந்து விட்டு, அவரைக் கூப்பிடுங்கள்; அவர் ஓடிவந்து உங்களைத் தூக்கி இடுப்பில் வைத்துக்கொள்வார். விளையாட்டுச் சாமானை நாடினால் விளையாட்டுச் சாமான் கிடைக்கும்; அவரை நாடுவீர்களானால் அவரை அடைவீர்கள்—ஒன்று வேண்டுமானால் மற்றொன்றை விடவேண்டும்.

விளையாட்டுத்தான் அநேகந்தரம் ஆடியாயிற்றே—இந்தத் தடவை விளையாட்டை விட்டுவிட்டு அன்னையை அழையுங்கள். நீங்கள் பார்த்ததில்லையா? எந்தக் குழந்தைக்கு விளையாட்டில் விருப்பமோ, அதற்குத் தாய் விளையாட்டுச் சாமான் ஏதாவது கொடுத்துத் தன்னை மறக்கவைக்கிறாள்; பின், எந்தக் குழந்தைக்கு விளையாட்டில் ஆசையில்லையோ, எது விளையாடவும் விரும்பவில்லையோ, அந்தக் குழந்தையைத் தாய் தன் கிட்டவே வைத்துக்கொள்ளுகிறாள்; இடுப்பில் தூக்கி வைத்துக்கொண்டு உலாவுகிறாள். தாயின் இடுப்பில் இருந்தால் எவ்வளவு குஷி, எவ்வளவு ஆநந்தம்? எவன் தாயின் இடுப்பில் இருக்கிறானோ அவனுக்குத்தான் அது தெரியும். எந்தக் குழந்தை விளையாட்டில் மூழ்கித் தாயை மறந்துவிடுகிறதோ, அதற்குத் தாயிட

மிருந்து கிடைப்பது வெறும் விளையாட்டுச் சாமான்தானே. மேலும் விளையாட்டுச் சாமானே பல அநர்த்தங்களை விளைவிக்கின்றது. ஒரு சமயம் கையிலிருந்து கீழேவிழுந்து உடைந்து போகிறது ; அல்லது ஒருவேளை அதைக்கொண்டு விளையாடும் பிள்ளைகளுக்குள்ளே சண்டை ஏற்பட்டுவிடுகிறது ; அதிலிருந்து இரண்டு அறை விழுகிறது. இந்தவிதமாக நானுவகைக் கஷ்டங்கள் அடையவேண்டியதாகின்றது. எந்தக் குழந்தை தாயின் இடுப்பில் இருக்கிறதோ அதற்கு இந்தத் தொல்லைகள் எல்லாம் இல்லை. "எனக்கு எப்போது என்னென்ன வேண்டுமோ அதையெல்லாம் தாயே தருவாள்," என்று அக்குழந்தை அறிந்திருக்கிறது.

ஸ்ரீ ராமகிருஷ்ணர் கூறிய மாந்தோட்டத்துக் கதை மிக நல்ல கதை. "மாம்பழம் சாப்பிடவந்தாய் ; மாம்பழத்தைச் சாப்பிடாமல்—மரத்தில் எத்தனை கிளை, எத்தனை இலை என்றெல்லாம் ஆராய்ந்து பார்ப்பது எதற்காக? வயிறு நிறைய மாம்பழம் சாப்பிட்டுத் திருப்தி அடை." உலகத்தில் பிறந்தீர்கள், பகவானை அடைவதற்காக. அவரை முன்னதாகப் பெற்று பாக்கிய முற்றவர்களாகுங்கள், உங்கள் சொந்தக் காரியத்தை முதலில் கருதுங்கள் ; உங்கள் வாழ்க்கைப் பிரயாணத்துக்கு வேண்டியது எதுவோ, அதை முதலில் தேடிக்கொள்ளுங்கள். நீங்கள் இங்கே வந்திருப்பது எதற்காக என்பதைத் தீர யோசித்துத் தெளியுங்கள். பாடுபட்டு உழையுங்கள். உழைத்து அமிருத குண்டத்தில் மூழ்கி அழியாத் தன்மையை அடையுங்கள். அல்லும் பகலும் அவரைப் பிரார்த்தியுங்கள். பகவானுடைய நாமஜபமும் சிந்தனையும் எந்த வகையிற் செய்தபோதிலும் நன்மையைக் கொடுக்கும். எந்த நாமத்தைக்கொண்டு எந்த ரூபத்தில் பகவானை அழைத்தால் பிரீதி உண்டாகிறதோ, அந்த நாமத்தைக் கொண்டே அதே ரூபத்தோடு அவரை அழையுங்கள். அழைத்தால் நிச்சயமாக அவரைத் தரிசிப்பீர்கள்.

"நாதா, சச்சிதாநந்தத்தை அடையும் மார்க்கம் யாது" என்று பார்வதி மகாதேவரைக் கேட்டாள். "நம்பிக்கை" என்றார் மகாதேவர். உங்களுடைய மார்க்கந்தான் இதுவெனக்

காட்டப்பட்டிருக்கிறது. நம்பிக்கையோடு கூடச் சாதனை செய்யுங்கள். விலைமதிப்பிட முடியாத அரும்பொருள் உங்களுக்குக் கிடைத்திருக்கிறது—எழுந்து அதனைப்பற்றி நில்லுங்கள். பேணிப் பாதுகாத்துக்கொள்ளுங்கள். இந்த ரூபத்தில் சாதனை செய்யட்டுமா, அல்லது அந்த ரூபத்தில் சாதனை செய்யட்டுமா, என்று இதுபோன்ற விஷயங்களைப் பற்றி மூளையை வறட்டிக் கொண்டு காலத்தை நஷ்டமாக்காதீர்கள். அது எந்த ரூபத்திலாயினும் இருக்கட்டும்; அவரை அழைத்தால், நிச்சயம் பயன் பெறுவீர்கள். "தித்திப்பான பண்டத்தை நேராய்ப்பிடித்துக் கடித்தாலும் சரி, கோணலாகப் பிடித்துக் கடித்தாலும் சரி; அது தித்திக்கத்தான் செய்யும்," என்று ஸ்ரீ ராமகிருஷ்ணர் சொல்வது வழக்கம். நீங்களோ கற்பக மரத்தின் அடியில் உட்கார்ந்திருக்கிறீர்கள். எதைக் கேட்கிறீர்களோ அதைப் பெறுவீர்கள்.

"நான் மிகக் கெட்டிக்காரன்" என்று நீங்களே எண்ணிக் கொள்ளாதீர்கள். அதிக சமர்த்தன் என்று தானே எண்ணிக் கொள்வது நல்லதன்று. காக்கை, தான் அதிக சமர்த்துடையது என்று எண்ணுகிறது; ஆனால் மலத்தை உண்டு பிழைக்கிறது. இந்த உலகத்திலே யார் அளவுக்கு மிஞ்சிச் சாமர்த்தியம் பண்ணத் தலைப்படுகிறார்களோ, அவர்கள் கடைசியில் ஏமாந்தே சாகிறார்கள்.

திடமான நம்பிக்கை கொண்டு மூழ்குங்கள்—ஆழ்ந்து மூழ்கிப் போங்கள்; வஸ்து கட்டாயம் கிடைக்கும். கொஞ்சம் சாதனை பஜனை செய்து கடவுள் தரிசனம் கிடைக்கவில்லையே என்று சொல்லி நம்பிக்கையை இழந்துவிடாதீர்கள். கடலில் கணக்கில்லாத முத்துக்களும் மணிகளும் இருக்கின்றன. ஒரு முழுக்கிலேயே அவை கைக்கெட்டவில்லை என்றதனாலே, கடலிலேயே முத்துக்களும் மணிகளும் இல்லையென்று எண்ணிவிடாதீர்கள்.

"கடலில் ஒருவகைச் சிப்பி இருக்கிறது. அது எப்போதும் வாயைத் திறந்துகொண்டு தண்ணீரின்மேலே மிதந்து கொண்டிருக்கும். ஆனால் சுவாதி நக்ஷத்திரம் உச்சமாயிருக்கும்பொழுது ஒரு துளி மழைத்தண்ணீர் அதன் வாயில் விழ

நேரிட்டால், உடனே ஒரேயடியாய்த் தண்ணீருக்குள் கீழே போய்விடும்; அதற்கப்புறம் மேலே வருவதே யில்லை; மழைத் துளி நாளடைவில் ஒரு நல்ல முத்தாக ஆய்விடும்'' என்று ஸ்ரீ ராமகிருஷ்ணர் சொல்வதுண்டு. நீங்களும் குருவின் கிருபை மூலமாக எந்த ஒரு துளி நீரைப் பெற்றீர்களோ, அதைக்கொண்டு சாதனை ஆகிய ஆழ்ந்த ஜலத்திலே மூழ்கி விடுங்கள். இனி, வேறு திசைகளில் பார்வையைச் செலுத்தா தீர்கள்.

தைரியத்தோடு சாதனை செய்துகொண்டிருங்கள்—தக்க சமயத்தில் ஆண்டவனுடைய அருள் உங்கள்மீது நிச்சயம் உண் டாகும். ஒரு தனவந்தரைப் பார்க்கப்போனால், எவ்விதம் அவருடைய வேலையாட்கள், காவற்காரர்கள் ஆகியவர்களை முதலில் சிநேகம் செய்துகொள்ள வேண்டி யிருக்கிறதோ, அவ் விதமே கடவுளைக் காணவேண்டுமென்றாலும் அநேக சாதனை பஜனைகளைச் செய்வதோடு சத்சங்கத்தையும் நாடவேண்டும். கடவுளைத் தன் சொந்தத்திலும் சொந்தமாகப் பாவித்து, அவரு டைய தரிசனம் பெறுதற்காக, அவருடைய கிருபையைப் பெறுதற்காக, குழந்தையைப் போன்று வருந்தி அழுதல்வேண் டும். குழந்தையின் அழுகையைக் கேட்கும் தாய் தரித்திருக்க முடியுமா? கடவுளும் அதுபோலவே ஓடிவருகிறார்; தரிசனம் தராது அவரால் தரித்திருக்க முடியாது.

எழுந்து நின்று முயன்று கடவுளை அடையுங்கள். மனத் தைத் திசைகாட்டும் கருவியின் முள்ளைப்போல் ஆக்கவேண்டும். கப்பல் எந்தத் திசையில் இருந்தால்தான் என்ன? திசைகாட்டி முள் எப்போதும் வடக்குத் திசையையே பார்த்துக்கொண் டிருக்கும். அதனால்தான் கப்பல் திசை தப்பிப் போவதில்லை. மனிதனுடைய மனம் எப்போதும் ஈசுவரனை நோக்கியே நிற்கு மானால், அதன் பிறகு எவ்விதமான பயமும் இருக்க இடமில்லை. ஆயிரம்பேர் கெட்டவர்களுடைய மத்தியில் அவன் இருக்க நேரிட்டாலும், அவனுடைய பக்தியும் கடவுள் நம்பிக்கையும் குறைந்துபோவதில்லை. கடவுளைப் பற்றிய பேச்செடுத்தால் போதும்; அவன் அக்கடவுளன்பில் உன்மத்தனாகி விடுகின்றான். அது எவ்வண்ணம் தெரியுமா? சக்கிமுக்கிக் கல்லானது நூறு

வருஷம் தண்ணீருக்குள்ளே கிடந்தாலும் எப்படி அதனுள்ளிருக்கும் தீ குறைந்து கெட்டுப் போவதில்லையோ, பஞ்சை வைத்து இரும்பினால் தட்டினமாத்திரத்தில் தீ வெளிப்படுகின்றதோ—அதைப்போல, பகவானுடைய திருவடியைப்பற்றி யார் பாக்கியமுற்றவர்கள் ஆனார்களோ, அவர்கள் மற்றப் பொருள்கள் எவை மீதும் மனம் வைப்பதில்லை. கடவுளைப் பற்றிய பேச்சும், பக்தர்கள் சாதுக்கள் ஆகியவர்களின் சங்கமும் அன்றி வேறெதுவும் அவர்களுக்குப் பிடிக்காது. புயற்காற்றில் எச்சில் இலையைப்போன்று அவர்கள் கிடப்பார்கள்—சுய இச்சையோ நான் என்னும் அபிமானமோ ஒன்றும் இருக்காது; காற்று இலையை எந்தத் திசையில் அடித்துக்கொண்டு போனாலும் அது போகும். அப்போது அவர்கள் உலகவாழ்க்கையிலும் இருக்க முடியும்; பின்னர் சச்சிதாநந்த சாகரத்திலும் மூழ்கிப் போகமுடியும்.

உங்களுடைய மனம் இப்பொழுது பரிசுத்தமாய் இருக்கின்றது; ஆசைகள் படியவில்லை; குற்றமற்றிருக்கின்றது. உங்களுடைய இந்த அருமையான சுபாவமானது எந்த உபாயத்தினால் நாளுக்கு நாள் முற்றிப் பழுக்கவல்லதோ அந்த உபாயத்தைப் பெற முயலுங்கள். ஒரு முறை வேறுவழியில் மாறிவிட்டால், பின்னர் திரும்புவதற்கு உபாயமில்லை. ஆசைகள் படியாத மனம் எப்படிப்பட்டது தெரியுமா? உலர்ந்த தீக்குச்சியைப் போன்றது—ஒருதரம் கிழித்தால், 'கப்' என்று பற்றி எரியும். ஆனால் அந்தத் தீக்குச்சி நனைந்து ஈரமாய்விட்டாலோ, தேய்த்துத் தேய்த்துக் குச்சி ஒடிந்து போகும்; பற்றியும் எரியாது. அதைப் போலவே, மனம் ஒருதரம் வேறுவழியில் படிந்துவிட்டால், நூறுதரம் முயன்றாலும் அதனை நிவர்த்திக்க முடியாது.

---

# 16

## மனத்தை அடக்குதல்

[பேலூர் மடத்தில் நடந்த சம்பாஷணை]

சிஷ்யர்:—ஸ்வாமிஜி, நான் எவ்வளவுதான் பாடுபட்டாலும் என் மனத்தை அடக்கமுடியவில்லை; அது அலைந்து கொண்டே இருக்கிறது. தயவுசெய்து அதை அடக்கும் உபாயத்தைச் சொல்லுங்கள்.

சுவாமிகள்:—மனத்தை அடக்குவது கடினம் என்பதில் சந்தேகமில்லை; ஆயினும் அது முடியாத காரியமன்று. இடைவிடாத அப்பியாசத்தினாலே அதைக் கட்டுப்படுத்தி அடக்கிவிடலாம். ஆகையால், நாள்தோறும் கொஞ்சம் தியானம் செய்; ஒரு நாளாவது தப்பவிடாதே. மனமானது அமைதியில்லாத பிள்ளையைப் போலச் சஞ்சலமுடையது; ஓயாது ஓடி அலையும்; அப்படி ஓடும்போதெல்லாம் அதைத் திரும்பத்திரும்ப இழுத்துப்பிடித்துக் கடவுள் தியானத்தில் நிறுத்து. இப்படியே இரண்டு மூன்று வருஷங்கள் போராடி வந்தால், சொல்ல முடியாத ஆனந்தமொன்று உன்னிடத்திலே உண்டாகும். உன் மனமும் அடங்கி அமைதியாய் இருக்கும். முதன் முதலில் தியானமானது மிக்க கடினமாயும் ருசியற்றதாயும் இருக்கிறது; ஆனால், மருந்து தின்பதைப் போலப் பிடிவாதமாக, இஷ்ட தெய்வத்தைத் தியானம் செய்வதில் மனத்தை நிறுத்தி வந்தால், அதிலிருந்து தானே ஆனந்தம் உண்டாகின்றது. மாணவர்கள் பரீக்ஷையில் தேறுவதற்காக எத்தனை பாடுபடுகிறார்கள்! கடவுள் தரிசனம் அதைவிட எவ்வளவோ சுலபமானது. அலையாத உள்ளத்தோடு உண்மையாக அழைத்தால் கடவுள் கட்டாயம் தம்மைக் காண்பிப்பார்.

சிஷ்யர்:—ஆம், இது முற்றிலும் நம்பிக்கையைத் தருவதென்பதில் சந்தேகமில்லை; எப்போது என்னால் பரீக்ஷையில் தேற முடிந்ததோ, அப்படியே முயற்சி செய்தால் ஏன் கடவுளை அடைய முடியாது? ஆனாலும் சில வேளைகளில் அவநம்பிக்கை

ஏற்படுகிறது—'இவ்வளவு ஜபம்செய்தும், கொஞ்சங்கூட அனுபவம் நமக்குக் கிடைக்கவில்லையே' என்ற எண்ணம் உண்டாகிறது; அப்போது, 'இதெல்லாம் வீண்; பயனில்லை' என்று தோன்றுகிறது.

சுவாமிகள்:—இல்லை, இல்லை; அவநம்பிக்கை உண்டாகக் காரணமே இல்லை. கர்மத்துக்குப் பலன் கட்டாயம் உண்டு. அதை நிவர்த்திக்க முடியாது. நல்ல கருமம் ஒன்றை நீ செய்தால், நல்ல பலன் நிச்சயமாக ஏற்படும். மிகுந்த பக்தி சிரத்தையுடனே, அல்லது அலக்ஷியமாகவே தானோ—பகவந்நாமத்தைச் சொன்னால், அதன்பலன் கட்டாயம் வந்தே தீரும். ஆகையால் அவநம்பிக்கையை ஒழித்துக் கொஞ்சநாள் முறையாகச் சாதனை செய். பின்னர்ச் சாந்தி கட்டாயம் உன்னிடத்து ஏற்படும். தியானம் முதலியவற்றினாலே வெறும் மனத்துக்கு மாத்திரந்தான் சாந்தி ஏற்படுகின்றதென்பதில்லை ; அவற்றால் சரீரத்திலும் நன்மை உண்டாகிறது ; வியாதிகள் குறைந்துவிடுகின்றன. சரீரத்தின் நன்மையை முன்னிட்டாயினும் தியானம் முதலியன செய்தல் வேண்டும்.

சிஷ்யர்:—ஸ்வாமிஜி, மந்திரோபதேசம் பெறவேண்டிய அவசியம் என்ன? குருவினுடைய ஒத்தாசையில்லாமல் ஒருவன் தானே தன் சக்தி முழுவதையும் பிரயோகித்துக் கடவுளிடத்தில் ஈடுபட்டால் போதாதா?

சுவாமிகள்:—மந்திரோபதேசம் அவசியம்; ஏனென்றால், தியானத்தில் மனத்தை ஒரு நிலைப்படுத்துவதற்கு அது உதவி செய்கின்றது. உனக்கு உபதேசம் கிடைக்கும்போது, எந்த வஸ்துவின்மீது நீ மனத்தை நிறுத்தித் தியானம் செய்யவேண்டுமோ, அது உனக்குக் காண்பித்துக் கொடுக்கப்படுகிறது. மனமானது ஒன்றைவிட்டு ஒன்றைப்பற்றி மாற்றிக் கொண்டுபோக விடக்கூடாது. மந்திரோபதேசம் உனக்குக் கிடைக்கவில்லையென்றால், நீ தியானம் செய்யவேண்டிய வஸ்து இன்னதுதான் என்பது நிர்ணயமாகவில்லை. இன்றைக்கு ஹரியின் உருவம் பிரீதிகரமாய் இருக்கிறது; அதன் மீது மனத்தை நிறுத்துகிறாய்; நாளைக்கு தேவியின்மீது மனம் செல்கிறது; மூன்றாம் நாள் உருவமற்ற பிரம்மத்தின்மீது—இப்படியே மாற்றிக்கொண்

-டிருப்பாய். இதன் பலன் என்ன? ஒன்றின்மீதும் மனம் நிலைத்து நிற்காது. இந்த நிலைமை ஒரு சாதகனுக்குக் கெடுதலைத் தருவது. மனமானது நிலைக்க வில்லை யென்றால், கடவுள் தரிசனம் வெகு தூரத்து விஷயம். இந்தச் சஞ்சலமானது நீங்கி மனம் அமைதியாய் நிற்பதற்கு மந்திரோபதேசம் அல்லது குருவினுடைய ஒத்தாசை வேண்டும். சிஷ்யனுடைய மனப்பான்மையைக் கண்டறிந்து குரு தகுந்த மந்திரத்தை உபதேசித்து இஷ்டதெய்வம் இதுதான் என்பதையும் காண்பித்துக்கொடுக்கிறார். 'சிஷ்யன் குருவாக்கியத்தில் நம்பிக்கைவைத்து நிஷ்டையோடு சாதனை பஜனை செய்யாவிட்டால் சிறிதளவும் நன்மை ஏற்படாது. ஆத்மீயவழியோ மிகவும் கடினமானது; பல இடையூறுகளை உடையது. சித்திபெற்ற ஒரு குருவினுடைய உதவியைப் பெற்றாலன்றி, ஒருவன் எவ்வளவு புத்திமானாய் இருந்தாலும் சரி, அவன் எவ்வளவுதான் முயற்சி செய்தாலும் சரி, தவறிவிழுவான் என்பது நிச்சயம்.

மனவேதனையின்றி, குழந்தாய், நன்றாய்ப் பாடுபடு; அப்போது நீ ஆனந்தத்தைக் காண்பாய். ஆரம்பத்திலே சிரமப்பட வேண்டியிருக்கும்—அரிச்சுவடி புதிதாய்ப் பிள்ளைகள் கற்றுக்கொள்வது போல. அதனாலே மனச்சங்கடம் அடையாதே; "கஷ்டமாயிருக்கிறது, என்னால் முடியாது" என்று முறையிடாதே; மெள்ள மெள்ளச் சாந்தி ஏற்படும். "மனதில் சாந்தியோ ஆனந்தமோ எங்களுக்குச் சிறிதும் உண்டாகவில்லையே" யென்று என்னிடம் வந்து முறையிடுவோரிடம் நான் எப்படி நடந்து கொள்கிறேன் என்பது தெரியுமா? மந்திரோபதேசம் ஆனபிறகு முதல் இரண்டு மூன்று வருஷம் நான் ஒன்றும் சொல்வதில்லை; அவர்கள் வார்த்தையைக் கவனிப்பதும் இல்லை. அப்புறம் அவர்கள் என்னைக் காணும் போது, ஆத்ம சாதனையில் சிறிது முன்னேற்றம் அடைந்து வருவதாயும், சாந்தியும் ஆனந்தமும் தாங்கள் சிறிது அனுபவித்து வருவதாயும் தாங்களே சொல்லுகிறார்கள். ஒருவன் முன்னதாகக் கொஞ்ச நாளைக்கு விடாமல் முயற்சி செய்துவர வேண்டும்; அதன் பிறகுதான் தன்னுடைய மனத்தில் சாந்த நிலையை அவன் எதிர்பார்க்கலாம். ஆகையால் குறைந்தது மூன்று வருஷகாலம் இடைவிடாது பாடுபடும்படி உனக்குக்

கூறுகிறேன்; அப்போது ஆனந்தமடைய உனக்கு உரிமை உண்டு; அதற்கு முன் இல்லை. ஒன்றும் செய்யாமலே, உனக்குக் காரியம் கைகூட வேண்டும்! இது மடமையல்லவா? தந்திரத்தினாலாவது, சோம்பேறித்தனத்தினாலாவது பெரிய காரியம் எதையும் சாதிக்கமுடியாது. உண்மையில் உனக்குச் சாந்தி ஏற்பட வேண்டுமென்றால், உண்மையில் கடவுளைத் தரிசிக்க வேண்டுமென்ற விருப்பம் உனக்கிருக்குமானால், இடைவிடாது பாடுபடு; பொறுமையோடு காத்திரு, ஆத்மஞானம் அடையக் காலம் வரவேண்டும்.

பாடுபட்டுக்கொண்டு பொறுத்திருக்க வேண்டியது உன் கடமை. தாய்க் குருவிக்கு நன்றாய்த் தெரியும், எப்போது தன் முட்டையை உடைக்க வேண்டுமென்பது. எனவே, தக்க காலம் வந்ததும் தெய்வத்தாய் தானே பக்தனுக்குக் காட்சி கொடுத்தருளுகிறாள். பாடுபட்டுக்கொண்டு பொறுத்திரு. இவ்வாறு பொறுத்திருக்கும் காலம் மிகவும் கஷ்டமான காலம். பக்தனுடைய மனம் எப்போதும் தத்தளித்துக் கொண்டிருக்கும்; பெறுவோம் என்ற நம்பிக்கை ஒருதரம், அந்த நம்பிக்கையை இழத்தல் மறுதரம்; இப்போது சிரிப்பு, அடுத்த நிமிஷம் அழுகை. இப்படியே கஷ்டப்படவேண்டி யிருக்கிறது. கடவுள் தரிசனம் கிடைக்கும் வரையில் பக்தன் இப்படியே ஒவ்வொருநாளும் இவற்றோடு மாறி மாறிப் போராடிக்கொண்டிருக்கிறான். ஆனால், தக்க ஒரு குருவினுடைய உதவி அவனுக்குக் கிடைத்தால், இத்தகைய கஷ்டத்தினின்றும் அவர் உடனே அவனை விடுவிக்கக்கூடும். பரிபக்குவ மடையாத மனமாயிருந்த போதிலுங்கூட, ஞானகுரு அதனை மேல்நிலைக்கு உயர்த்திவிடக்கூடும். அப்படிச் சட்டென்று உயர்த்துவதில் சில ஆபத்துக்களும் உண்டு. அவ்வாறு அடிக்கடி செய்தால், வேகம் தாங்காது மனமும் உடலும் முறிவடைந்து அதிக கஷ்டத்திற்கு ஆளாகும். நம்பிக்கை கெட்டுத் தளர்ச்சி ஏற்படும்.

சாதனை செய்கிற காலத்தில் ஏற்படும் இம்மாதிரி சங்கட வேளையில், சாதகன் மிகவும் கவனமாக எப்போதும் இருக்க வேண்டும். சத்குருவின் உதவியைப் பெற்று அவருடைய உபதேசத்தை அனுசரித்துச் சில நியமங்களைக் கைக்கொண்டு ஒழுகி, அவற்றினின்றும் வழுவாதிருக்க வேண்டும். பூரண பிரமச்

சரியம் வகித்து சாத்வீக உணவு சாப்பிட்டு வரவேண்டும். தியானத்தில் அளவுக்குமிஞ்சி மூளையை வாட்டக்கூடாது; வாட்டினால் அவன் கட்டாயம் கஷ்டப்படுவான். மூளையில் சூடேறிப் போகும்; மயக்கம் உண்டாகும். மற்றும் பல மூளை வியாதிகள் பின் தொடரும்.

முதன் முதலிலே தியானமோ மனத்தினோடு செய்யும் யுத்தமாம். ஓயாது ஓடிக்கொண்டிருக்கும் மனத்தைச் சாதகன் முறையாக இழுத்திழுத்துத் தன் இஷ்ட தெய்வத்தின் பாதபத்மங்களில் நிறுத்துகிறான். இதில் கொஞ்சநேரம் சென்றால் மூளையிற் சிறிது சூடேறிவிடும். சாதகன் இதற்கு இடங்கொடுக்கக் கூடாது. இதனால் சாதகன், முதன்முதலில் அதிகமாகத் தியானம் தாரணை முதலியவற்றால் மூளையை வாட்டி வருத்துதல் கூடாது. மிகச் சிறுகச் சிறுகச் சாதனையை அதிகப்படுத்தி வரவேண்டும். சிலநாள் இடை விடாது இம்மாதிரி அப்பியாசம் செய்துவந்தால், சாதகனுக்கு ஆரம்பத்திலே உண்டாகக் கூடிய இடையூறுகளெல்லாம் ஒன்றன்பின் ஒன்றாய் நீங்கிச் சரியான தியானம் செய்யும் சக்தி அப்போது ஏற்படும். இவ்விதம் சரியான தியான சக்தி ஏற்படும்போது, ஒரே ஆசனத்தில் உட்கார்ந்து நாலைந்து மணி நேரம் தியானம் தாரணை முதலியன செய்தாலும், எவ்வித கஷ்டமும் உண்டாகாது. நன்றாய்த் தூங்கியெழுந்தால் மனம் உடல் எல்லாம் எப்படிச் சுகமாகத் தோன்றுகின்றனவோ அது போலத் தோன்றும். தவிர, உள்ளே ஆநந்த அனுபவம் அமைந்து நிற்கும்.

சாதகன் ஆரம்பத்திலே உணவு முதலியவற்றில் விசேஷமான எச்சரிக்கை எடுத்துக்கொள்ளுதல் அவசியம். சரீரமும் மனமும் மிகவும் நெருங்கிய சம்பந்தம் உடையன. உணவினாலே உடலுக்குக் கேடு உண்டானால், மனமும் கெடும்; தியானம் செய்ய இயலாது. அதனால்தான் உணவு முதலியவை சம்பந்தமாக அவ்வளவு விதிவகைகள் ஏற்பட்டிருக்கின்றன. சுலபமாய் ஜீரணமாகக் கூடியவற்றையே சாப்பிட வேண்டும்; தவிர உடம்பை உஷ்ணப்படுத்தும் முரட்டு ஆகாரங்களைச் சாப்பிடக்கூடாது. மேலும் அதிக உணவு நல்லதல்ல; அதனால் தமோகுணம் அதிகமாகும். அரைவயிறுவரையில்தான் சாப்பிடவேண்டும்; தண்ணீர்

கால்வயிறு; மீதியிருக் கும் கால்வயிற்றைக் காற்றோட்டத்திற் காகக் காலியாக விட்டுவைக்க வேண்டும்.

ஒரு சாதகன் எப்போதும் தன்னுடைய குற்றங் குறை களைப்பற்றி எண்ணி அதனால் மனம் வருந்தி நம்பிக்கையை இழத்தல்கூடாது. ஒரு மனிதன் எவ்வளவுதான் பெரிய பாவம் ஒன்றைச் செய்தவனாயிருந்தபோதிலும், சாமானிய மனித னுடைய கண்ணுக்குத்தான் அது ஒரு பாவமாகும். உயர்ந்த பாரமார்த்திக நிலையிலிருந்து பார்க்கும்போது, அதாவது பரம் பொருளாகிய பகவானுடைய கண்ணுக்கு அது ஒன்றுமே யில்லை. அவருடைய கருணை நோக்கு ஒன்றினாலேயே கோடி கோடி ஜன்மங்களிற் சேர்ந்த பாவங்களெல்லாம் ஒரு நொடியில் ஒழிந்துபோகும். மக்களைப் பாவச் செயல்களினின்றும் விலக்கு தற்கும் உலகத்தில் சமூக வாழ்வு அமைதியோடு நிலைபெறுதற் கும் சாஸ்திரங்களிலே பாவங்களுக்கு அவ்வளவு கடுமையான தண்டனைகள் விதிக்கப்பட்டிருக்கின்றன. நம்முடைய தந்தை யாகிய கடவுளோ கருணை வடிவானவர். தம்முடைய குழந்தை களிடம் அவர் எப்போதும் அன்பு பூண்டவர். அவருடைய நாமமானது தீவினைகள் யாவையும் நீக்கவல்லது. ஆகையினாலே, அவருடைய நாமத்தை உண்மையோடு நாம் உச்சரிப்போ மானால், நாம் மனவருத்தமுறுதற்கு இடமே இல்லை.

கர்ம பலன் உண்டு. தீய கருமங்களைச் செய்தால், அதன் பயனாக மனத்தின் அமைதி கெட்டுத் துன்பமும் துயரமும் உண் டாகும் என்பது உண்மையே. ஆனால் சாதகன் அவற்றிற்கு இடங்கொடுப்பானேன்? முன் செய்தவினைகள் பழக்க வாசனை யால் திரும்பவும் வந்து மேலிடும் என்பதைத் தெரிந்து, சாத கன் அவற்றோடு போராடத் தயாராயிருக்க வேண்டும். கடவுள் அவனுக்குச் சக்தியளிப்பார். அவருடைய நாமம், எதனாலும் துளைக்கப்படாத திரையாக நின்று அவனைப் பாதுகாக்கும். எவ் வகைத் துன்பங்களினின்றும் அவனை விடுவிக்கும். இது ஒரு வகைச் சாதனை. இந்த சாதனை ஆரம்பத்தில் அவ்வளவு இன்ப மும் திருப்தியும் கொடுக்கத் தக்கதாய் இராது. இன்னொரு வகை சாதனை உண்டு. அது வைஷ்ணவர்களுடைய மார்க்கம். அது மிகவும் இன்பகரமானது. அதில் அவ்வளவு கஷ்டங்கள்

இல்லை. முன்னதைவிடச் சுலபமானது. இந்த சாதனையில், ஸ்ரீ ராமர், ஸ்ரீ கிருஷ்ணர், அல்லது கடவுளின் வேறு அவதார புருஷர் எவராயினும் ஒருவருடைய சரிதத்தையும் அவருடைய செயல்களையும் நீ சிந்தித்து வரவேண்டும். இதில் எவ்விதமான அதிருப்தியும் அருசியும் ஏற்படாது. ஒரு பக்தன் பகவானோடு ஏதேனும் ஓர் உறவு கொண்டு, அதற்கேற்ற வகையில் அவரை வழிபட்டு வரவேண்டும். ஆனால், இதிலும் ஆபத்துக்கள் உண்டு. தகுதியற்ற ஆட்கள் பலர், சக்பபாவனையை அனுசரித்து, அதாவது தலைவன் தலைவி உறவை மேற்கொண்டு, கடவுளை வழிபடத் தலைப்பட்டு நெறி தவறி வீழ்ந்திருக்கின்றனர் என்பதை அறிவோம். ஆதலால், இது நீங்கலான மற்ற உறவு முறைகள் சாதகர்களுக்கு மிகவும் நன்மையைத் தருவனவாகும். முற்றிலும் தகுதியுள்ள ஒரு சிலரே தலைவன் தலைவி முறையில் ஈசனை வழிபடலாம்.

---

# 17

## கடவுளிடம் மனத்தைச் செலுத்துதல்

[பேலூர் மடத்தில் நடந்த சம்பாஷணை]

சிஷ்யன் :—ஸ்வாமிஜி, நான் கடவுளிடத்தில் மனத்தைச் செலுத்துவது எப்படி ?

சுவாமிகள் :—சாது சங்கம் செய்யச் செய்ய மனம் கடவுளிடம் செல்லும். அவர்களுடைய வாழ்க்கையின் தினசரி நடத்தையைக் கவனித்து அதைப்போல உன்னுடைய வாழ்வையும் நடத்துவதன் மூலம் உன் மனத்தைக் கடவுளிடம் நீ செலுத்தலாம். யாருடைய மனமானது கடவுளிடம் நிலைக்கிறதோ, அவருடைய நடவடிக்கைகளையும் வழிகளையும் பின்பற்றி நீயும் செல்லவேண்டும். கடவுளை உண்மையாய்க் காண்பதற்குப் பெருந்தடையாய் இருப்பவை உன் மனத்தில் உண்டாகும் சந்தேகமும் குழப்பங்களுந்தான். அவை உன் மனத்தைப் பிசாசு போல் பிடித்து அங்குமிங்கும் அலைத்திழுத்து, பலவகைப்பட்ட விஷயப் பொருள்களை நாடி ஓடச்செய்கின்றன. கூரான ஞான

வாளைக் கொண்டு அவற்றை விரட்டியடி. அதைச் செய்ய உன்னிடம் போதிய சக்தி இல்லை என்றால், செய்வதில் வல்லவர்களான சாதுக்களின் உதவியை நீ நாடு.

புதிதாக ஆத்ம சாதனை பழகும் ஒருவன் சாது சங்கம் செய்யவேண்டும். அவர்களின் உபதேசங்களை ஊன்றிக் கேட்க வேண்டும்; கேட்டும் மறவாமல் மனத்தில் வைத்திருக்க வேண்டும். ஆனால், அதோடு நின்றுவிடக்கூடாது. அவர்களுடைய உபதேசங்களின்படியே நடக்கவேண்டும். அவர்களுடைய சொற்களைக்கேட்டு அவற்றின்படி நடக்கவில்லையென்றால், நீ எவ்வளவுதான் பேசினாலும், படித்தாலும், கற்றாலும் கடவுளைக் காணமுடியாது. பிரம்மசரியம் அனுஷ்டிக்காமல் ஆத்மசாதனையிற் பழக முடியாது; ஆதலால் பிரம்மசரியம் அனுஷ்டிக்க வேண்டியது மிகஅவசியம். சாஸ்திரங்களைப் படித்துக் கடவுளைக் கண்டுவிடலாமென்று பலர் முயற்சி செய்கிறார்கள். அவர்களுக்குத் தெரியாது பிரம்மசரியம் அனுஷ்டிக்காமல் சாஸ்திரங்களினுடைய உண்மையான கருத்தை யாரும் உணர முடியாது என்பது; கடவுள் தரிசனம் அதைவிட அதிக துர்லபம்.

பல காரணங்களை முன்னிட்டு பிரம்மசரியம் எல்லாவற்றிலும் முக்கியமானது. கடவுளிடம் மனத்தைச் செலுத்த நீ விரும்பினால், கடவுளைக் காணவேண்டுமென்ற எண்ணம் உனக்கு இருக்குமானால், பிரம்மசரியத்தோடுகூட சாதனையிற் பழகு. சாஸ்திராதி நூல்களைப் படிக்க விருப்பமானால், ஸ்ரீராமகிருஷ்ண வசனாமிருதமும், மற்றும் அதுபோன்ற நூல்களையும் படி. அவற்றைப் படித்து அதன்படி நடக்க முயல்வாய். அத்தகைய நூல்களைப் படிக்கப் படிக்க, அதிகமாக அவற்றில் புதிய புதிய அர்த்தங்களை அறிவாய். சாதகன் பகவானைப்பற்றிக் கேட்டு ஒருவகையாக உணருகிறான்; சாதனைசெய்து வேறு வகையாக உணருகிறான்; பிறகு சித்தியடைந்த பின்னர் இன்னொரு வகையாக உணருகிறான்.

கடவுளை அடையவேண்டுமானால், சாதனை அதிகம் செய்ய வேண்டும்; குழந்தையைப்போன்று ஆத்திரத்துடன் மனப்பூர்வமாக அவரை அழைக்கவேண்டும்; அவர் பொருட்டு எல்லாவற்றையும் தியாகம் செய்யவேண்டும். காமமும் காசாசையும், பேர்

புகழ் முதலியவற்றில் மோகமும் சிறிதளவு இருந்தாலும் அவரை அடைய முடியாது. நாக மகாசயர் சொல்கிறார்: "நங்கூரத்தைப் போட்டுவிட்டு துடுப்பைத் தள்ளினால் ஓடம் நகருமா?" அவர் இன்னொன்றும் சொல்வதுண்டு: "பேர் புகழ் பெறுவது சுலபம்; அவற்றை விட்டு விடுவதுதான் கஷ்டம். எவர்க்கு அவற்றைத் தியாகம் செய்ய முடியுமோ அவர்தான் உண்மையில் பெரிய சாது."

மனித ஜன்மம் கிடைப்பது அரிது. கிடைத்தபின், கடவுளை யடைய முயற்சி செய்யவில்லையென்றால் இந்த ஜன்மம் வீணே. ஸ்ரீ சங்கராசாரியார் இவ்விதம் சொல்லி யிருக்கிறார் :—"மனுஷ்யத்வம் முமுக்ஷுத்வம் மகாபுருஷ ஸம்ச்ரய:" அதாவது, மனித ஜன்மம், மோக்ஷ இச்சை, மகான்களுடைய உறவு ஆகிய இம் மூன்றும் இவ்வுலகில் கிடைப்பது அருமை. இம்மூன்றும் கிடைக்கப்பெற்றவர் யாரோ அவரே பாக்கியமுடையவர்.

சிஷ்யர் :—ஸ்வாமிஜி, ஸ்ரீ ராமகிருஷ்ணர் பக்தர்களுக்குச் சொல்லுகிறார்: "யாருமில்லாத இடத்தில் தனித்திருந்து அழுது அழுது பகவானை அழையுங்கள் — ஒரு வருஷமோ, ஒரு மாதமோ, அல்லது ஒரு நாளாயினும் சரி." தாங்கள் சொல்லும் சாது சங்கமா, அல்லது தனியே இருந்து சாதனை செய்தலா—இவையிரண்டில் நாங்கள் எதை முக்கியமாகக் கொள்வது நன்மை?

சுவாமிகள் :—இரண்டும் செய்யவேண்டும். தனித்த இடத்தில் செய்ய உட்கார்ந்தால், மனம் சுலபமாக உள்முகமாய்த் திரும்புகிறது. வீண் நினைவுகள் குறைந்துவிடுகின்றன. ஆனால், சாதனையில் முன்னேற்றம் அடையாமல், ஒருவன் திடீரென்று யாருமில்லாத இடத்துக்குப்போய் தனிமையாக வசிக்கக் கூடாது. அநேகம் பேர், எடுத்ததும் இம்மாதிரித் தனியான இடத்தில் இருக்கப்போய்ப் பைத்தியம் பிடித்தவர்கள் ஆகி யிருக்கின்றனர். அதனால் ஜாக்கிரதையுடன் இருக்கவேண்டும். உண்மையான தனியிடம் இவ்வுலகத்தில் எங்குமேயில்லை. மனம் சமாதி நிலை அடைந்தால் அல்லது, கடவுளுடன் லயித்துவிட்டாலன்றி உண்மையான தனிமை ஏற்படாது.

## சாதுக்களைக் கண்டு தெளிதல்

சுவாமிகள் :—சாதுக்களின் பரிசுத்தமான வாழ்க்கையை, அவர்களுடைய பாவனைகளை, நேரில் காண்பதால் மனத்தில் எவ்வளவு பதிந்து நன்மை ஏற்படுகின்றதோ, நூறு சாஸ்திரம் படித்தாலும் அவ்வளவு ஏற்படுவதில்லை. ஆதர்ஸேன் என்ற ஒரு பக்தர் ஸ்கூல் சப் இன்ஸ்பெக்டர் ஒருவரைக் கூட அழைத்துக்கொண்டு அடிக்கடி ஸ்ரீ ராமகிருஷ்ணரிடம் வருவது வழக்கம். கூட வந்தவருக்கு அடிக்கடி ஒரு பாவனா நிலை (பரவச நிலை) வருவதுண்டு. அப்போது வெளிப் பிரக்ஞையை இழந்து விடுவார். ஒருநாள் ஸ்ரீ ராமகிருஷ்ணரிடம் அவர்கள் வந்து கொஞ்சநேரம் ஆனதும், ஸ்ரீ ராமகிருஷ்ணர் சமாதி நிலை அடைந்தார். ஆஹா! அவருடைய முகத்தில் என்ன சிரிப்பு, உள்ளே யிருந்து ஆநந்தம் பொங்கி வழிவதுபோல! அப்போது ஆதர்ஸேன் தம்முடைய துணைவரைப் பார்த்துச் சொல்லுகிறார்:- "ஏ, உன்னுடைய பாவனாநிலையைக் கண்டதிலிருந்து, பாவனா நிலை என்றால் எனக்கு வெறுப்பு உண்டாயிருந்தது. ஏனென்றால் உன்னை அந்த நிலையில் கண்டபோது ஏதோ நீ உள்ளே எவ்வளவோ வேதனைப்படுவதுபோலத் தோன்றிற்று. பகவானுடைய நாமத்தில் என்ன, துன்பமா உண்டாகும்? இவருக்குள்ளே ஆநந்தம் பொங்குவதைப் பார்த்தபின், எனக்கு உண்மை விளங்கிற்று. இவருடைய பாவனா நிலையும் உன்னுடையதைப்போலக் காணப்பட்டிருந்தால், இதற்கு மேலே இங்கு வரப் போவதில்லை." ஸ்ரீ ராமகிருஷ்ணரிடம் வந்திராவிட்டால், அவருடைய பாவனா சமாதியை நேரில் கண்டிராவிட்டால், ஆதர்ஸேனினுடைய மனதில் ஏற்பட்ட தப்பெண்ணம் ஒரு போதும் போயிராது. இதுதான் சாது சங்கத்தின் பலன்.

வேறொருவன் ஒருசமயம் திரைலிங்க சுவாமியிடம் போனான். அவர் காசியிலிருந்த ஒரு மகான்; பேசாமல்

மௌனமாக இருந்தவர். போனவன் அவரைக் கண்டு, தனக்குள்ளே எண்ணிக்கொண்டான் :- "இவர் ஒன்றும் பேசுகிறதே இல்லை; இவர் அருகில் இனிப் போவதினால் என்ன பலன்?" இந்த எண்ணத்தோடு அன்றைய தினம் திரும்பிப் போய் விட்டான். இருந்தாலும், எப்படியோ இன்னொரு நாள் வந்து, அவருக்கு அருகாமையிலே கொஞ்சநேரம் உட்கார்ந்திருந்தான். அன்றைக்குக் கண்டான் - சுவாமி தாங்க முடியாத ஆத்திரத்தோடு அழுகிறார்; அப்புறம் கொஞ்சநேரம் ஆனதும் விழுந்து சிரிக்கிறார்; பக்திப் பெருக்கால் பித்துப் பிடித்துத் தம்மை மறந்திருக்கிறார். சுவாமியினுடைய இந்த நிலையைக் கண்டபோது அவன் சொன்னான்: "இன்றைக்கு நான் கற்றது, ஆயிரம் சாஸ்திரங்களைப் படித்தாலும் கற்றிருக்க முடியாது. கடவுளின் பொருட்டாக எப்போது இம்மாதிரி ஆத்திரத்தோடு அழுகை வருமோ, அப்போதே அவருடைய தரிசனத்தைப் பெறுவேன்; இதுமாதிரியான ஆனந்தத்தை அடைவேன்."

சிஷ்யர் :—ஸ்வாமிஜி! அநேகருடைய கொள்கை, சாதுக்களிடம் போனாலே போதும் என்பது. கேட்கவோ, பார்த்து நடக்கவோ வேண்டுமென்பது இல்லை என்கிறார்கள்.

சுவாமிகள் :—இல்லை! அந்த வார்த்தையை நீ ஏன் காதில் போட்டுக் கொள்கிறாய்? சாதுக்களிடம் சும்மா போய்விட்டு வருவதனாலே பயனில்லை. உள்ளே ஒன்றும் மறைக்காமல், திறந்து, மனத்திலுள்ள சந்தேகங்களை அவர்களிடம் வெளியிட்டுக் கேட்டுத் தெரியவேண்டும். அவர்களுடைய நடத்தைகள் ஒவ்வொன்றையும் விடாது கூர்ந்து கவனித்து அறியவேண்டும். அவர்களுடைய உபதேசங்களைக் கேட்டு அவற்றின்படி வாழ்க்கையை நடத்த வேண்டும். தான் ஒன்றும் செய்யாமல், சாதுக்களிடம் சும்மா போய் வந்துவிட்டால் ஆய்விடுமா? அது வெறும் ஏமாற்றுகிற பேச்சு. சாது சங்கம் மிகவும் அவசியம். அவர்களைக் கண்டால், அவர்களுடைய உபதேசங்களைக் கேட்டால், மனத்தில் ஆத்ம ஞானமும் கடவுள் உணர்வும் விழித்தெழுகின்றன; சந்தேகங்கள் யாவும் நீங்கி விடுகின்றன.

சிஷ்யர் :—தாங்கள் அன்றைக்குச் சொன்னீர்கள் : "சும்மா படபடத்து நிற்பதில் பிரயோஜனம் இல்லை; வேளை வராமல் ஒன்றுமே நடவாது" என்று. அப்படியானால் கடவுளை யடைவதற்கு உள்ள ஆத்திரத்தை விட்டுவிடவேண்டுமா?

சுவாமிகள் :—அது, வேறு விஷயத்தைப்பற்றிப் பேச்சு வந்தபோது சொல்லி யிருப்பேன். படபடத்து நிற்பது என்றால், ஏதோ இரண்டொரு நாளைக்கு ஒருவன் ஆத்திரமிகுதியினால் அமைதியிழந்து, அழுது புலம்பி, உள்ளே ஏற்படும் மனோபாவனையை வெளியிலே காட்டுவது. இரண்டு நாள் போனால், அது ஒழிந்துபோகும்; அப்போது மனத்தளர்ச்சி ஏற்பட்டு, சத்வழியில் ஆசை நீங்கும்; அவ் வழியை அடியோடு அவன் விட்டுவிடுவான்.

சிஷ்யர் :—"ஒருதரம் இங்கே, ஒருதரம் அங்கே, இப்படியே பல இடத்தில் கிணறு வெட்டிக்கொண்டு போனால், எங்கேயும் தண்ணீர் கிடைக்கப் போகிறதில்லை; ஒரே இடத்தில் ஆழ வெட்டவேண்டும்" என்று ஸ்ரீ ராமகிருஷ்ணர் சொல்லியிருக்கிறாரே, சாதனை செய்யும் வழியைப்பற்றி—அதையா தாங்கள் சொல்லுகிறீர்கள்?

சுவாமிகள் :—ஆம், அதேமாதிரி உறுதியாக ஒன்றைப் பற்றிச் செல்லவேண்டும். பகவானிடத்தில் உண்மையான பக்தி உண்டாகி அதனால் பகவானைத் தரிசிப்பதன்பொருட்டு ஒருவன் அமைதியிழந்து படபடத்து நின்றான் என்றால், தரிசனம் கிடைக்கவில்லையென்றாலும், அவன் பகவானுடைய சிந்தையை விட்டுவிட மாட்டான். கோடி ஜன்மங்களில் தரிசனம் கிடைக்கப் பெறவில்லை யென்றாலும், அப்போதும் அவன் அசையாத உறுதியுடன், தளராத மனத்துடன், பகவானைக் கூவி அழைத்த வண்ணமாய் இருப்பான்.

---

# 19

## தியானம்

*[பேலூர் மடத்தில் நடந்த சம்பாஷணை]*

சுவாமிகள் :—தியானம் அவ்வளவு சுலபமானதன்று. கொஞ்சம் அதிகமாகச் சாப்பிட்டு விடு; அன்றைக்கு உன் மனம் தியானத்தில் நிலைத்து நிற்காது. காமம், குரோதம், லோபம் முதலான இன்னும் மற்ற தீயகுண விகாரங்கள் அனைத்தையும் அடக்கியபோதே தியானம் கூடிவரும். இவற்றில் ஏதாவது ஒன்று தலையெடுத்து நின்றாலும் தியானம் கூடி வராது. சுற்றிலும் தீயை வளர்த்துக்கொண்டு உள்ளே உட்காருவது* சுலபம். இந்தத் தீயகுண விகாரங்களை அடக்கி அவை மனத்தில் பதியாதபடி பார்த்துக் கொள்வது இருக்கிறதே—இதுதான் உண்மையான தவம். பேடிகளுக்கு என்ன சமய உணர்ச்சி! ஆசைகளையும் தீய குணங்களையும் அடக்குவதுதான் பெருந் தவம். உலகத்தில் வாழுகிற மக்கள் ஓயாது தீய கருமங்களிலேயே உழன்று கொண்டிருப்பதைப் பார்க்கும்போது, உன் மனத்தில் ஏதோ ஓரோர் சமயம் கெட்ட எண்ணங்கள் தலைகாட்டுமானால், அதனால் பெரும் பாவம் உனக்கு ஏற்பட்டுவிடாது; ஆண்மையோடு அவற்றை விரட்டிவிடு.

சுவாமி விவேகாநந்தர் இவ்விதம் சொல்வது வழக்கம்: "குண்டலினிசக்தி கொஞ்சமாக விழித்தெழுவது மிகவும் அபாயகரமானது.'' அச்சக்தி உயரமாகக் கிளம்பாவிடில் காமம் குரோதம் முதலான கீழான விகாரங்கள் வலிவுபெற்றுத் தொந்தரவு உண்டாக்கும். பக்தன் பகவானைத் தலைவனாகவோ அல்லது தலைவியாகவோ (கணவன்-மனைவி முறையில்) கருதி வழிபடுகிற மதுர பாவம் அல்லது ஸகிபாவம் என்னும் வைஷ்ணவ சாதனையானது மிகவும் அபாயகரமானது. கண்ணன் ஸ்ரீ ராதையோடு செய்த தெய்வலீலைகளைத் தாங்கள் இடைவிடாது சிந்திக்க முயல்வதாகக்

---

* கடுமையான தவம் செய்வோர் அனுஷ்டிக்கும் முறை.

கூறி, அவர்கள் தங்கள் காமத்தை அடக்க இயலாதவர்கள் ஆகி எல்லா வகையான காமச் செயல்களையும் செய்கின்றார்கள். இதனாலேயே ஸ்ரீகிருஷ்ணனுடைய ராஸக்ரீடையையும், இன்னும் அது போன்ற மற்ற நூல்களையும் ஆரம்பத்திலே சாதகர்கள் படிக்கக் கூடாதென்று நியமம் செய்யப்பட்டிருக்கிறது.

தியானம் செய்யாவிட்டால் மனம் சாந்தி அடையாது. பின், மனம் சாந்திஅடையவில்லையென்றால் தியான்ம்செய்ய இயலாது. "மனம் சாந்தி அடையும்போது, அதாவது அமைதியாய் அடங்கியிருக்கும்போது, நான் தியானம் செய்வேன்" என்று நினைப்பது நடவாத காரியம். மன அடக்கமும் தியானமும் ஒன்றோடொன்று கூடவே செல்லவேண்டும்.

வியாபார புத்தி நம்மிடத்தில் எதுவரையில் இருக்குமோ அதுவரையில் நாம் ஸ்ரீ ராமகிருஷ்ணரிடம் பக்தி செலுத்த முடியாது. அதனால்தான், கொஞ்சம் பிரார்த்தனை செய்ததும் அவருடைய தரிசனம் நமக்குக் கிடைக்கவில்லை யென்று உடனே மனத்தளர்ச்சி ஏற்பட்டுவிடுகிறது. "நான் இதைச் செய்கிறேன்; இதற்குப் பிரதியாகப் பகவான் எனக்கு இதைச் செய்யவேண்டும்" என்று நினைப்பது வியாபார புத்தி. இன்னொரு விஷயத்திலும் கவனம் இருக்கவேண்டும். சாதகர்கள் தங்கள் உள்ளத்தின் மனோ பாவனைகளைப் பிறரிடத்தில் தெரிவிக்கக்கூடாது. ஏனென்றால், அப்படித் தெரிவிப்பது பக்தியின் ஆழத்தைக் குறைத்து விடும்.

சிஷ்யர் :—ஸ்வாமிஜி, கடவுளை அடையவேண்டும் என்ற ஆவல் எதனாலே உண்டாகும்?

சுவாமிகள் :—சத்சங்கமும் குரு உபதேசத்தின்படி சாதனையும் செய்து செய்து மனம் எப்போது பரிசுத்தம் அடையுமோ, அப்போது கடவுளை அடையவேண்டும் என்ற ஆவல் உண்டாகும். இந்த உலகத்திலே திருடுகிற வித்தைக்கும்கூட குரு வேண்டியிருக்கிறது. உயர்ந்த பிரம்மஞானம் பெறுவதற்குக் குரு எவ்வளவு அதிக அவசியம்!

சிஷ்யர் :—ஸ்வாமிஜி, சாந்தி எதனால் உண்டாகும்?

சுவாமிகள் :—பகவானிடம் பிரேமை உண்டாய்விட்டால்

சாந்தி உண்டாகும். ஆரம்பத்திலேயே சரியான சாந்தி உண்டாய்விடுமா? அவரை அடையும்பொருட்டு ஆத்திரப்பட்டு அழ வேண்டும்; அவரை அடைய முடியவில்லையே என்ற வருத்தத்தினாலே துடிதுடிக்க வேண்டும். அதற்கப்புறம்தான் சாந்தி ஏற்படும். உலக வாழ்க்கையின் போக சுகங்களில் எப்போது சாந்தி கிடைக்கவில்லையோ, அவற்றில் எப்போது வெறுப்புத் தோன்றுகிறதோ, அப்போதே பகவானிடம் பற்று ஏற்படுகிறது. முன்னால் எவ்வளவு அதிகமான அசாந்தி, அதாவது (உலக போகங்களில் வெறுப்பு உண்டாகி) அமைதியில்லாத நிலைமை ஏற்படுகிறதோ, அவ்வளவு அதிகமாக, சாந்தி ஏற்படும். தாகம் எவ்வளவு அதிகமோ தண்ணீர் அவ்வளவு இனிப்பாய் இருக்கிறது. இதனாலேயே மகான்கள் சொல்லுகிறார்கள், சாந்தியைப் பெற வேண்டுமானால் சாந்தியின்மையைத் தேடிப் பெற வேண்டும் என்று.

சிஷ்யர் :—பிரேமை எதனால் ஏற்படும்?

சுவாமிகள் :—சாதனை பஜனை செய்வதாலும், பகவானைப் பிரார்த்திப்பதின் மூலமாயும் ஏற்படும்.

சிஷ்யர் :—சம்ஸாரத்தில் இருந்தால் உண்டாகுமா?

சுவாமிகள் :—சம்ஸாரத்தில் (உலகத்தில்) இல்லாமல், வெளியிலே யார் இருக்கிறார்கள்?

சிஷ்யர் :—இல்லை; நான் கேட்டது, குடும்ப வாழ்க்கையில் இருந்தால் உண்டாகுமா, என்பது.

சுவாமிகள் :—உண்டாகும்; ஆனால் கஷ்டந்தான்.

சிஷ்யர் :—சம்ஸாரத்தில் வெறுப்பு ஏற்பட்டால், வெளியேறி விடலாமா?

சுவாமிகள் :—வெளியேறுவது உசிதம். இதற்கே வைராக்கியம் என்று பெயர். உண்மையான வைராக்கியம் ஒருமுறை உண்டாய்விட்டால், அது எரிகிற தீயைப்போல வரவர வளர்ந்து அதிகமாகிறது. ஸ்ரீ ராமகிருஷ்ணர் இதற்கு ஓர் உபமானம் சொல்வதுண்டு. குளத்தில் மீனை விட்டால் எப்படிச் சந்தோஷமாக நீந்திப் போகுமோ, அதுபோல, சம்ஸாரத்திலிருந்து வெளியேறிவிட்டால் மக்கள் சந்தோஷமாக உலவுவார்கள்; பிறகு அதற்குள் திரும்பிச் செல்ல இச்சிப்பார்களா?

சிஷ்யர் :—குரு இல்லாமல் நிறைவேறுதா ?

சுவாமிகள் :—எனக்குத் தோன்றுகிறது, நிறைவேறு தென்றே—குரு இல்லாமல் கொஞ்சமும் நடவாது. குரு என்றால் யார் இஷ்டதெய்வத்தின் பாதையை, மந்திரோபதேசத்தின் மூலம் காண்பித்துக் கொடுக்கின்றாரோ, அவரே. குரு ஒருவரே ; உப குருக்கள் பலர் இருக்கலாம். சத்குரு, இந்த இந்த சாதனையைச் செய், அதோடு சத் சங்கத்தை நாடியிரு, என்று திட்டப் படுத்துவார். முன்னாளில் நியமம் இருந்தது—குருகுல வாஸம். குருவானவர் சிஷ்யனுடைய நடத்தையைக் கவனித்து வருவார்; சிஷ்யனும் குருவுக்குத் தொண்டுசெய்து வருவான். சிஷ்யன் வழிதவறிச் சென்றால், குரு திருத்திச் சரியான வழியில் திருப்பிக்கொண்டு வருவார். ஆகையால் பிரம்மத்தை அறிந்த ஞானியோ சித்திபெற்ற மகா புருஷரோ அல்லாத வேறொருவரைக் குருவாகக் கொள்வதால் பயன் இல்லை.

சிஷ்யர் :—சித்திபெற்ற மகா புருஷர் என்று எப்படித் தெரிந்துகொள்வது ?

சுவாமிகள் :—கொஞ்ச நாள் அவரோடுகூடத் தங்கியிருந்தால் தெரிந்துகொள்ளலாம். குருவும் சிஷ்யனைக் கவனித்து வருவார். சிஷ்யனுக்கு விஷய போகங்களில் ஆசை பலமாக இருந்து, அவனை அவற்றிலிருந்து சுலபமாய்த் திருப்ப முடியாது என்று குரு அறிந்தாரானால், அவனுக்கு மந்திரோபதேசம் செய்யாமல் அவர் அவனைத் திருப்பி அனுப்பிவிடுவார். மற்று, சிஷ்யனிடம் விவேகமும் வைராக்கியமும் இருக்கிறதென்று அறிந்தாரானால் அப்போது அவனைத் தம் கூடவே வைத்திருப்பார் ; சாதனை மார்க்கத்தில் கொஞ்சம் கொஞ்சமாக முன்னேறும்படி செய்து வருவார். குலகுருவானால் ஒரு நன்மை இருக்கிறது ; அதாவது, சிஷ்யனுடைய வம்சத்தைப் பற்றிய செய்தியெல்லாம் அவர் தெரிந்து வைத்திருப்பார்.

சிஷ்யர்: —மனத்தை ஒருமுகப்படுத்தி நிலைக்கச் செய்வது எப்படி ?

சுவாமிகள் :—மனத்தை ஒருமுகப்படுத்துதற்குரிய உபாயம் சாதனை, பஜனை, தியானம், தாரணை முதலியன. பிராணாயாமமும் ஓர் உபாயம் ; ஆனால், குடும்ப வாழ்வில் உள்ளவர்க

ளுக்கு அது ஆபத்துக்கிடமானது. பிராணாயாமம் பழகும் போது சரியானபடி பிரம்மசரியம் காக்காவிட்டால், நோய் உண்டாகும். பிராணாயாமம் செய்யும்போது, சாத்வீகமான ஆகாரம், உத்தமமான இடம், பரிசுத்தமான காற்று ஆகிய இவையெல்லாம் வேண்டும். தாரணை தியானம் முதலியன செய்யவேண்டுமென்றால், ஒருவிதமான கட்டுப்பாடும் இல்லை; யாரும் இல்லாத இடத்தில் இருந்துகொண்டு தியானம் பழகினால் ஆயிற்று; தினம் இரண்டொரு மணிநேரம் தியானம் செய்தோம், தீர்ந்தது என்பது இல்லை. எவ்வளவு அதிகமாகச் செய்யமுடியுமோ, அவ்வளவுக்கு மனம் ஒருமுகப்பட்டு பகவானிடத்தில் முற்பட்டுச் செல்லும். அவரைத் தேடு. காமம், காசாசை ஆகிய இரண்டையும் ஒழித்து அவர் ஒருவரை மாத்திரமே பற்றியிரு. ஆனால், முதலில் அகத் துறவு, இந்த அநித்திய வஸ்துக்கள் எல்லாவற்றிலிருந்தும் மனத்தை முதலில் பிரித்து எடுத்துவிட்டால், வெளித் துறவு தானாக ஏற்பட்டு விடும்.

சிஷ்யர் :—ஸ்வாமிஜி வேதாந்தத்தில், 'பிரம்மம் ஸத்யம், ஜகத்மித்யா' என்று சொல்லப்படுகிறதே, அதன் கருத்து என்ன?

சுவாமிகள் :—அதன் கருத்து, ஜகத் அதாவது இந்த உலகம் எந்தவகையில் நமக்குத் தோற்றுகிறதோ அதெல்லாம் மித்யா, அதாவது பொய் என்பது. சமாதியில் உலகம் தோற்றுவதில்லை. சுஷுப்தியின் (ஆழ்ந்த தூக்கத்தின்) பிறகு மனதுக்கு எவ்வித ஆநந்தம் ஏற்படுகிறதோ, அதுபோன்ற நிரந்தரமான ஆநந்த அநுபவம் உண்டாகின்றது. ரிஷிகள் சமாதி நிலையிலிருந்து இறங்கிவரும்போது, அவர்களைக் கேட்டால், சொல்லுகிறார்கள்: "ஆநந்தம்! ஆநந்தம்!" என்று. வேறொன்றும் அவர்களால் பேச முடியவில்லை. அப்போது 'நான்,' 'நீ' என்பது ஒன்றும் இருப்பதில்லை. இருப்பது கேவலம் சச்சிதாநந்தமே. கடவுள் ரூபி, அரூபி; பின் அவற்றைக் கடந்தவரும் ஆவார்.

சிஷ்யர் :—கடவுள் இருக்கின்றார் என்பதற்குப் பிரமாணம் என்ன ?

சுவாமிகள் :—மகான்கள், "நாங்கள் கடவுளைக் கண்டிருக்கிறோம்; நீங்களும் அதைப்போலக் காணலாம்," என்கிறார்கள். ஸ்ரீ ராமகிருஷ்ணர் சொல்வார்: "கஞ்சா, கஞ்சா என்று வாயால் சொல்லிக்கொண்டிருந்தால் ஒருவனுக்கு வெறி உண்டாகாது. கஞ்சாவைத் தேடிக்கொண்டு வா; அதைக் கசக்கிக் குடி; பிறகு கொஞ்சம் பொறுத்திரு; அப்போது மயக்கம் உண்டாகும்." சும்மா, 'கடவுள் கடவுள்' என்று வாயால் சொன்னால், கடவுளைக் காணமுடியாது. சாதனை செய்; பிறகு அவருடைய கிருபையின் பொருட்டுக் காத்திரு; தக்க வேளையில் அவருடைய தரிசனம் கிடைக்கும்.

சிஷ்யர் :—ஸ்வாமிஜி, ஜபம் செய்யச்செய்ய சில வேளையில் எல்லாம் மறந்துபோகிறதே—அது என்ன?

சுவாமிகள் :—பதஞ்சலி முனிவர், "அது தடை," என்று சொல்லுகின்றார். தியானம் என்பது, கடவுளை இடைவிடாது நிரந்தரமாகக் கருதியிருத்தல். அது பழுத்தால் அதாவது பிரத்யக்ஷ தரிசனம் உண்டானால், சமாதி. சமாதியின் பிறகு ஆநந்த வெள்ளம் அதிக காலம் தங்கி நிற்கின்றது. ஆயுள் பரியந்தம் நிற்கிறதென்று சிலர் சொல்லுகிறார்கள்.

ஸ்ரீ சைதன்ய தேவர் தமது சிஷ்யர் ஒருவரை ராமாநந்தரிடம் அனுப்பினார். அந்த சிஷ்யர் ராமாநந்தரைக் கண்டபோது, அவருடைய வாழ்க்கையைப் பார்த்து, முதலில் அவரை ஓர் சுகவாசியென்று எண்ணினார். ஆனால், பகவானுடைய நாமத்தைச் சொன்ன மாத்திரத்தில், அவருள்ளே யிருந்து பிரேமை வெள்ளம் பொங்கி வழிந்தது. சிஷ்யர் மலைத்துப் போனார். சாதுவானொலொழிய சாதுவை அறிய முடியாது. சாதனைசெய்து உன்னத நிலையை அடைந்தோரை அறியமுடியாது. கதை சொல்லுவார்கள், வைரக் கல்லின் விலையைக் கத்தரிக்காய்க் கடைக்காரன் அறிய மாட்டான் என்று.

மனத்திலுள்ள வாஸனைகள் (முன் செய்த வினைகளாலுண்டான பதிவுகள்) உண்மையானவையல்ல. 'எல்லாம் அஸத்' என்று, தியானம் செய்யும்போது கருதவேண்டும். இவ்வண்ணம் கருதக் கருதக் கிரமமாக மனத்தில் ஸத்பாவனையின் பதிவு

(நல்ல சம்ஸ்காரம்) உண்டாகும். மனத்தினின்றும் அஸத் பாவனை எவ்வண்ணம் நீங்குமோ, அவ்வண்ணம் ஸத் பாவனை வந்துகொண்டிருக்கும். தியானம் செய்யச் செய்யப் பல வேளைகளில் ஜோதி தரிசனம் உண்டாகிறது. மேலும் ஓரோர் வேளையில் பிரணவ ஓசை அல்லது மணி ஓசை, இல்லாவிட்டால் தூரத்திலிருந்து ஏதோ ஓர் இனிய சத்தம் கேட்க நேரிடுகின்றது. ஆனால் இவற்றிலெல்லாம் மகிமை ஒன்றுமில்லை. இன்னும் முன்னேறிச் செல்லவேண்டும். ஆனால் அந்த லக்ஷணங்கள் நல்லவை. அம்மாதிரி ஏற்பட்டால், 'சரியான வழியில் செல்லுகின்றேன்,' என்று உணர வேண்டும்.

நம்பிக்கை வேண்டும். மிக தைரியசாலி ஒருவன் இருந்தான். சாவதற்குப் பதினைந்து நிமிஷத்துக்கு முன்னால், தன்னைச் சூழ்ந்தாரைப் பார்த்துச் சொல்லுகிறான்: "ஏ! கொண்டு போங்கள்; என்னைக் கங்கைக்குக் கொண்டுபோங்கள்; நான் இங்கே சாவேன் என்று நினைக்கின்றீர்களா?" கங்கைக்குப் போனதும், சற்றே சிரித்தான்; பின், "தாயே, கங்கா! நீயிருக்கிறாய் என்று நான் இவ்வளவு பாவம் செய்து விட்டேன். நீ எல்லாவற்றையும் கழுவித் துடைத்து விடுவாய் என்று எனக்குத் தெரியும். ஓ தாயே! என்னைக் காப்பாற்று!" என்றான். உடனே உயிர்விட்டான். பக்தி, இவனுடைய நம்பிக்கையைப் போன்றதொன்றாக இருந்தால் பகவானை அடையலாம்.

---

# 20

## கடவுள் தரிசனம்

[கல்கத்தாவில் ஒரு பக்தருடைய வீட்டில் 1922 பிப்ரவரி 19உ யன்று நடந்த சம்பாஷணை]

சுவாமிகள் பக்தருடைய க்ஷேமம் விசாரிக்கின்றார்.

பக்தர்:—பாதகமில்லை; ஒருவாறு நடந்து கொண்டிருக்கிறது.

சுவாமிகள்:—மனம் எப்படி? சொல்லும்.

பக்தர்:—தற்சமயம் பாதகமில்லை.

சுவாமிகள்:—பேஷ்; அப்படியிருந்தால் போதும். மனம் நல்ல நிலைமையில் இருந்தால் எல்லாம் கைகூடிற்று. அவருடைய பாத பத்மங்களைச் சிந்தித்திரும்; அவர் தம் இச்சை எப்படியோ அப்படியே நடத்தட்டும். அவருடைய பாத பத்மங்களிலேயே எப்போதும் மனத்தை நிறுத்திவையும்; சம்சார வாழ்வை விடும். சம்சார வாழ்வில் மனத்தை அதிகம் செலுத்தாதீர்; அது கண்யமில்லாத வாழ்வு; அளவுக்கு மீறி அதில் பற்று வைக்கலாகாது. நீர் கொஞ்சம் பாடுபடும்—உம்முள்ளே வஸ்து இருக்கிறது; கொஞ்சம் பாடுபட்டால் ஆய்விடும். மனப்பூர்வமாக நீர் பாடுபடவேண்டும். ஈடுபடும். கொஞ்சம் பாடுபட்டால் காணப்பெறுவீர்; என்ன ஆனந்தம்! அது என்ன மனோகரம்! இந்த மாயையை வெல்லவேண்டும்—இந்த ஜன்மத்திலேயே இதைக் கடந்து கரையேற வேண்டும். இந்த மாயையை வெல்வது என்ன சுலபமா! அதிகமாக உழைக்க வேண்டும்; மிகுந்த நம்பிக்கை வேண்டும். சந்தேகம் எள்ளளவு இருந்தாலும் ஆகாது. தீவிரமான நம்பிக்கையை உறுதியுடன் கொள்ளவேண்டும்.

பக்தர்:—இடையிடையே அவநம்பிக்கை ஏற்பட்டால் என் செய்வது?

சுவாமிகள் :—என்ன தெரியுமா? பழுத்த நம்பிக்கை, அதாவது அசைக்க முடியாத உண்மையான நம்பிக்கை, எப்போது உண்டாகும்? அது அநுபூதி - தரிசனம் - ஏற்பட்டால் ஒழிய உண்டாவதில்லை. ஒருமுறை அவருடைய தரிசனம் கிடைத்தால், அநுபூதி ஏற்பட்டால், அப்போதுதான் அசைக்க முடியாத உண்மையான நம்பிக்கை உண்டாகின்றது. அதற்கு முன்னதாக, பழுக்காத காய்ப்பருவமான, ஒருவகை நம்பிக்கை ஏற்படுகின்றது, அவ்வளவுதான். அதனால், மிகுந்த முயற்சியோடு பலவந்தமாக நம்பிக்கை கொண்டுவர வேண்டும். திரும்பத் திரும்ப இவ்விதம் செய்யச் செய்ய நம்பிக்கை திடப்படுகின்றது. அவநம்பிக்கை கொள்ளக் கூடாது. எப்போது சந்தேகம் ஏற்படுகிறதோ அப்போது இவ்வண்ணமாக மனத்தில் பாவிக்கவேண்டும்: "கடவுள் இருப்பது உண்மை; என்னுடைய அதிருஷ்ட தோஷத்தினால், என்னுடைய அசுப சம்ஸ்காரத்தினால் (தீவினைப் பயனால்) அவரை நான் காணமுடியவில்லை. அவருடைய கிருபை உண்டாகும்போது நிச்சயமாக அவரைத் தரிசிப்பேன்."

இந்த மனமானது என்ன, அவரை அறியும் சக்தியுடையதா? அவர் இந்த மனம் புத்திக்கெல்லாம் வெகு தூரத்தில் உள்ளவர். இந்தச் சிருஷ்டி உலகைப் பார்க்கின்றீரே, இது தான் மனத்தின் ராஜ்யம்; மனந்தான் கர்த்தா. இதெல்லாம் மனத்தினுடைய சிருஷ்டிதான். இதைக் கடந்து அப்பாற் செல்ல அதனால் இயலாது. பகவானுடைய நாமத்தைச் சொல்லச் சொல்ல, இன்னொரு சூக்ஷ்ம மனம் உதிக்கிறது. அந்த மனம் இப்போது சிறு விதையின் வடிவத்தில் எல்லாருள்ளும் இருக்கின்றது; சாதனை வழியாக அந்த மனம் எப்போது மலர்ந்த தோற்றத்தைப் பெறுமோ, அப்போது பலவகையான சூக்ஷ்ம அநுபூதி உண்டாகின்றது. அதுகூட முடிவானது அன்று. இந்த சூக்ஷ்ம மனங்கூட பரமாத்மாவின் அருகாமை வரையில் நம்மைக் கொண்டுபோகும் வல்லமை வாய்ந்ததல்ல; ஆனால் வெகுதூரம் வரை உயரக் கொண்டுபோகிறது. அப்போது வெளி உலகத்தில் ஒன்றும் இன்பம் கொடுப்பதாக

இராது. வெறும் கடவுள் சிந்தனையிலேயே மூழ்கிக் கிடக்கத் தான் இச்சை உண்டாகின்றது.

அதற்குப் பின் சமாதி. அந்தச் சமாதி நிலையை வர்ணித்துச் சொல்ல முடியாது—அஸ்தி நாஸ்தி (உள்ளது இல்லது) க்கு அப்பாற்பட்டது. அங்கே சுகம் என்பதும் இல்லை, துக்கம் என்பதும் இல்லை; ஆநந்தமும் இல்லை, நிராநந்தமும் இல்லை; ஒளியும் இல்லை; இருளும் இல்லை—என்ன இருக்கிறது என்பதை வாயினாற் சொல்ல முடியாது.

வேதத்தில் சத்வம், ரஜஸ், தமஸ் என்றிந்த மூன்று குணங்கள் கூறப்பட்டிருக்கின்றன. இந்த மூன்று குணங்களையும் கடந்து அப்பாற் போகவேண்டும். திரிகுணாதீதன் (முக்குணங் கடந்தவன்) ஆகவேண்டும். கீதையில் இருக்கிறது, "த்ரை குண்ய விஷயா: வேதா: நிஸ்த்ரைகுண்யோபவார்ஜுந" என்று. தமோகுணங்களின் லக்ஷணங்கள் – சண்டை, சச்சரவு, துவேஷம், ஹிம்ஸை, அபிமானம், அஹங்காரம் முதலியன. ரஜோகுணத்தில் கொஞ்சம் தர்மம் இருக்கின்றது. ஆனால் பேர் புகழ் ஆகிய இவையெல்லாம் அதன் லக்ஷணங்கள். எப்படி என்று தெரியுமா? ஒருவன் உட்கார்ந்து கொஞ்ச நேரம் தியானம் செய்தான்; அப்புறம் தியானத்திலிருந்து எழுந்து நாலு பக்கமும் சுற்றிப் பார்த்தான், யாராவது தான் தியானம் செய்வதைப் பார்த்தார்களா என்று! அது ரஜோ குணத்தின் போக்கு. அப்புறம் சத்வ குணம் இருக்கிறது. வேதத்தில் இந்த மூன்று குணங்களையும்பற்றிச் சொல்லப்பட்டிருக்கிறது; அவற்றிற்கு அப்பாற்பட்டதைப்பற்றிய சொல் இல்லை. வேதங்களைக் கடந்து அப்பாற் போகவேண்டும்.

பக்தர்:—இந்தச் சம்ஸார வாழ்வில் சில சில காரியங்களைச் செய்யவேண்டியது நம் கடமையென்று மனத்தில் தோன்றுகிறதே! அவற்றை எவ்வகையாகச் செய்வது?

சுவாமிகள்:—நீர் இவ்வகையாக அவற்றைச் செய்யக்கூடுமானால், அதாவது "இது பகவானுடைய சம்ஸாரம், என்னுடையதல்ல" என்ற பாவனையோடு செய்தால், உமக்குக் கொஞ்சமும் கேடு உண்டாகாது. சம்ஸாரத்தில் எதன்மேலும்,

'என்னுடையது' என்ற இந்த அறிவை வைக்காதீர். "நான் செய்வது ஒன்றுமில்லை! இச் சம்ஸாரத்தில், அவருடைய இச்சை எவ்வளவு நாளோ அவ்வளவு நாள், என்னை வைத்திருப்பார்; பின் அவருக்கு எப்போது இஷ்டம் உண்டாகுமோ, அப்போது என்னை அதிலிருந்தும் நீக்கி விடுவார்" என்று இவ்விதமாகப் பாவித்திரும்.

சம்ஸாரத்தில் செய்யவேண்டிய காரியங்கள் எவையோ அவற்றைச் செய்கிற காலத்தில் உமது உத்தேசத்தை யாரும் கொஞ்சங்கூட அறிந்துகொள்ள முடியாதபடி, முழு மனதையும் செலுத்திச் செய்யும். ஆனால், மனத்தின் உள்ளுக்குள்ளே சரியாக நிலைத்து இருக்கட்டும், "என்னுடையது என்பது ஒன்றுமில்லை" என்பது. ஒரு வஸ்துவினிடத்திலும் ஆசை வைக்க வேண்டாம். "நான் செய்வது ஒன்றுமில்லை; எல்லாம் அவரே செய்கின்றார்" என்று மனதிலே உள்ளத்திலே உணர்ந்திருக்க வேண்டும். அவருடைய இச்சைப்படி இந்த சம்ஸாரம். இது இருந்தாலும் நல்லது; இல்லாமற்போனாலும் நல்லதே. அவரது இச்சை எப்படியோ அப்படியே செய்யட்டும்.

பக்தர் :—இவ்வகையாகச் செய்துவரும்போது, மனம் ஒவ்வொரு வேளையில் நோக்கத்தை மறந்து, ஏதேனும் ஒரு பொருளை 'என்னுடையது' என்று உணரத் தலைப்பட்டால், எந்தப் பொருளினிடத்திலாவது ஆசை ஏற்பட்டுவிட்டால் என்ன செய்வது?

சுவாமிகள் :—மனத் தளர்ச்சிக்கு உட்படாதீர். எதன் பொருட்டும் மனந்தளர ஒருக்காலும் இடம் கொடாதீர். ஒவ்வொரு சமயம் நோக்கத்தை மறந்துவிடக்கூடும்; மறந்து விட்டால்தான் என்ன? அதனாற் கேடில்லை. திரும்பவும் தீவிரமாக ஈடுபட்டு முன் செல்ல வேண்டும். பிராணனைக்கொடுத்து மறுபடியும் மறந்துபோகாதிருக்க முயற்சி செய்யவேண்டும். சந்தேகமும் குழப்பமும் ஏற்படும். அவற்றை யார்தான், கடவுளைத் தரிசிப்பதற்கு முன்னதாக முற்றிலும் கொல்லமுடியும்? அவை வரும் போகும். அது அவற்றின் இயல்பு. எத்தனை தரம் மறந்துபோனால்தான் என்ன? சிறிதேனும் மனந்தளராதீர். எப்போதும் மனத்தில் உற்சாகம் இருக்கட்டும். முன்னிலும்

பார்க்க அதிக ஊக்கத்தோடு ஈடுபடும். எதனாலும் முயற்சியை விட்டுவிடாதீர். ஒன்று செய்வது அல்லது சாவது, என்ற தீர்மானத்தை உம்முடைய வாழ்வின் நோக்கமாகக் கொண்டுவிடும். கடவுளைத் தரிசித்தே ஆகவேண்டும்; இந்த ஜன்மத்திலேயே தரிசிக்கவேண்டும். "இந்த உடலிருக்கும்போதே கடவுளையடையவில்லையென்றால், இந்த மனத்தைக் கொண்டே அவரை அடையப்போவதில்லையென்றால், பின் இவ்வுடலாலே யாது பயன்; இம்மனத்தாலே ஆவதென்ன? இந்த உடலும் மனமும் நாசமாய்த்தான் போகட்டுமே? அதனால் எனக்கென்ன கேடு? எவ்வகையிலானாலும் நான் கடவுளைக் காணவேண்டும். இவ்வுடல் இருந்தாலும் சரி, போனாலும் சரி" என்று உறுதி கொண்டு முற்படுவீர்.

---

## 21

## சேரும் பல படிகள்

[கல்கத்தாவில் பக்தர் வீட்டில் நடந்த சம்பாஷணை]

பக்தர் :—வெவ்வேறு வகையான பூஜா விதிகளும், விதவிதமான தேவ தேவிகளும் இருக்கின்றனவே, இவற்றுள் ஏதேனும் விசேஷத்வம் பெற்று இருக்கிறதா?

சுவாமிகள் :—வேறு வேறாய் இருந்தாலும் எல்லாம் ஒரே நோக்கத்தையே உடையன—அதாவது கடவுள் தரிசனம். மனிதர்களின் இயல்பிலும் மனப்பான்மையிலும், ஒருவருக்கொருவர் எவ்வளவு பேதமுடையவர்களாய் இருக்கிறார்கள்; எந்த ஒரே வழியையும் அவர்கள் எல்லா ஞான முன்னேற்றத்துக்கும் சாதனைகளுக்கும் தகுந்ததாகக் காட்ட முடியாது. வெவ்வேறு இயல்புடையவர்களுக்கு வேறுவேறு சாதனையும் விதவிதமான வழிபாடும் வேண்டியிருக்கின்றன. விதவிதமான தேவ தேவிகள் என்னென்ன உண்டோ அவையெல்லாம் ஒன்றே.

சாஸ்திரங்களில் இவ்விதம் சொல்லப்பட்டிருக்கிறது :

"உத்தமோ பிரம்மஸத் பாவோ த்யான பாவஸ்த மத்யம:
ஸ்துதிர் ஜபோ அதமோ பாவோ பாஹ்ய பூஜா அதமாதமா:"

எல்லாவற்றிலும் உத்தமமான ஸாக்ஷாத் சாதனையாவது:—அந்த பரமாத்மா இருக்கின்றான், ஸர்வதா அவனுடைய அநுபூதியும் இருந்துகொண்டிருக்கிறது. (அதாவது அந்த நிலையை எப்போதும் அனுபவித்துக்கொண்டிருத்தல். அதற்கடுத்தது தியானம். எங்கே ஈஸ்வரன் இருக்கின்றான்; நானும் இருக்கிறேன்—அங்கே ஜபம் தபம் எல்லாம் நின்றுபோகும். தியானம் கூடும்போது அங்கே ஈசுவரனுடைய உருவம் மட்டும் காண்பீர்; அப்போது ஜபம் தபம் ஒன்றும் நடக்கிறதில்லை. இது மத்யம சாதனை: இதற்குக் கீழ்ப்பட்டது ஜபமும் துதி செய்தலும்—ஜபம் செய்துகொண்டே, அதன்கூடவே ஈஸ்வரனுடைய உருவத்தையும் சிந்தித்துக்கொண்டு போவது. இது அதமம் அதாவது கீழான சாதனை. அதற்கும் கீழ்ப்பட்டது இந்த பாஹ்ய பூஜை—பிரதிமை அல்லது விக்ரகத்தை வைத்துப் பூஜைசெய்தல். இது அதமாதமம். (எல்லாவற்றிலும் கீழ்ப்பட்டசாதனை.) விதவிதமான இந்தச்சாதனைகள் எல்லாம் மனத்தின் சிருஷ்டியே. இவைகளெல்லாம் கிரமமாக உயர்ந்து செல்வதற்கான பல படிகள். யாருடைய மனம் எந்தப்படியில் இருக்கிறதோ அங்கிருந்து சாதனையை ஆரம்பித்துப் பின் கிரமமாக முன்னேறிச் செல்லவேண்டும். சாதாரண மனிதன் ஒருவன் இருக்கிறான் என்று வைத்துக்கொள்ளும். அவனுக்கு ஒரேயடியாய் நிர்குண பிரம்ம உபாசனை அல்லது சமாதி சம்பந்தமாக உபதேசம் செய்தால், ஒன்றுமே பிடிபடாது. அவனால் சிறிதும் கிரகிக்க முடியாது; அதில் அவனுக்கு விருப்பம் ஏற்படாது. இரண்டொரு நாள் முயன்று பார்ப்பான்; பிறகு முற்றிலும் விட்டுவிடுவான். ஆனால், அவனைப் பூ, வில்வம் முதலியன வைத்துக்கொண்டு பூஜை செய்யும்படி செய்வோமானால், அவனுக்கு அதில் தான் ஏதோ கொஞ்சம் செய்ததாக எண்ணமும் திருப்தியும் உண்டாகும். அவனுடைய மனமும் கொஞ்ச நேரத்துக்காயினும் ஓரளவு நிலைத்து நின்றதாகும். இதில் ஒரு

நல்ல ஆநந்தமும் அவனுக்கு உண்டாகிறது. பிறகு கிரமமாக அவன் அந்தப்படியைக் கடந்து மேற்படிகளுக்கு ஒவ்வொன்ருய்ப் போகிருன்.

மனம் எவ்வளவுக் கெவ்வளவு சூக்ஷ்ம மடைகிறதோ அவ்வளவுக் கவ்வளவு ஸ்தூலப் பொருள்களில் அம்மாதிரியான இன்பம் ஏற்படுவதில்லை. நீரே முதலில் பூஜை செய்ய ஆரம்பித்ததாக வைத்துக் கொள்ளும். கொஞ்ச நாளைக்குப் பிறகு பார்ப்பீர், ஜபம் செய்தால் நல்லது என தானே மனதில் தோன்றும். அப்போது ஜபம் அதிகப் பட்டுவிடும். அப்புறம் கொஞ்ச நாள் கழித்து தியானம் செய்தால் நல்லது என்று மனதில்படும். அப்போது சும்மா தியானம் செய்வதிலேயே இச்சை போகும். இப்படியே மனிதன் படிப்படியாகத் தன் லக்ஷியத்தினிடம், அதாவது தான் சேரவேண்டிய நோக்கத்தின்பால் முன்னேறிச் செல்கிருன். இதைத்தான் முறையான முன்னேற்றம் என்று சொல்வது. இவ்வழியில், மனம் ஏதோ சிறிதளவுக்கும் நன்மையடைந்தாலும், அது பின் எப்போதும் நஷ்ட மடைவதில்லை.

நீர் இந்தக் கூடத்தில் இருக்கிறீர் என்று வைத்துக் கொள்ளும். மாடியின்மீது ஏறவேண்டும். எங்கே படிக்கட்டு இருக்கிறதென்று தேடிப்பிடித்து, படிக்கட்டு ஏறி, அப்புறம் மேலே போகவேண்டும் அல்லவா? அப்படியில்லாது, கூடத்தில் இருந்தபடியே யாராவது உம்மைத் தூக்கி மேலே எறிந்தால், அப்போது உமக்கு எவ்வளவு கஷ்டம் உண்டாகும்? மேலும் அதில் பெரிய விபத்து ஏற்படக்கூடிய பயமும் அதிகம் உண்டு. இந்த வெளி உலகில் எப்படிப்பட்ட நியமம் நீதி நிகழ்வதைக் காண்கிறீரோ, உள் உலகிலும் அதே மாதிரி எல்லா நியமங்களும் இருக்கின்றன. ஆகையால் ஆபத்துக்களும் விபத்துக்களும் ஏற்படாமல் இருக்க வேண்டுமானல், கடவுள் காட்சியைப் பெறுவதற்கு நீர் செய்யும் முயற்சியில், மகான்கள் முன்னல் வகுத்துக் காட்டிய வண்ணம், படிப்படியாக மேலேறிப் போகவேண்டும்.

பக்தர் :— ஏதோ, ஓர் எண்ணம் எனக்குத் தீமை செய்யக் கூடியதென்று நான் நன்ருய் அறிந்தாலும், அடிக்கடி அந்த

எண்ணம் என் மனத்தில் எழுந்தால், அதற்கு நான் என்ன செய்ய வேண்டும்?

சுவாமிகள் :— "இந்த எண்ணம் எனக்குப் பரம சத்ரு; முற்றிலும் தீமை விளைக்கக் கூடியது; இது என்னை அடியோடு நாசம் செய்யக் கூடியது" என்று சிந்திக்க வேண்டும். அடிக்கடி இந்தப்படி சிந்தித்து, இந்த சிந்தனை மனதில் நன்றாகப் பதியும் படிச் செய்யும். அப்போது அந்த எண்ணமானது தானாகவே மனத்திலிருந்து விலகிப்போய் விட்டதென்பதைக் காண்பீர். உதாரணமாகப் பாரும். இதோ இந்தப் பையன் இங்கே உட்கார்ந்திருக்கிறானே, இவனைப்பற்றி நீர் இம்மாதிரியாகச் சிந்தனை செய்யும்: "அவன் யாரோ, நமக்கும் அவனுக்கும் சம்பந்தமில்லை." அப்போது அப்பையனைப் பற்றிய எண்ணமே உமது மனத்தில் பதியாது; அவன் பக்கமே உமது மனம் போகாது. இன்னொரு உதாரணம் சொல்கிறேன், பாரும். ஒரு சின்னக் குழந்தை; அக்குழந்தைக்குத் தெரியாது, விஷம் என்றால் இன்னது என்பதும், தின்றால் என்ன ஆகும் என்பதும். அதன் அருகில் கொஞ்சம் விஷம் இருந்தால், அதைப் பார்த்து அக்குழந்தை பயப்படாது. ஆனால், கொஞ்சம் விஷம் உம் அருகில் இருக்கக் கண்டால், அப்போது நீர் "அடேயப்பா" என்று துள்ளி எழுந்து பத்து முழம் எட்ட நகர்ந்து ஓடிப்போவீர். விஷம் தின்றால் ஆள் இறந்துபோவான் என்று உமக்குத் தெரியுமல்லவா? அதனால் அப்படி ஓடுகிறீர். மனம் அப்படிப்பட்ட ஒரு விநோதமான வஸ்து—என்ன கற்பிக்கிறீரோ, அதைக் கற்றுக் கொள்ளும்.

முதலில் லக்ஷியம், அதாவது நோக்கம் இன்னதுதான் என்பதை ஸ்திரப்படுத்த வேண்டும். பகவானே வாழ்வின் ஒரே நோக்கம். நோக்கத்தை ஒருநாளும் சிறுமைப் படுத்தக் கூடாது. 'அணோரணீயான் மஹதோ மஹீயான்'—அவரே சிறு அணுவுக்கும் அணுவாய் இருப்பவர், மேலும், இந்த பிரம்மாண்டத்தையும் பார்க்கப் பெரியோனாய் இருப்பவர் அவரே. அவர் எங்கும், எக்காலத்தும் நிறைந்திருப்பவர்; அதை அறிய வேண்டும். அவர் உம்முள்ளேயும் இருக்கிறார், என்னுள்ளேயும் இருக்கிறார்; பின் ஜீவ, ஜந்து, மரம், செடி எல்லாவற்றினுள்

ளேயும் இருக்கின்றார். ஆனால் சிலவிடத்தில் அவருடைய பிரகாசம் அதிகம்; இன்னும் சில விடத்தில் குறைவு. ஆயினும், அந்த ஒரே பரமாத்மாவே எங்கும் வீற்றிருக்கிறார்; கொஞ்சம் பாடுபடும்; இதில் என்ன விநோதமிருக்கிற தென்பதைக் காண்பீர். சம்ஸாரந்தான் எப்படிப்பட்டது என்பதைப் பார்த்து விட்டீர்; இப்போது இந்தப் பக்கம் ஒரு முறை பாரும். "Knock and it shall be opened unto you." தட்டுவீரானால், கதவு திறந்துவிடும். திரை போடப்பட்டிருக்கிறது; விலக்கிக்கொண்டு பார்க்கவேண்டும். இந்த மாயையாகிற சுழலிலிருந்து வெளிப்படுவது சிறிதும் கஷ்டமில்லை; வெகுசுலபம். ஒருமுறை இவ்வழி பற்றிச் செல்லும்; அப்போது உலகம் வேறொரு மாதிரியாக ஆரம்பித்துவிட்டதைக் காணுவீர்.

பக்தர் :—சாஸ்திரங்கள் முதலியவற்றில் என்னென்ன இருக்கின்றனவோ, அவை யெல்லாம் உண்மையென நம்பலாமா?

சுவாமிகள் :— ஆம், அவை யெல்லாம் உண்மை. உலக நன்மைக்காக யுக யுகாந்தரமாய் அவை யெல்லாம் ஏற்பட்டு வந்திருக்கின்றன; அவற்றில் நம்பிக்கை வைக்கவேண்டும். சாஸ்திரங்களில் சொல்லப்பட்டுள்ள கர்மங்களின்படியே நடந்து வாரும்; இல்லாவிட்டால் ஒன்றும் நடவாது. அக்கர்மமே உம்மைக் கடைசிவரை கொண்டுபோய் சேர்க்கும். எப்போது உமக்குச் சத்திய தரிசனம் சித்திக்குமோ, அப்போது கர்மம் தானே விழுந்து விடும்.

பக்தர் :—ஆகாரம் சம்பந்தமான நியமங்கள் என்ன?

சுவாமிகள் :—இது மிகக் கடினமான கேள்வி. இதற்குப் பதில் சொல்வது மிகக் கடினம். மனிதருடைய சரீர இயல்பில் அதிக பேதம் இருக்கிறது. ஒருவருடைய உடம்பின் தன்மையைப் போல இன்னொருவருடைய உடம்பு இருப்பதில்லை. எனவே எல்லாருக்கும் பொதுவாக ஒரேவிதமான நியமம் உண்டாக்க முடியாது. ஏதோ ஒரு பொருள், என் உடம்புக்கு ஒத்துக் கொள்ளுகிறதென்று வைத்துக் கொள்ளும்; அது உம்முடைய உடம்புக்கு ஒத்துக் கொள்ளாமற் போகும். என் உடம்

புக்கு ஒரு வஸ்து ஜீரணமாகும்; அது உம் உடம்புக்கு ஜீரணமாகாமற் போகும். அதனால், கீதை முதலான நம்முடைய சாஸ்திரங்களில், ஆகாரத்தைப் பற்றி, விசேஷமான முறையில் ஒன்றும் சொல்லப்படவில்லை. கீதையில் ஆகாரத்தைப் பற்றிப் பொதுவான முறையில் சொல்லப்பட்டிருக்கிறது. மொத்தமாக இப்படிச் சொல்லலாம். 'மீதூண் விரும்பேல்'. அதிகச் சாப்பாடு உதவாது; முரட்டுத்தனமாக ஆகாரத்தை, வயிற்றில் ஜீரணிக்க முடியாத உணவை உட்கொள்ளக்கூடாது. ஒவ்வொருவரும் அவரவர் உடம்புக்கு எது ஒத்துக்கொள்ளுகிறது என்பதை ஆராய்ந்து அறிந்து அதன்படியே சாப்பிடுவது தான் உசிதமானது.

பக்தர் :— ஸ்வாமிஜி, மச்சம் மாமிசம் சாப்பிட்டால் ஹிம்ஸை செய்ததாக ஆகாதா?

சுவாமிகள்: அது உபயோகமில்லாத பேச்சு. மச்சம் மாமிசம் சாப்பிட்டால்தான் ஹிம்ஸையா? அப்படியில்லை. "அஹிம்ஸா பரமோதர்ம" என்று சொல்லப்படுகிறது—அது எப்போது? சமாதி ஏற்பட்ட பின்னர்; ஞானம் சித்தியடைந்த பிறகு; சர்வ பூதங்களிலும் பகவானைத் தரிசித்தபின்னர். அப்போதே அஹிம்ஸையைப் பற்றிப் பேசலாம். அந்த சமாதி நிலை யடையாமல் சும்மா வாயால் அஹிம்ஸை, அஹிம்ஸை என்று சொல்லிவிட்டாலே, அஹிம்ஸை ஏற்பட்டு விட்டதாமோ? 'நீர் எதுவோ, அதுவே தான் அந்த எறும்பும்; ஒருவிதமான பேதமும் இல்லை,' என்று எப்போது பார்ப்பீரோ, அப்போதுதான் சரியான அஹிம்ஸை. அதற்கு முன்னால் எப்படி அஹிம்ஸை வரும்? அஹிம்ஸை என்று இதோ சொல்கிறீரே, நீரென்ன ஹிம்ஸையை விட்டுவிட முடியுமா? என்ன சாப்பிடுவீர்?—உருளைக்கிழங்கா? உருளைக்கிழங்கை நட்டால், செடி உண்டாகிறது. அதில் உயிர் இல்லையா? சாதம் சாப்பிடுவீர் அல்லவா? எந்த நெல்லைக்குத்திச் சாதமாக்கிச் சாப்பிடுவீரோ அந்த நெல்லைத்தெளித்துப் பாரும்; அது பயிராகும்; அதிலிருந்து மறுபடியும் நெல் உண்டாகும். அதிலென்ன உயிர் இல்லையா? நல்லது, தண்ணீரை எடுத்துக் கொள்ளும் — அதில் எத்தனை லக்ஷாபலக்ஷப் பிராணிகள் இருக்கின்றன?—நீர் ஒரு 'மைக்ராஸ்கோப்' (பூதக் கண்ணாடி) வைத்துப் பாரும். எப்படி அந்தத் தண்ணீரைச் சாப்பிடுவீர்?

உயிர் வாழ வேண்டுமானால், மூச்சு விட்டாகவேண்டும். ஒவ்வொரு மூச்சிலும் நீர் எண்ணிலாத உயிர்களை நாசமாக்குகிறீர். அதில் ஒரு தோஷமும் இல்லை—ஒரு துண்டு மச்சத்தில்தான் வந்து விட்டது எல்லா தோஷமும்! இந்தப் பேச்சு நிற்கக் கூடியதா? நல்லது, யார் மரக்கறிச் சாப்பாடுதான் நல்லது என்கிறார்களோ அவர்கள் (மச்சம் மாமிசம் கூடாது என்பவர்) பால், மோர், நெய் இதெல்லாம் சாப்பிடுகிறார்களல்லவோ? ஒரு பிராணிக்கு உரியதை வஞ்சித்து, தாயினிடம் பாலூட்டும் கன்றைப் பலவந்தமாக இழுத்து, அப்புறம் கட்டிவிட்டு, அந்தப் பாலைத் தானே கறக்கிறார்கள்? யோசிக்கப் போனால், அதுவும் மகா பாதகம் உள்ளதோர் காரியந்தானே? அது உபயோகமில்லாத பேச்சு. இதெல்லாம் முன் நம் நாட்டில் இருந்ததில்லை; பின்னால் வந்து புகுந்தவை.

---

## 22

## சமாதி

சுவாமிகள்:—சமாதி பொதுப்பட இரண்டு வகைப்பட்டது. ஸவிகற்ப சமாதி (துவைத உணர்ச்சி உள்ள, அதாவது, தானும் கடவுளுமாகத் தனித்தனி காணும் காட்சியுள்ள பரவச நிலை) யென்றும், நிர்விகற்ப சமாதி (அவ்வேறுபாடில்லாத அத்வைத உணர்ச்சியுள்ள ஞான நிலை) யென்றும் அவற்றிற்குப் பெயர். ஒரு மனிதன் நிர்விகற்ப சமாதி அடையும்போது, நாம ரூபத்தைப்பற்றிய அறிவு ஒழிந்து, உலகம் முழுதும் ஒன்றுமில்லாமல் மறைந்து போகின்றது. காசிப்பூர் தோட்டத்தில் * ஸ்ரீ விவேகானந்த சுவாமிகள் நிர்விகற்ப சமாதி அடைந்திருந்தார். ஆனால் அப்போது அதைப்பற்றி யாருக்கும் தெரியாது. ஏனென்றால், தாம் பெற்ற ஞான அனுபவங்களைப் பிறருக்கு அவர் வெளியிடுவதில்லை. ஆநந்த சமாதியென்று சொல்லப்படும் இன்னொரு

*பகவான் ஸ்ரீ ராமகிருஷ்ணர் கடைசிநாளில் தங்கியிருந்தயிடம்.

வகைச் சமாதி நிலையும் உண்டு. இந்த நிலையில் மனமானது ஓர் அற்புதமான ஆனந்த பரவசத்தை யடைகின்றது. அளவிலடங்காத அவ்வாநந்தத்தின் மிகுதியை உடல் அப்போது தாங்குவது அரிதாகும்; அதன் பலனாக, உச்சந்தலையில் உள்ள ஞான வாயில் அல்லது பிரம்மரந்திரம் திறந்து விடுகின்றது. இந்த ஆநந்த அனுபவ நிலையில், சரீரமானது நீண்ட நாள் நிற்பதில்லை. மூன்று வாரங்கள் நின்றால் அதிகம்; அதற்குமேல் நிற்காது.

மனிதர் தம்மிடமுள்ள சத்வம், ரஜஸ், தமஸ் ஆகிய முக்குணங்களில் எது மேலோங்கி நிற்கிறதோ அதற்குத்தக்கபடி, கடவுளைப் பலவேறு வடிவங்களில் தரிசிக்கின்றனர். கடவுளைக் காணமுயலுவதாகிய இவ்விலையில்லாத மேலான வியாபாரத்தில் ஈடுபடுவதைவிட்டு, மக்கள் உபயோகமில்லாத உலகப் பொருள்களிலேயே வியாபாரம் செய்கின்றனர்! இது என்ன பேதமை! கடவுளையே ஓயாது நினைக்கவும் சிந்திக்கவும் ஆகிய பழக்கத்தை மனிதர் கைக்கொண்டு வளர்த்து வருதல்வேண்டும். ஏனென்றால், தம்முடையதென்று சொல்லக் கூடிய பொருள் கடவுளேயன்றி அவர்களுக்கு வேறொன்று இல்லை; இப்பேருண்மையை இப்பிறவியிலேயே மனிதர் உணருதல் வேண்டும்.

சாதாரண மனிதருடைய மனமானது எப்போதும் உலக போகங்களையே நாடிச் செல்லும் இயல்புடையது; ஆயினும் அதன் போக்கைத் திருப்பி மேல் நோக்கிச் செல்லும்படி மாற்றி விடவேண்டும். ஸ்ரீ ராமகிருஷ்ணருடைய மனம் எப்போதும் திவ்யாநந்த வுலகு ஒன்றில் பறந்து கொண்டிருந்தது; முக்கியமாய்ப் பஞ்சவடியின் அடியில் அவர் இருந்து சாதனை பயின்ற காலத்தில், நேரம் போவது கூடத் தெரியாதபடி அவ்வளவு உயர அது பறந்து நின்றது. பசி, தாகம், ஆகிய எல்லாவற்றையும் அடியோடு அவர் இழந்துவிட்டார். ஆனால், அவருடைய உடலைப் பாதுகாத்தற் பொருட்டு அவருக்குச் சேவைசெய்து வந்த ஒரு மனிதர், எப்போதும் காத்திருந்து, சதா அவ்வாநந்த நிலையில் உறைந்து கொண்டிருந்த அவர் எந்த சமயம் சற்றே இறங்கி வருவதுபோல் காணப்பட்டாரோ அப்போது ஒரு கவளம் சோற்றை அவர் வாயில் திணிப்பார். இப்படியாக இரவு

பகல் ஒரு நாள் முழுவதும் அவர் உட்கொள்ளும்படி செய்த உணவெல்லாம், அதிகமானால், சுமார் ஏழுவாய் அல்லது எட்டு வாய் அளவினதே யாகும். அதன் பிறகு வெகு நாட்கள் கழித்து நாங்கள் அவரைக் கண்டபோது, அப்பொழுதும் அவர் தம்முடையமனத்தை மிகப் பலவந்தத்துடனேயே உலக நிலைக்குக் கொண்டு வரவேண்டியிருந்த தென்பதை நாங்கள் அறியலானோம்.

அவர் ஒரு நாள் சப்தப் பிரம்மத்தைப் பற்றி (பிரம்மம் நாதவடிவாகப் பரிணமித்திருத்தல் சம்பந்தமாக) விரிவாக உபதேசித்தார். அன்று பகல், நான் பஞ்சவடியில் இருந்து அதைப் பற்றித்தியானம் செய்யலானேன். ஆஹா! அப்போது, அவர் உபதேசித்த வார்த்தைகளின் உண்மையானது சட்டெனப் பிரத்யக்ஷமாயிற்று. சுற்றிலும் மரங்களின் மீதிருந்த பக்ஷிகள் எல்லாம் திவ்விய வேத கீதம் பாடக்கேட்டேன்.

ஒரு சமயம் ஸ்ரீ ராமகிருஷ்ணர், "காளி கோயிலில் ஒரு நாள் நான் தியானம் செய்யும்போது ஓர் அற்புதக்காட்சி கண்டேன்; மாயையாகிய திரைகள் என் முன்னிருந்து ஒவ்வொன்றாக நீக்கப்பட்டு மறைந்தன. இன்னொரு நாள் ஜகன் மாதாவான அன்னை என் கண்முன் ஓர் அற்புத ஜோதியைத் தோற்றுவித்தாள்; அது கோடி சூரியப் பிரகாசத்தினும் பார்க்க அதிகம் வெளிச்சம் உடையதாய் இருந்தது; அந்த ஜோதிப் பிழம்பிலிருந்து சுத்த சைதன்ய வடிவமான ஓர் அழகிய அருவம் மெதுவாக உருவெடுக்கக் கண்டேன்; ஆனால் அடுத்த க்ஷணமே அது அந்த ஜோதியிற் கலந்து மறைந்து விட்டது," என்று கூறினார். அருவம் உருவமாகிப் பின் அவ்வுருவம் அருவத்திலேயே கரைந்து போயிற்று.

ஒரு நாள் க—காளி கோயிலுட் சென்று,தேவியை நோக்கி மிகக் கடிய மொழிகளால் கடிந்து பேசலானார்; கோபத்தால் அவர் நெஞ்சு சிவந்தது; கண்களினின்றும் கண்ணீர் பெருகி வடிந்தது. அதுவரை கோயிலறையினுள்ளே இருந்த ஸ்ரீ ராமகிருஷ்ணர், க—வின் கோபக் குரலைக் கேட்டு வெளியே வந்து, அவரைப் பார்த்துச் சொல்லலானார்:—"மெய்தான், மிக நெருங்

கிய நமது அன்பர்களிடம் நாம் கோபம் பாராட்டலாம்; அதில் குற்றமில்லை. ஆனால் உம்முடையது வீர பாவம் (தலைவன் தலைவியரது நேச பாவனை); மிகக் கடினமான மார்க்கம். என்னுடையது மாத்ருபாவம் (தாயினிடம் குழந்தைக்குள்ள நேச பாவனை.)''*

மனித உடலே கடவுளுக்குகந்த மேலான ஆலயம். இந்தக் காரணத்தினாலேயே தியானமும் பூஜையும் உடலுக்குள்ளே செய்ய வேண்டுமென்று சாஸ்திரங்கள் விதிக்கின்றன. இந்த உடலில் சகஸ்ராரம் (ஆயிரம் இதழ்த் தாமரை; ஞான வீடு) இருக்கின்றது. மனமானது ஒரு தரம் இந்த ஞான வீட்டை அடைந்து விட்டால், சாதாரணமாக அது அதற்குப் பின் கீழ் நிலைக்கு வருவதில்லை. இதனாலேயே, "ரதத்தில் வாமனனைக் கண்டவர்க்கு, மறு ஜன்மம் இல்லை" என்று சாஸ்திரங்களில் சொல்லப்பட்டிருக்கிறது. அதன் கருத்து: ரதமாகிய இவ்வுடலுக்குள்ளேயே கடவுள் (வாமனன்)உறைகின்றான்; இதிற் கடவுளைக் கண்டபின் மனிதன் பிறப்பு இறப்பாகிய சுழலிலிருந்து தப்பித்துக் கொள்கிறான் என்பதாம். பக்தியில் மிகுந்த இராமப்ரஸாதர், இந்த உடலிலேயே, எல்லார்க்கும் தாய் தந்தையாகி எங்கும் நிறைந்துள்ள ஈசனைக்கண்டு ஆநந்தித்தவராய், "ஆ! தாயே! தயாபரி! நீ இந்த உடலுக்குள்ளே உறைகின்றாய்! இங்குன்னைக் கண்டு நான் களிக்கின்றேன்" என்று உடனே பாடலானார்.

ஞானக்கண் என்று சொல்லப்படும் மூன்றாவதுகண் ஒன்று உண்டு. அது இவ்வுடலில் நெற்றியிலே, இரண்டு புருவங்களுக்

---

* மிக நெருங்கிய நேசமுடைவர்களிடம் காட்டும் கோபத்தால் கேடு உண்டாகாது. அதுபோல, இன்னும் காட்சி கொடுக்கவில்லையே என்று கடவுளிடம் கோபங்கொண்டால், அதில் கேடு ஒன்றும் வராததோடு பக்தியும் அன்பும் இன்னும் அதிகமாய் வளரும் என்று ஸ்ரீ ராமகிருஷ்ணர் இங்கே விளக்குகின்றார். ஆனாலும், வீர பாவனையில் வழிபடுபவர் நெறிதவறி விழக்கூடிய ஆபத்துக்குட்பட நேரிடலாமென்பதும் குழந்தையின் சுபாவம் கொண்டு அன்பு செய்வதில் அவ்வித ஆபத்து ஏதுமில்லை என்பதும் அவருடைய கருத்து.

கும் இடையில், இருப்பது. அக்கண் திறக்கும்போது, ஸ்ரீராம கிருஷ்ணர் கூறியவாறே, ஒருவன் தன்னைச்சுற்றி நின்ற பொருள் எல்லாம் ஆநந்தமயமாகஅமைந்திருக்கக் காணுகிறான். அண்டத்தில் உள்ளது பிண்டத்திலும் உண்டு என்பர். அதாவது எங்கும் நிறைந்துள்ள ஈசன் இங்கும் (இவ்வுடலிலும்) உள்ளான் என்பதாம்.

கடவுள் நமக்கு இவ்வளவு அருகாமையிலேயே இருக்கின்றார்; இருந்தும் நாம் காணுதிருப்பது என்ன ஆச்சரியம்! ஒருவன் ஒருதரம் அவரைக் கண்டுவிட்டால், அந்த திவ்யாநந்தத் தேனைச் சுவைத்து விட்டால், மற்ற எந்தப் பொருளின்மீதும் அவனுக்கு இன்பம் ஏற்படாது. நாம் வெளியே காணுகின்ற வணங்கும் கோயில்கள், விமானங்கள், தேர்கள், இவையெல்லாம் கடவுளின் மேலான கோயிலாம் இவ்வுடலின் வடிவங்களேயாகும்.

---

## 23

## மன வலிமை

சுவாமிகள்:— ஏழு வாயில் வைத்த அரண்மனை ஒன்றில் ராஜா ஒருவர் வீற்றிருக்கிறார். எளியவன் ஒருவன் ராஜதரிசனத்திற்காக மிகவும் மன்றாடுகிறான். மந்திரி கடைசியில் இணங்குகிறார். அந்த ஏழு வாயில்கள் வழியாக அவனை ராஜ சன்னிதானத்துக்கு மந்திரி அழைத்துப் போகிறான். இப்போது ஒவ்வொரு வாயிலிலும் ஒரு உத்தியோகஸ்தர் விலையுயர்ந்த உடுப்புகளைத் தரித்துக் கொண்டு உட்கார்ந்திருப்பதை அவன் காணுகிறான்; கண்ட ஒவ்வொரு தடவையும் இவர்தான் ராஜாவா? என்று அந்த எளியவன் கேட்கிறான். மந்திரி ஒவ்வொருதடவையும் 'அல்ல', 'அல்ல', என்று சொல்லிக் கொண்டே போகிறான். ஏழு வாயிலையும் அவர்கள் கடந்து உள்ளே சென்று ராஜாவைக் கண்டபோது, ராஜாவின் அழகையும் நேர்த்தியான வடிவத்தை

யும் பார்த்து அம்மனிதன் அவர்தான் ராஜாவென்பதை உடனே தெரிந்து கொண்டான்; மந்திரியை இப்போது அவன் கேட்க வில்லை; கேட்க வேண்டிய அவசியமும் இருக்கவில்லை. இதைப் போன்றதுதான் குருவினுடைய காரியம். மந்திரியைப் போல, குரு சிஷ்யனைப் பல படிகள் வழியாக அழைத்துச் சென்று கடைசியில் ஈசனுடைய சன்னிதானத்தில் விடுகின்றார்.

உன்னுடைய மனத்தைவிட மேலான குரு உனக்கு வேறில்லை. தியானத்தினால் மனமானது நிலை நிறுத்தப்பட்டால், அப்போது உள்ளிருந்து அது, நீ எந்த எந்த வழியைப் பின் பற்ற வேண்டும், அடுத்தடுத்து என்னென்ன செய்யவேண்டும் என்பதை உனக்குத் தெளிவாக உரைக்கும். உன்னுடைய தினசரி வாழ்க்கையிலும் இதைச் செய்; இதற்குப் பின் இன்னதைச் செய் என்று வழிகாட்டும். இப்படியே உன்னுடைய நோக்கத்தைச் சென்றடையும் வரையில், அது உன்னை நடத்திச் செல்லும்.

மனத்தை இரண்டுவித உபாயங்களால் நீ நிலை நிறுத்தலாம்; முதலாவது ஏதாவது ஒரு தனிமையான இடத்துக்குச் சென்று தியானத்தினாலும் தாரணையினாலும், சங்கற்ப விகற்பங்களாகிய எவ்வித மாறுபாடுகட்கும் மனம் உட்படாமற் காக்கப் பழகுதல்; அல்லது இரண்டாவது : இடைவிடாது நல்ல சிந்தனைகளில் மனத்தை ஈடுபடுத்திக் கடவுளிடத்தில் அன்பும் பக்தியும் உண்டாகப் பழகுதல். ஒரு கறவைப் பசுவுக்கு நல்ல தீனி வைத்தால் அது எப்படி அதிகப் பாலைத் தருகின்றதோ, அது போன்றதுதான் மனமும். மனத்துக்கு அதிக உணவைக் கொடு; அதுவும் பதிலாக உனக்கு நல்ல சேவை தருவதைக் காண்பாய். மனத்துக்கு உணவாவது யாது? தியானம், ஜபம், பூஜை, பிரார்த்தனை ஆகிய இவை போன்ற சாதனைகளெல்லாம் மனத்துக்குரிய உணவு.

ஒரு வகைச் சாதகர்கள் இருக்கின்றார்கள்; அவர்கள் தங்கள் மனத்தை அதன் இஷ்டப்படி போக விடுத்து, அதன் போக்கை மிகக் கவனித்துப் பார்த்து வருவார்கள். மனம் சுற்றிச் சுற்றி இங்குமங்கும் திரிந்து, எங்குமே நிலைத்த சாந்தியைப்பெறாமல், கடைசியாகத் திரும்பித் தானகவே கடவுளை நாடி அவரிடத்துச்

சரண் புகும். உண்மை யாதெனில், நீ மனத்தைக் காத்து வந்தால், மனமானது உன்னைக் காக்கும். ஆகையினால், மனத்தின் போக்கையும் அதன் செயல்களையும் எப்போதும் அதிக கவனத்துடன் பார்த்தும் அவற்றை இடைவிடாது ஆராய்ந்தும் வர வேண்டும் என்பது ஏற்படுகின்றது. இவ்விதம் மனத்தை ஆராய்தற்கு ஒரு தனிமையான இடத்தைப் போன்று பொருத்தமானது வேறொன்றில்லை. இதற்காகத்தான் புராதன ரிஷிகள் இமயமலைக் குகைகளையும், கங்கை நதிக் கரைகளையும் தங்களுடைய சாதனைகளுக்குத் தகுந்த இடங்களாகத் தேடியடைந்தார்கள்.

எல்லாவிதப் பற்றுக்களையும் மனத்தினின்று போக்கிவிட வேண்டும். ஆசை ஒன்று இல்லாவிட்டால், ஆயிரம் பொருள்கள் இருந்தாலும் அதனை அசைக்க முடியாது; பின் பொருள் ஒன்றும் இல்லையென்றாலும் ஆசை ஒன்றிருந்து விட்டால், எல்லா பந்தங்களும் இருந்ததாகவே யாகும். ஸ்படிகம் போல் மனத்தைப் பரிசுத்த மாக்கவேண்டும். இல்லாவிட்டால் கடவுளுடைய தோற்றம் அதில் பிரதி பலிக்காது. உண்மைத் துறவாவது, உலகப் பொருள்களிடத்தில் மனம் வைத்திருக்கும் ஆசைகள் அத்தனையும் அடியோடு ஒழித்து விடுதலாகும். இவ்வாசைகளை ஒருதரம் மனமானது முற்றிலும் நீக்கி விட்டால், பின் அதற்கு கேடு ஒன்றும் வராது. அதனாலேயே போராட வேண்டிய அவசியம் ஏற்படுகின்றது. இந்தப் போராட்டம் எவனிடத்தில் இல்லையோ, அந்த மனிதன் உயிரில்லாத மனிதனுக்கு ஒப்பாவான். எவன் ஒருவன் எவ்வகைத் தடை வரினும் எதிர்த்து நின்று போராடி வெற்றி பெறுவானோ, அவன் அழிவில்லாத ஆநந்த நிலையை அடைவான்.

தியானம் செய்வதற்கு மிகவும் அனுகூலமான காலம் சமயம் வேளை: அதாவது இரவு முடிந்து பகல் உதிக்கும் சமயமும், பகல் முடிந்து இரவு உதிக்கும் சமயமும். இந்த வேளைகளில் பிரகிருதி சாந்தமுற்று அமைதியாய் இருக்கும். இதனாலேயே அதிகாலையில் விழித்தெழுவது சமயசாதனை பழகுவாரது வாழ்க்கையில் முக்கிய அம்சமாக அமைகிறது. இந்த வேளையில் ஸுஷும்னா நாடி வேலை செய்கிறது. அப்போது

இரண்டு நாசிகளின் வழியாயும் காற்று செல்கிறது. சாதாரண மாய், காற்று ஒரே நாசியின் வழியாகச் செல்லும் — இடை அல்லது பிங்கலைநாடியின் வழியாக—அப்போது மனம் அமைதி யற்று ஓடிக்கொண்டிருக்கும். சில யோகிகள் எப்போது ஸுஷும்ணு நாடி வேலை செய்ய ஆரம்பிக்கிறதென்று பார்த்துக் கொண்டே இருப்பார்கள். அவ்வேளை வந்தவுடனே அவர்கள், தாங்கள் எந்த வேலையாய் இருந்தபோதிலும் அதையெல்லாம் விட்டுவிட்டு, தியானத்தில் உட்காருவார்கள்.

மனிதன் சாந்தியை விரும்புகிறான். ஆனால், பகவானோடு நெருங்கிய உறவு பூண்டு, அவரைத் தன்னுடைய சொந்தமாக்கிக் கொண்டாலொழிய, அவன் சாந்தியை எப்படி அடைய முடியும்? எப்படி வெளியுலகில், தன்னுடைய தாய் தந்தை பெண்டு பிள்ளைகள் ஆகிய பந்து ஜனங்களுக்கு உணவளித்து உடை கொடுத்து இன்பமொழி பேசி அன்பாய் நடந்துகொள்வானோ, அதுபோல மனவுலகில் கடவுளோடு உறவு பாராட்டி உணவ ளித்து உடைகொடுத்து இன்பமொழியாலும் அன்பான நடை யாலும் பழகினாலொழிய மனிதனுக்குச் சாந்தி எப்படி உண் டாகும்? இப்படிப்பட்ட மனப்பான்மையை அடைவதற்குச் சுலபமான வழியாவது கடவுளை இடைவிடாது சிந்தித்தலே யாகும்; ஆகையினால், இதுவே எல்லாச் சாதனைகளையும் விட மிக எளிதானது.

கடவுளுடைய காரியங்கள் வியக்கத்தக்கவை! அவர் அகண்ட மானவர், அளவுக்கு உட்படாதவர், அரூபி; ஆயினும் உருவமும் உடையார்; அளவுக்கு உட்படுகிறார்! மனித வடிவம் தாங்கி உலகில் அவதரிக்கவும் செய்கிறார். யாரே அவரை அறிவார்?

காக்கை பூஷண்டி (காகா ஸுரன்) முதலில் ஸ்ரீ ராமசந்தி ரரைச் சாமானிய மனிதராகவே கருதிற்று; ஆனால் அறிதற்கிய லாத ஸ்ரீ ராமருடைய சக்தியால் துரத்தப்பட்டபோது, அது பூலோகம், சுவர்க்க லோகம், பாதாள லோகம் ஆகிய மூன்று உலகங்களிலும் தப்பிப் பிழைக்க இடம் கிடைக்காது சுற்றிக் கடைசியாக அவருடைய கிருபையினால், அவரைப் பகவான் என உணர்ந்து பிரார்த்திக்கலாயிற்று. கடவுள் மனிதரை நடத்திச்

செல்லும் மார்க்கங்கள் பல; அவை பலவேறு வகையானவை. யாரைஎந்த வழியாக அவர் நடத்திச்செல்வார் என்பதை மனிதன்அறியமுடியாது. சில வேளையில் அவர் முள் நிறைந்த கஷ்டமான பாதை வழியாகவும்,கரடு முரடான கல் செறிந்த பர்வதங்களின் நடுவாகவும், இன்னும் சில வேளைகளில் மிக மென்மையான மனோகரப் பூம்பாதைகளின் மூலமாகவும் மனிதனை நடத்திச் செல்கின்றார். ஆகையினாலே, அவருடைய திருவடியில் சரணாகதி அடைவது ஒன்றே மனிதனுக்கு உற்ற வழி; அதை விட்டால் வேறுகதி அவனுக்கு இல்லை.

உடல், இந்திரியம், மனம், பிராணன் எல்லாம் மாயையினால் கட்டுப்பட்டு இழிநிலையடைந்து திடங்கெட்டுப் போகின்றன. பஞ்சபூத வலையில் அகப்பட்டுக்கொண்டு பிரம்மமே அழுகின்றது என்று ஸ்ரீ ராமகிருஷ்ணர் சொல்வது வழக்கம். அப்படிப்பட்டது மாயை. கண்ணாம்பூச்சி விளையாட்டில், ஓட்டம் பிடித்து முதலில் தாய்ச்சியைத் தொட்டு விட்டால், பிறகு கவலையில்லை. அதுபோல, இந்த புவன மோகன மாயையின் கட்டினின்றும் தப்பிய ஒருவனை, ஆயிரம் உலகம் ஆனாலும் அணுவேனும் அசைக்க முடியாது. அப்படிப்பட்ட மனிதன் மாயையைக் கடந்தவன்; அப்படிப்பட்ட மனிதனே மாயையின் மர்மங்களை அறிந்தவனாவான்.

மாயையிற் கட்டுப்பட்ட மனிதன், இவ்வுலகில் பிறப்பதும் பிறந்த பின் வாழ்வதும் எவ்வளவு கஷ்டமும் கொடிய துன்பமும் நிறைந்ததென்பதை அறிய முடிவதில்லை. நாளுக்கு நாள் உடல் நசித்து வருகின்றது; ஆனாலும், மனித ஜன்மம் எடுத்துங் கூட இந்த அரிய ஜன்மத்தின் உத்தேசம் இன்னதென்பதை, முற்றிலும் மனிதன் மறந்தவனாய் இருக்கிறான். இந்த உலக வாழ்க்கையில் கஷ்டங்களும் துன்பங்களும் நிறைந்திருந்த போதிலும்,மனித ஜன்மமோ மிகமேலான நன்மையையுடையது. ஏனென்றால், இந்த மனித ஜன்மத்தில்தான் ஒருவன் கடவுளை அறிதல் இயலும். ஆகையால், அழிந்துபோகும் இந்த உடலின் இன்ப சுகங்களைப்பற்றிய கவனத்தை ஒழித்து, ஒருவன் கடவுளையடைதற்குரியனவும், அதன்பலனாக, ஜனனமரணமாகிய சக்கரத்தினின்றும் விடுபடற்குத் தக்கனவுமான புகழ்பெற்ற கருமங்

களையே செய்தல் வேண்டும். உண்மையில், நிலைத்த சாந்தியை அடையவேண்டுமானால், ஒருவன் சாந்தியின்மையை முதலில் அடைதல்வேண்டும்; அதாவது, அத்தகைய சாந்தியை அடைய் ஓயாது உழைக்கவேண்டும்—என்பதாம். இதுவே ஞானிகளின் உபதேசம்.

---

## 24

# கடவுள் வழிபாடு

[சிஷ்யர் ஒருவருக்கு அறிவுறுத்தியது]

I

சுவாமிகள்:—தீர்த்த யாத்திரை பல வழிகளில் நன்மையைத் தருவது. அவற்றில் முக்கியமாகப் பல மகான்களைத் தரிசிக்கவும் அவர்களுக்குத் தொண்டு செய்யவும் நமக்குக் கைகூடுகின்றது. இன்னொரு நன்மை யாதெனில், உலக வியவகாரங்கள் கொஞ்சங் கொஞ்சமாய் நம் மனத்திலிருந்து மறைந்து, கடவுள் நினைவு இடைவிடாது தோன்றத் தலைப்படுகின்றது என்பதாம். சமய முன்னேற்றத்தில் இவை நமக்குப் பெரும் சாதகம் விளைப்பன என்பதிற் சந்தேகம் இல்லை. இதில் ஆத்ம ஞானமும் அதிகமாகும்.

காசி ஓர் புண்ணிய தீர்த்தம். அநேக சாதுக்கள் வசிக்கிறார்கள். ஆகவே, காசி யாத்திரை செய்தால், நமக்குச் சாது சங்கம் நேரிட சந்தர்ப்பம் உண்டாகிறது. காசியில் ஆத்மிய அலை ஒன்று எப்போதும் ஓடிக்கொண்டிருக்கிறது. இல்லறத்தில் இருப்போர் அங்கே வீற்றிருக்கும் விசுவேசுவரப் பெருமானை இஷ்டம்போல் வழிபடுதற்கும் அநேக சௌகரியங்கள் இருக்கின்றன. அங்கே சில நாள் நீ வசிக்கக் கூடுமானால், அது உனக்குப்பெரும் நன்மையைத் தரும்.

பிருந்தாவனம் மற்றொரு புண்ணிய தீர்த்தம். அங்கே இரவும் பகலும் இடைவிடாது ஈசுவர தியானத்தில் மூழ்கியிருக்கும் சாதுக்கள் பலர் இருக்கின்றனர். அந்த ஸ்தலங்களையெல்லாம் நீ போய்ப் பார்க்கவேண்டும். காரியம் சம்பந்தப்பட்டவரையில், கடவுளையடையத் துணை செய்யக் கூடியவை சில உண்

டென்பது மெய்யே. ஆனால், அவை சுயநலப் பற்றில்லாது செய்யும் நிஷ்காம கருமத்தைச் சேர்ந்தவை. சுய நலத்தின் பொருட்டாகச் செய்யும் கருமம் ஒருநாளும் உனக்குக் கடவுள் நெறியிற் செல்லத் துணை செய்யாது. உன்னதென்று நீ இப்போது சொல்லும் உன் மனைவி மக்கள் ஆகியவெல்லாம் கடவுளின் உடைமையே என்று உணர். இந்த நம்பிக்கை உனக்கு உறுதியாக இருக்குமானால், எல்லாம் ஒழுங்குற நடக்கும். இதற்கு மாறான நம்பிக்கை கொண்டால், யாவும் மாறு பாடாகவே நடக்கும்.

## II

கடவுளுடைய நாமத்தை ஜபித்தல் மிக நல்லது. அப்படி ஜபிப்பதால், உள்ளம் பரிசுத்தமடையும். கடவுளுடைய நாமத்தை ஜபிக்கும்போது, அவருடைய நினைவையும் நீ மனத்தில் கொண்டிருக்கவேண்டும். அப்படி ஜபமும் தியானமும் ஒன்றாகச் செய்துவந்தால், அது மிக நன்மையைத் தரும். கடவுளைத் தியானம் செய்யாமல் வெறும் ஜபம்மட்டும் செய்தால் அதிக பலன் உண்டாகாது. இது மிகவும் சுலபமானது என்று நான் சொல்லவில்லை; இதைச் செவ்வையாகச் செய்ய ஒருவர் குருவிடமிருந்து உபதேசம் பெறவேண்டும்.

குரு, உனது இஷ்ட தேவதை இன்னதுதான் என்பதையும், இன்னும் உன்னுடைய ஆத்ம முன்னேற்றத்துக்குத் தேவையான பிறவற்றையும் காட்டிக்கொடுப்பார். மனித இயல்பில் தனித்தனி ஒவ்வொருவரிடத்தும் உள்ள பேதத்துக்கு தகுந்தபடி பல இஷ்ட தெய்வங்கள் இருக்கின்றன. ஒன்றே எல்லாருக்கும் பொருத்தமுடையதாகாது. ஆத்ம ஞான உதயம் உன்னிடம் உண்டாகும் வரையில், குருவின் வாக்கியத்தைப் பின்பற்றி நீ நடத்தல் வேண்டும். எவ்வளவு அதிகமாக அவ்வழியில் உழைப்பாயோ அவ்வளவு அதிகமாகத் தூய்மையை நீ அடைவாய்.

குருவின் உதவியின்றிச் செய்யும் சாதனை எப்போதும் மிகக் கடினமானது. பெருமிதமான மனோசக்தி வாய்ந்த, மிக அருமையான ஒரு சிலர், இப்படிப்பட்ட வெளி யுதவி இல்லாது, சித்தி பெறுதல் கூடும். ஆயினும் ஒரு குருவின் உதவி

யைப் பெற்று அவர் காட்டும் வழியைப் பின்பற்றி நடப்பது மேன்மை. அப்போது பிழைபட இடம் ஏற்படாது. இருந்த போதிலும் குரு ஒருவர் கிடைக்க வில்லையே என்று நீ சோம்பலாக வீண்காலம் கழித்தல் கூடாது. உடனே தொடங்கு; தக்க காலத்தில் குரு வருவார்.

குரு சிஷ்யனைத் தேர்ந்தெடுக்க வேண்டும்; சிஷ்யனும் குருவைத் தேர்ந்துகொள்ள வேண்டும். அவ்வாறின்றி இருவரில் ஒருவர் மாத்திரம் தேர்ந்தெடுப்பாரானால், அது அவ்வளவு நன்மை பயப்ப தாகாது. சித்தியடைந்த குரு ஒருவரே சிஷ்யருக்கு உண்மையில் உதவியளிக்க வல்லவர் ஆவார். அப்படிப்பட்ட குரு மாத்திரமே சிஷ்யர்கள் இயல்பின் வேறுபாடுகளைக் கண்டறிந்து அவற்றிற்குத் தக்கபடி உபதேசம் கொடுக்கச் சக்தி உடையவராவார். சாதாரண குரு அவ்விதம் உபதேசம் கொடுக்க முடியாதவராவார். தகுந்த காலம் வரும்போது, உன்னுடைய குரு ஆவார் யாரோ அவரைக் கடவுள் உன்னிடம் அனுப்புவார். அப்படிப்பட்ட குரு உன்னிடம் வரும் வரையில், கடவுளை வழிபட்டிருத்தல் உனது கடமை. இல்லையேல், உன் வாழ்நாட்கள் வீணே கழியும். ஆகையால், முறையாகத் தியானம், ஜபம், பஜனை ஆகியவற்றை ஒவ்வொரு நாளும் செய்து வா

## III

தியானம் செய்யச்செய்ய, உனக்கு மேலும் மேலும் உண்மை விளக்கம் அதிக முண்டாவதை நீ காண்பாய். சாஸ்திரங்களைச் சும்மா படிப்பதனாலும், அவற்றைப்பற்றி விவாதிப்பதனாலும் பயன் இல்லை. தியானத்தினால் மனம் பரிசுத்தம் அடைகின்றது; மனது பரிசுத்த மடையும்போது, கடவுள் காட்சி இயல்பாகத்தானே ஏற்படுகின்றது. சாதாரணமாய், உலக வியவகாரங்களிலேயே நாம் மனத்தைச் செலுத்திக் கொண்டிருக்கிறோம். இதிலிருந்து, நன்மையெனச் சொல்லக் கூடியதான பலன் எதுவும் நமக்கு வருவதில்லை. இவ்வாறின்றி, கடவுளைப் பற்றிய தூய நினைவிலே உன் மனத்தை நிறுத்துவாயானால், உண்மையான ஆநந்தத்தின் சுவையை நீ பெறுவாய்.

உலக விஷயங்களிலேயே உன் சக்தி யெல்லாம் செலவழிகின்றது. கடவுள் வழிபாட்டிற் சிறிது ஈடுபட்டுழை. உன்

வாழ்நாளை இவ்வண்ணம் வீணாக்குதல் கூடாது. கடவுளை வழிபட உடனே தொடங்கு. நம்முடைய ஆயுட்காலமோ மிக அற்பமானது. இவ்வற்ப ஆயுளில் நமக்கு முக்கிய கடமையாவது கடவுள் வழிபாடே. நாம் காலத்தை வீணாகக் கழித்தால், மீண்டும் அது நமக்கு ஒரு போதும் வரப்போவதில்லை. எத்தொழிலைச் செய்தாலும் இறைவனையே எப்போதும் நீ கருத்தில் வை. ஒரு நாட்பொழுதில் ஏதோ ஒரு சிறிது நேரம், ஒரு மூலையில் உட்கார்ந்து சும்மா கண்மூடி யிருந்தால் போதாது. ஏனென்றால், அப்போது உன் மனக்கண் எதிரே உலகம் முழுவதும் வந்து தோன்றுவதைக் காண்பாய்.

துவைதத்திலிருந்து—அதாவது தானும் கடவுளும் தனித் தனியாய் இருப்பதாகப் பாவித்தல் மூலம்—சாதனையைத் தொடங்குதல் நலம். இவ்வழியிற் சிறிதே முற்பட்டுச் செல்வாயானால், தானே இயல்பாக அத்வைதத்தில் (இரண்டற்ற நிலையில்) அது உன்னைக் கொண்டுபோய் விடும். கடவுளைத் தனக்குப் புறம்பாகக் காணும் வழி ஒரு முறையான வழியாகும். இவ்வழியிற் பயின்றால், பின்னால், உனக்குள்ளேயே கடவுளைக்காண நீ வல்லவனாவாய். இது எல்லாவற்றிலும் மேலான தியான முறை. அங்கு இங்கு என்று குறிப்பிட இயலாதபடி எங்கும் நிறைந்திருப்பவரன்றோ கடவுள்? பேரானந்தத்தின் சுவையைச் சிறிதே பெறும் வரையில் நீ தியானத்தில் பயின்று வரவேண்டும். அதுவரையில் துவைதம் அவசியம். சமாதி நிலையை அடையும்போது கடவுளொன்றையே காண்பாய். ஆத்ம ஞானம் இத்தன்மையது என்பதை எவரும் எடுத்துரைக்க முடியாது. கடவுள் நினைவை உன்னுள்ளே, நீ கொண்டிருக்கும் வரையில், பாவம் உன்னை அணுகாது. எனவே, 'பாவியேன், என் செய்வேன்' என்ற ஏக்கமும் அச்சமும் தவிர்த்து, கடவுளை வழிபடும் காரியத்தில் எப்போதும் ஈடுபட்டிரு.

# 25

## சம்பாஷணைத் துணுக்குகள்

### I

ஒரு பக்தர் :—ஸ்வாமிஜி, அன்றைக்குத் தாங்கள் மனத்தை இரண்டு வழிகளில் நிலைத்து நிற்கச் செய்யலாம், என்று எனக்கு உபதேசித்தீர்கள். அவற்றில், இப்போது நான் எந்த வழியைப் பின்பற்றுவது?

சுவாமிகள் :—உன்னுடைய இஷ்ட தெய்வத்தின் திருவடிகளில் உன் மனத்தை உறுதியாகப் பற்றி நிற்கச் செய்.

பக்தர் :—என் இஷ்ட தெய்வத்தின் வடிவத்தை யான் எந்த இடத்தில் தியானிப்பது?

சுவாமிகள் :—இருதயத்தில்.

பக்தர் :—இருதயத்தில்! அதெப்படி ஐயனே?

சுவாமிகள் :—நீ தியானம் செய்யும்போது, உன் இஷ்ட தெய்வம், உன் முகமாய்ப் பார்த்துக் கொண்டிருப்பதாகக் கருத வேண்டும்.

பக்தர் :—ஆனால், இரத்தமும் மாமிசமும் நிறைந்த தாயிற்றே இருதயம்; அந்த இடத்தில் தன்னுடைய இஷ்ட தெய்வத்தை ஒருவன் எப்படிச் சிந்திக்கக் கூடும்? இரத்தம், மாமிசம், எலும்பு ஆகிய இவற்றிலெல்லாம் கடவுள் உறைகின்றாரா? இப்படி நான் நினைப்பது சரியாகுமா?

சுவாமிகள் :—அல்ல அல்ல; எலும்பையும் மாமிசத்தையும் எண்ணாதே. அந்த எண்ணத்தை அடியோடு ஒழி. உனது இஷ்ட தெய்வமாகிய கடவுள் உன் உள்ளத்தின் உள்ளே உறைகின்றார்; இந்த எண்ணத்தை ஆழ்ந்து சிந்தித்துத் தியானம் செய். தொடக்கத்திற் சில வேளை உடலைப்பற்றிய நினைவு உன்

மனத்தில் எழும்; ஆயினும் பின்னல் எழாது; அதை முற்றி லும் நீ மறந்து விடுவாய்; இஷ்ட தெய்வத்தின் வடிவம் ஒன்றே அப்போது உன்மனத்தில் மேலோங்கி நிற்கும்.

## II

பக்தர்:—ஜபம் செய்யும் போது, ஜபிக்கப்படும் மந்திரத்தின் அர்த்தம் எதுவோ அதையும் கூடவே தியானிக்க வேண்டும் என்று நான் சாஸ்திரங்களில் படித்திருக்கிறேன்; பலரிடமிருந்து கேள்விப்பட்டும் இருக்கிறேன். இப்போது, அம்மந்திரத்தின் அர்த்தத்தை எம்மாதிரி எண்ணிக் கொள்வது; ஒவ்வோர் எழுத்தாகவா, அல்லது முழு மந்திரமும் ஒன்றாகவா?

சுவாமிகள்:—அப்படியன்று. ஒரு மனிதனைப் பெயர் சொல்லி அழைத்தால் எப்படியோ, அது போன்றதேயாகும் அது. உன் பெயரைச் சொல்லி உன்னை நான் எப்போது அழைக்கிறேனோ அப்போதே உன்னுடைய உருவமும் என் மனத்தில் தோற்றமாகின்றது. இதைப் போன்றது தான் மந்திரமும் அதிலிருந்து உண்டாகும் வடிவமும்.

பக்தர்:—நான் ஜெபம் செய்ய வேண்டியது எப்படி? மனதுக்குள்ளேயா அல்லது மெள்ள வாய்விட்டுச் சொல்வதா?

சுவாமிகள்:—நீ ஒரு தனியிடத்தில் ஏகாந்தமாய் இருக்கும்போது, உனக்கு மட்டும் கேட்கும்படியாக வாய்விட்டுச் சொல்; வேறு யாராவது அருகாமையில் இருந்தால், அப்போது மௌனமாக மனதுக்குள்ளேயே ஜபிக்க வேண்டும். ஆனால் இவ்விரண்டு வேளையிலும் உதடு அசைய வேண்டும்.

## III

பக்தர்:—நான் தியானம் செய்யும் போது, சென்ற சில நாட்களாக, என் மனக்கண் முன் மந்திரமானது ஜோதியும் பிரகாசமும் பொருந்திய எழுத்துக்களாய்த் தோன்றி நிற்பதைத் தெளிவாகக் காணுகிறேன். அவ்வப்போது என் இஷ்ட தெய்வத்தை நான் காண்பதில்லை; மந்திரம் மட்டும் காணப்படுகின்றது; வேறொன்றும் காணப்படுவதில்லை. நான் இதற்கு என்ன செய்வது? மந்திரத்தை மனத்தினின்றும் நீக்கிவிட்டு

இஷ்ட தெய்வத்தை மட்டும் நினைக்க முயற்சி செய்யலாமா? அன்றேல் வேறு உபாயம் யாது?

சுவாமிகள் :—வேண்டாம். அது மிக நல்லது—ஒரு சுப லக்ஷணமே ஆகும். ஆம், அது உண்மையில் நல்ல லக்ஷணமே. ஆனால் இரண்டையும் சிந்திக்க வேண்டும். மந்திரமாவது நாமமே வடிவமாய்த் தோன்றிய பிரம்மமேயன்றி வேறொன்றில்லை; ஆகையால் மனத்தினின்று நீ அதனை நீக்கலாகாது. மந்திரத்தையும், அதனோடு கூடவே, அம்மந்திரத்தின் பொருளாய் நின்ற தெய்வ வடிவத்தையும் நினை. இரண்டையும் நினைந்திரு. இரண்டில் எந்த ஒன்றையும் நீக்காதிருத்தலே நலம்.

பக்தர் :—நல்லது ஐயனே, இஷ்ட தெய்வத்தின் திரு உருவில் எந்த பாகத்தை நான் முதலில் நினைப்பது—முகத்தையா? அல்லது வேறு எந்த பாகத்தை?

சுவாமிகள் :—ஏன்? அவருடைய பாத கமலங்களை; முன்னதாக அவற்றிற்கு உன் வணக்கங்களைச் செலுத்தி, நினைக்கத் தொடங்கு; அதற்குப் பிறகு முகம், கைகள், கால்கள்—எது உன்முன் தோன்றுகிறதோ அதை நினைக்கலாம்.

பக்தர் :—மந்திரம் ஏன் அவ்வளவு நீண்டதாய் இருக்கிறது?

சுவாமிகள் :—ஆம், சில சமயம் மந்திரம் நீளமாகத்தான் ஏற்படுகிறது. நீளமோ குட்டையோ, எப்படியானாலும், அதற்கொரு விசேஷ சக்தி உண்டு. இடைவிடாது ஜபம் செய்து வருவாயானால், அதன் உண்மையை வெகு சீக்கிரத்தில் உணருவாய்.

பக்தர் :—ஜபமும் தியானமும் செய்கின்ற காலத்தில், ஜபமாலையை ஆள் காட்டி விரலால் தீண்டினால் பாவம் உண்டாகும் என்று அநேகர் கருதுகிறார்கள். ஐயனே, அது ஏன் என்பதைத் தயவுசெய்து எனக்கு விளக்கிச் சொல்லுங்கள்.

சுவாமிகள் :—ஆள் காட்டி விரலால் நீ ஜபம் செய்கிறாயா? சரி, நீ உன் இஷ்டப்படியே செய். ஆள்காட்டி விரலை உபயோகப்படுத்தி ஜபம் செய்வது உனக்குச் சௌகரியமாய் இருந்

தால், எவ்விதமான தயக்கமும் இல்லாமல் நீ அவ்வாறே செய்யலாம். அதனால் பாவமோ தாபமோ ஒன்றும் உன்னை அணுகாது.

# IV

பக்தர் :—எவ்வழியால் நான் மனத்தை நிலை நிறுத்தலாம் என்பதைத் தெளிவாகத் தயவு செய்து எனக்குப் புகட்டுங்கள், ஐயனே.

சுவாமிகள் :—தினந்தோறும் முறையாகப் பழகுவதால் நீ மனத்தை உறுதியாக நிலைக்கச் செய்யலாம். இப்பழக்கத்திற்கு அதிகாலை வேளையே அதிக மேன்மையான நேரம். தியானம் செய்யுமுன், சாஸ்திர நூல் ஏதாவது ஒன்றைச் சிறிது நேரம் படிப்பது, மனம் எளிதாய் ஒரு நிலைப்படுவதற்கு ஏற்ற உதவியாகும்; தியானத்தின் பிறகு அரைமணி நேரம் மௌனமாக ஒன்றும் செய்யாது அமைதியுடன் இருத்தல் அவசியம்; ஏனென்றால், தியானம் செய்து கொண்டிருக்கிற காலத்தில் அதற்குரிய பலன் ஏற்படாமல், சற்றுப் பொறுத்து ஏற்படக்கூடும். ஆதலால், தியானம் செய்த உடனேயே சற்றும் தாமதிக்காது சட்டென்று மனத்தை உலக வியவகாரங்களில் ஈடுபடும்படித் திருப்பிவிட்டால், பொதுவாய் அது உனக்கு அதிகக் கெடுதலை விளைவிப்பதோடல்லாமல், முக்கியமாக ஆத்ம தரிசனத்துக்குரிய ஞான முன்னேற்றத்தையுங் கெடுத்துவிடும்—என்று ஞான நூல்களில் சொல்லப்பட்டிருக்கிறது.

ஜபம் தியானம் ஆகிய இவை மனதுக்கு உற்ற உணவு; இவற்றைப் பழகுதலே மனிதனுடைய தேவைகளுள் முதன்மையும் முக்கியமும் ஆகும். தொடக்கத்தில் தியானமும் ஜபமும் சரியானபடி செய்ய உன்னால் இயலவில்லை என்றால், அப்பொழுதும் பழக்கத்தை அடியோடு நீ விட்டுவிடக் கூடாது. வெறும் பழக்கத்தினாலேயே நீ மிகுந்த பலனை அடையக்கூடும். நாள்தோறும் இரண்டுமணி நேரம் தியானம், ஜபம் செய்தலும், அதன் பிறகு அரைமணி நேரம் அமைதியாக இருத்தலும் ஒவ்வொரு மனிதனும் கட்டாயம் செய்யவேண்டியவை. சாதகனுக்குத் தனிமையான ஓரிடத்தை நாடிச் சென்று சாந்தமாகத் தனித்திருத்தலும் மிக்க உதவியைத் தருவதாகும். தனிமை

யான ஓர் ஆற்றங்கரையிலோ, அல்லது ஒரு தோட்டத்தில் யாருமில்லாத் தனியிடமான ஒரு மூலையிலோ, அல்லது உடன் எவருமின்றித் திறந்த வெளியையுடைய பரந்த வயற்புறத்தின் ஒரு பக்கத்திலோ, இல்லாவிடில் உன் அறையை மூடிக்கொண்டு அதற்குள்ளேயோ நீ மௌனமாகச் சும்மா உட்கார்ந்திருந்தா லுங்கூட, அதனால் பெரும் நன்மை உனக்கு உண்டாகும். ஆத்மிய சாதனைகளைச் செய்ய நீ ஆரம்பிப்பதற்கு முன்னால், ஒரு கால நிர்ணயத்தை நீ ஏற்படுத்திக் கொள்ளவேண்டும். அந்தக் கால நிர்ணயத்தைப் பின்பற்றிச் செல்வதற்கு இடையூறாய் நிற்கக் கூடிய எந்த ஒரு கருமத்தையும் நீ மேற்கொள்ளுதல் கூடாது.

## V

பக்தர் :—தியானம் செய்கிறபோது, என்னுடைய இஷ்ட தெய்வத்தின் வடிவம் இன்றி, அதற்குப் பதிலாய் வேறு ஏதேனும் தேவ தேவியரின் மூர்த்தி ஒன்று என்னுடைய மனத்தில் வந்து தோன்றுமாயின், அப்போது நான் என்ன செய்வது?

சுவாமிகள் :—அது ஒரு நல்ல அறிகுறியென்றே அறி. உன்னுடைய இஷ்ட தெய்வமே பலவேறு வடிவங்களில் வந்து தோன்றக்கூடும். அவர் ஒன்று ஆனவர்; அன்றிப் பலவும் ஆவார். உன்னுடைய இஷ்ட தெய்வத்தின் தோற்றத்தைக் கண்டு களி; அதற்குப் பதிலாக வரும் தோற்றத்தையும் நீ இன்புடன் வரவேற்பாய். முடிவில் வேறுபட்ட இந்த வடிவங்கள் எல்லாம் ஒன்றன்பின் ஒன்றாக உனதிஷ்ட தெய்வத்தின் திவ்விய வடிவிலேயே லயமாய் விடுவதை நீ காண்பாய்.

முக்கியமாக அமாவாசை, பௌர்ணிமை, அஷ்டமி ஆகிய திதிகளிலும், அன்னை காளி (சியாமா), ஜகதாத்ரி, துர்க்கை முதலான தேவி*யின் பூஜா நாட்களிலும் தியானமும் ஜபமும் அதிகமாகச் செய்யவேண்டும். மேலும் பெண் மக்கள் எல்லாரையும் பெற்ற தாயைப்போல நீ பாவிக்கவேண்டும். யாரிடத்திலும் தீர்மானமாக 'இது செய்வேன், அது செய்வேன்', என்று வாக்களிக்காதே; "பிரயத்தனம் செய்வேன்," என்று மட்டும்

* வங்க தேசத்தில் தேவி பூஜையே மிகவும் பிரபலம்.

சொல். ஏனென்றால், உன் வாக்கை நீ நிறைவேற்ற முடியாமற் போனாலும் போகலாம். அப்போது வாக்கு பொய்த்துப் போய்விடும் அல்லவா?

பக்தர் :—ஸ்வாமிஜி "உன் தந்தைக்குத் தொண்டு செய்"— என்ற இதே விஷயத்தைத் தாங்கள் எப்போதும் என்னிடம் வற்புறுத்துகிறீர்கள். எல்லாவற்றையும் விட்டொழித்து, ஒரு துறவியாகத் தொண்டு செய்ய இயலாதவனாய் இருக்கிறேனே, இது என்னுடைய துர்ப்பாக்கியமே அல்லவா?

சுவாமிகள் :—துறவி! நீ இப்போதுதுறவியாய்த் தானே இருக்கிறாய்? காவித்துணி மாத்திரம் உடுக்கவில்லை; அதனால் என்ன? குழந்தாய், காவித்துணி உடுத்துக் கொள்வதால் மட்டும் நீ துறவி ஆய்விடமாட்டாய்.

பக்தர் :—இந்தப் புனிதமான சங்கத்தில் (ஸ்ரீ ராமகிருஷ்ண மடத்தில்) சேர்ந்து ஒரு துறவியாகித் தங்களுக்குத் தொண்டு செய்வது ஒரு பெரிய பாக்கியம் அல்லவா?

சுவாமிகள் :—ஆம், அது மெய்தான். ஆயினும், குழந்தாய், நோயுற்றிருக்கும் உன் தந்தைக்குத் தொண்டு செய்தால் நீ அதே பயனை, மிக மேலான நன்மையை, அடைவாய். விவாகம் முதலான மற்றைய வழிகளால் நீ அதிக பந்தத்துக்குள்ளாகாமல் மட்டும் இருப்பாயானால் இவ்வுலகில் நீ அஞ்சக்கூடியது ஒன்றுமில்லை. என் குழந்தாய், திரும்பவும் உனக்கு நான் சொல்வது இதுவே: உன் தந்தைக்குச் சேவை செய்வதிலேயே நீ முற்றிலும் ஈடுபடு; அத்துடன் தியானமும் ஜபமும் செய்துவா; ஞான நூல்களையும் படி.

---

## 26

# கருமத்திலும் கடவுள் சிந்தனை

சிஷ்யர் :—ஸ்வாமிஜி, கஷ்ட *நிவாரண வேலையில் ஈடுபட்டிருக்கும்போது, நாள் முழுதும் மிகக் கடுமையாக உழைக்க வேண்டி யிருக்கிறது. அப்போது எனக்கு ஆத்ம சாதனையைச் செய்யச் சந்தர்ப்பமே நேருவதில்லை. நேரமே கிடைப்பதில்லை. அதனால், அத்தகைய தொண்டில் ஈடுபட எனக்கு விருப்பம் உண்டாகவில்லை.

சுவாமிகள் :—என்ன ? எப்போதுமே அப்படி அதிகக் கடுமையாக வேலை செய்ய வேண்டி யிருக்கிறதா ?

சிஷ்யர் :—இல்லை, முதலில் சில நாளைக்குத்தான்.

சுவாமிகள் :—அப்படியானால் நேரமே கிடைப்பதில்லையென்று ஏன் முறையிடுகின்றாய் ? ‘ஓயாத வேலை ; ஆத்மசாதனை செய்ய நேரமே இல்லை,’ யென்று சாதாரண உலகப் பற்றுள்ளவர்கள்தான் இப்படி முணுமுணுப்பதை அடிக்கடி கேட்டிருக்கிறோம். குழந்தாய், அப்படிப்பட்ட ஒப்பமுடியாத பேச்சு ஒரு சாதுவாகிய உனக்குத் தகாது. சாதுக்களிடம் பிரம்மசரியத்தால் ஏற்பட்ட ஓர் சக்தி இருக்கின்றது. ஆத்ம சாதனை, லௌகிக கருமம் ஆகிய இரண்டையும் நீ ஒருங்கே செய்து வர வேண்டும். என்னுடைய கருத்து யாதெனில், ஆத்ம சாதனைகளைச் செய்ய அந்தரங்கமான இச்சை உன்னிடத்து உண்மையில் இல்லை ; வீண் கருமங்களிலும், வெறும் பேச்சுப் பேசிகளிப்புறுவதிலுமே காலத்தைக் கழிக்க நீ விரும்புகின்றாய் ; சாதனை, பஜனை செய்ய நேரமே கிடைப்பதில்லை யென்று முறையிடுவது வெறும் வெளிப் பேச்சு. கஷ்ட நிவாரண வேலையில் முதலிற் சில நாட்களுக்குக் கடுமையான உழைப்பு இருக்கக்கூடி

---

* பஞ்சம், கொள்ளை நோய், வெள்ளம், தீ, பூகம்பம் முதலியவைகளால் மக்களுக்குத் துன்பம் நேரிடும்போது, கஷ்ட நிவாரண வேலை செய்வது ஸ்ரீ ராமகிருஷ்ண மடத்துக் கோட்பாடுகளில் ஒன்று.

யதே; இதை நான் ஒத்துக்கொள்ளுகிறேன். ஆனால் எப்போதுமே அப்படி யிருப்பதில்லையே. அப்போது என்ன செய்கின்றாய்? அந்நாட்களில் உன்னுடைய சாதனைகளை நீ ஏன் செய்யக் கூடாது? இதுபோல முறையிடுவதற்கு உனக்கு வெட்கம் இல்லையா?

உண்மையாக ஆத்ம சாதனையில் ஈடுபடும் விருப்பம் உடையவர்கள் எல்லாச் சந்தர்ப்பங்களிலும் தங்கள் சாதனைகளைச் செய்கின்றார்கள்; சாதகமான சந்தர்ப்பம் எப்போது, எந்த விடத்து ஏற்படுமோ, அப்போது இன்னும் அதிகத் தீவிரமாக அவர்கள் அவற்றைச் செய்கிறார்களே தவிர வேறில்லை. 'நேரமில்லை, தக்க இடமில்லை,' யென்று தங்கள் அசௌகர்யங்களைப் பற்றி எப்போதும் முறையிடுபவர் தமது வாழ்வில் ஒருபோதும் முன்னேற்ற மடைவதில்லை; ஊர் நாடிகளைப்போல அவர்கள் அலைந்து திரிந்து தங்கள் அருமையான காலத்தை வீணாகக் கழிக்கின்றார்கள்.

சாதனையில் முழுமனதோடும் ஈடுபடு. தியான ஜபத்தில் மூழ்கிவிடு. ஆ! அதன் ஆநந்தம்! அவ்வாநந்தத்தின் சுவையை ஒருமுறை நீ பெற்றுவிட்டால், மற்றைய யாவும் உனக்கு இன்பமற்றதாக ஆய்விடும். அதன் பிறகு, எவ்விடத்திலும் ஆகட்டும், எந்த நிலையில்தான் ஆகட்டும்,இறைவன் உன்னை இருக்கச் செய்த போதிலும், சாதனையன்றி வேறொன்றும் உனக்கு இன்பந் தருவதாகாது. தொடக்கத்திலேயே அந்த ஆநந்தம் உண்டாகாதென்பது உண்மையே; ஆயினும் உனது குரு வாக்கியத்தில் நீ நம்பிக்கை வைத்துக் கொஞ்ச நாள் விடாது சாதனை செய்து வருவாயானால், அவ்வாநந்த மழை தானே உன்னுள் இறங்கிப் பொழியும்.

தியானமும் ஜபமும் செய்வதற்குக் காலமும் மற்ற அனுகூலங்களும் அவசியம் என்பது உண்மை; ஆனால், ஸ்மரண மும் மனனமும் (இடைவிடாத நினைவும் சிந்தனையும்) செய்ய அத்தகைய நிபந்தனைகள் எதுவும் வேண்டா. ஓயாது வேலை செய்தாலும், அன்றி ஒன்றுமே செய்யாதிருந்தாலும் சரி, உணவு உட்கொள்ளும் காலத்திலும், அல்லது சும்மா உட்கார்ந் திருக்கும் காலத்திலும் சரி, எப்போதுமே இவற்றை நீ செய்து

வரலாம். இதைப் பழக்கத்திற் கொண்டு வரவேண்டும். இந்தப் பழக்கத்தில் தேர்ச்சி பெற்றுயானுல், கடவுள் நெறியில் உன் மனம் நல்ல முன்னேற்றம் அடையும்படி நீ செய்து விட்டாய். தைலதாரை போல இடைவிடாது நினைத்திருக்கும் இத்தகைய சிந்தனையை ஸ்ரீராமானுஜர் தியானம் என்று சொல்லுகின்றார்.

வேலை செய்வதில் அவ்வளவு அச்சம் உனக்கேன் என்பது எனக்கு ஆச்சரியமாக இருக்கின்றது. (சுவாமி ப—வைக் குறிப்பிட்டு) அவர்கள் எல்லாம் மகா புருஷர்கள். அவர்கள் சொல்லுவது எதுவானாலும் அதன்படி நீ நடக்க வேண்டும். அது நிச்சயமாக உனக்கு நன்மையை அளிக்கும். அவ்வாறின்றி அவர்களது சொல்லை நீ மீறினால், எவ்விதமான ஞான முன்னேற்றமும் உனக்கு உண்டாகாது. ஆதலால் குழந்தாய், அவர்கள் சொல்லைத் தட்டாமல் எப்போதும் நடந்து வரும்படி நான் உன்னை மன்றாடி வேண்டுகிறேன். உனக்கு நான் அளிக்கக் கூடிய போதனை இதுவே. இறைவன் செயலால், நாங்கள் எவ்வளவு உழைக்க வேண்டியிருந்தது! சாதுக்களாயிருந்தும் வழக்கு விவாதங்களுக்கு உட்பட வேண்டியிருந்தது; அடிக்கடி வக்கீல்களின் வீடுகளைத் தேடிச் சென்று, சட்ட சம்பந்தமான நியாயங்களை அறிந்து வரவேண்டியிருந்தது! அப்படியெல்லாம் இருந்தபோதிலும், நாங்கள் செய்த அக் கருமங்களால் எவ்விதத் தீமையும் எங்களுக்கு விளைந்ததென்று நாங்கள் சொல்ல முடியாது. ஏனென்றால், எல்லாக் கருமங்களும் கடவுளுடைய கருமங்களே என்று நாங்கள் உணர்ந்திருந்தோம்.

* * *

சுவாமிகள் :—(உடைந்து போன ஒரு கண்ணாடிச் சீசாவைக்கண்டு) அக் கண்ணாடிப் புட்டியை உடைத்து விட்டாய்; இது மனத்தின் தீய பழக்கத்தையே காட்டுகிறது. சஞ்சலப்பட்ட மனத்தோடு நீ வேலை செய்கின்றாய். கருமத்தில் ஈடுபட்டிருக்கும்போது எண்பது கோடி வேறு நினைவுகளை நீ எண்ணுகிறாய் என்று நினைக்கிறேன். தெய்விகக் காரியமாகட்டும், லௌகிகக் காரியமாகட்டும், நிலைத்து நில்லாத மனம் ஒன்றைக் கொண்டு மேலான காரியம் ஒன்றையும் சாதிக்க முடியாது. ஏற்றது உயர்ந்த கருமமேயானாலும், அன்றி ஒரு தாழ்மையுள்ள காரியந்தானாயினும், அதனை முழுக்கருத்துட

னும் கவனத்துடனும் செய்து முடித்தல் வேண்டும். லௌகிகக் காரியங்களை நிலைத்த மனத்தினோடு யார் நிறைவேற்றுகின்றார்களோ, அவர்கள் தெய்விகக் காரியங்களாகிய ஆத்ம சாதனைகளையும் நிலைத்த மனத்தோடு நிறைவேற்றுவார்கள் என்பதை நான் உனக்கு உறுதியாய்ச் சொல்லுகிறேன்.

சரியான முறையிற் கருமம் செய்ய உனக்கு விருப்பம் உண்டென்றால், மேலான இந்த இரண்டு உண்மைகளை நீ கருத்தில் வைக்கவேண்டும். முதலாவதாக ஏற்றுக்கொண்ட கருமத்தில் பூரணமான சிரத்தை உனக்கு இருக்க வேண்டும். இரண்டாவதாக, அக் கருமத்தின் பலா பலனைப் பற்றிய சிந்தனையை எள்ளளவும் மனத்தில் வைத்தல் கூடாது. அப்போதே நீ சரியான முறையில் கருமம் செய்ய வல்லவனாவாய். இதுதான் கரும யோகத்தின் ரகஸ்யம். செய்யும் கருமம் ஏதாயினும், அது கடவுளுடைய கருமமே என்ற எண்ணத்தைக் கொண்டாலல்லாது, கருமத்தில் ஊக்க மின்மையாகிய சோம்பல் முற்றிலும் நீங்காது. இந்த ரகஸ்யத்தை மறந்து விடும்போதே உன் மனம் நிலைத்து நிற்காது; சஞ்சலத்தை அடையும். இவ்வண்ணம் நிலை தப்பிய மனத்தைக்கொண்டு கடவுள் நெறியிலாயினும், வேறெதிலாயினும் நீ வெற்றியடையமாட்டாய்.

பேரும் புகழுமாகிய தூண்டுதலால், பெரிதான காரியம் ஒன்றைச் செய்து விடுதல் உண்மையில் எளிதே; ஆனால் அத்தகைய காரியத்தை ஆராய்ந்து ஒரு மனிதனின் உண்மையான தன்மை இன்னதெனமதிப்பிடுதல் ஒண்ணாது. அதற்கு, அவனுடைய தினப்படி வாழ்க்கையின் நடவடிக்கையை ஆராய்ந்து பார்த்தல் வேண்டும். ஏனென்றால், ஒருவனுடைய சாதாரண நடவடிக்கையே அவனுடைய உண்மையான நிலைமையை உள்ளபடி விளக்குவதாகும். அப்படிப்பட்ட கருமங்களைப் பார்த்தே, அவன் எதுவரையில் தனது ஒழுக்கத்தில் செம்மையுற்றிருக்கின்றான் என்பதை நீ அறிய முடியும். உண்மையில் கரும யோகியான ஒருவன், தான் ஏற்றுக்கொண்ட காரியம் மிக அற்பமானதே என்றாலும், அக்காரியத்தில் முழு மனத்தோடு ஈடுபட்டுத் 'தான்' என்பதை இழந்துவிடுவான். மக்கள் எளிதில் போற்றி முழக்கம் செய்யும் பேருக்கும் புகழுக்கும் ஒருபோதும் தினையளவாயினும் அவன் சிந்தனை செலுத்தமாட்டான்.

தன் மனதுக்கு ஒத்த காரியம் என்றால், அதை யார்தான் செய்ய முடியாது? கரும யோகிக்கும் ஒரு சாமானிய மனிதனுக்கும் உள்ள வித்யாசம்தான் பின் யாது? ஒரு கருமயோகி தன்னுடைய பங்கில் வரக்கூடிய தொழில் எதுவாயினும் அதனை வரவேற்றல் வேண்டும்; எத்தேவைக்கும் எதைச் செய்வதற்கும் உடன்படுமாறு தன்னைக் கொஞ்சம் கொஞ்சமாகச் சீர்ப்படுத்திக் கொள்ள வேண்டும். எவ்வகையிலேனும் ஒரு காரியத்தைச் செய்தாற் போதும் என்று எண்ணுதல் தகாது; பற்றற்றுக் கடவுள் பெயரால் கருமம் செய்தல் வேண்டும். ஒரு கருமயோகி தன் மனத்தின் முக்காற் பங்கைக் கடவுளினிடத்து நிலைத்திருக்கச் செய்து, மற்றொரு காற்பங்கைக் கொண்டு தான் செய்தற்கு உரியதான எக் கருமத்தையும் செய்தல் வேண்டும். இந்த முறையைக் கைப்பற்றி நட; அப்போதே உன் கருமத்தைச் சரியான முறையில் நீ செய்தல் கூடும்; உன் மனமும் பூரித்து உன்னுள்ளே பேராநந்தமும் பெருகுவதை நீ காண்பாய். இதற்கு மாறுபாடாகக் கடவுளை மறந்து நீ கருமம் செய்வாயானால், விளைவில் நான் எனும் அகந்தையும் வீண் பெருமையும் மேலிடும்; சண்டைகளும் சச்சரவுகளும் பின் தொடரும்; மன அமைதியை முற்றிலும் கெடுத்துவிடும். ஆகலால், நான் சொல்வதைக் கேள். கருமத்தில் ஈடுபட்டிருந்தாலும் இல்லாவிட்டாலும், கடவுளை ஒருபோதும் மறவாதே. இந்த மனப்பான்மை மாறாது எப்போதும் நிலைத்திருக்க வேண்டுமாயின், உனது சாதனையில் நீ உறுதியாக நிற்றல் வேண்டும்.

---

## 27

## கடவுளிடத்தில் பற்று

சிஷ்யர் :—ஸ்வாமிஜி, ஸ்ரீ ராமகிருஷ்ணர் இப்பொழுதும் ஜீவித்திருக்கின்றாரா?

சுவாமிகள் :—உனக்கென்ன, பயித்தியம் பிடித்திருக்கிறதா? அவர் ஜீவித்திருக்கவில்லையென்றால், நாங்களேன் இப்படி வீடு

வாசல் எல்லாவற்றையும் விட்டுவிட்டு இவ்விதமான வாழ்க்கை வாழவேண்டும்? அவர் எப்போதும் இருக்கின்றார். நீ மட்டும் அவரைக் காணும் பொருட்டு முழுமனதோடும் பிரார்த்தனை செய்; இராப்பகல் அதே ஆவலாய் இரு. அவர் உனக்குக் காட்சி அளித்துத் தமது உண்மை நிலையை நிச்சயமாக உணர்விப்பார்; உன்னை இடைவிடாது அலைத்துத் துன்புறுத்திவரும் உனது சந்தேகங்களையும் மனக்குழப்பங்களையும் அவர் உடனே நீக்கி விடுவார்.

சிஷ்யர் :—ஸ்வாமிஜி, தாங்கள் இப்போது அவரைக் காண்கின்றீர்களா ?

சுவாமிகள் :—ஆம்; ஆயின் அவர் கருணை வைத்துத் தம்மைக் காண்பிக்கும்போதே காணுகின்றோம். அவருடைய கருணையினால் அவரை எல்லோருமே காணலாம். ஆனால், ஆஹா! அவரைக் காணும் ஆவல் உடையவர் யார்? எத்தனை பேருக்கு அந்த அவா ஏற்பட்டிருக்கின்றது?

சிஷ்யர்:—ஐயனே, தயவு செய்து அவரைப் பற்றிச் சிறிது கூறி எங்களுக்கு அறிவு புகட்டுங்கள்.

சுவாமிகள்:—அப்பா, அவருடைய கதைக்கு ஒரு கங்கு கரையில்லை! அதில் நாங்கள் அறிந்ததுதான் எம்மாத்திரம்? உனக்கு அவர் கருணை காட்டித் தம்மை அறிவிக்கும்போதே நீ அவரை அறிய முடியும். இதை மனத்தில் ஸ்திரமாக வைத்துக் கொள்; சரீரம், மனம், ஆத்மா ஆகிய இம்மூன்றும் ஒன்றுபட்டு ஒரே நோக்கத்துடன் நின்றாலொழிய, ஞானோதயம் உண்டாக மாட்டாது. கடவுட் காட்சி யென்பது, குழந்தாய், அவ்வளவு லேசான காரியமன்று.

சிஷ்யர் :—ஸ்வாமிஜி, நான் தியானத்தில் உட்காரும்போது என் மனம் இந்த அண்டமெல்லாம் சுற்றி அலைகின்றது; அது எண்ணும் எண்ணங்களுக்கோ ஓர் எல்லையில்லை. ஐயனே,இப்படி அலையும் மனத்தை நான் அடக்குவதற்கு ஓர் உபாயம் சொல்லுங்கள்.

✓சுவாமிகள்:— ஆரம்பத்தில் எப்போதும் இப்படித்தான் நேரிடுகின்றது. ஆயினும், பித்துப் பிடித்ததுபோல் புறம்நோக்கி ஓடும் மனத்தை அப்படி ஓடாமல் அடக்குதற்கு நீ விடாது

முயற்சி செய்யவேண்டும். நான் ஒரு வழி சொல்லுகிறேன்; அதன்படி நட. நடந்தாயானால் நீ வெற்றியடைவாய். அதாவது ஆஸனத்தில் உட்கார்ந்தவுடனேயே நீ தியானம் செய்ய ஆரம்பித்து விடாதே. முதலில், விவேகத்தினால் வெளியே ஓடுகின்ற மனத்தை வலிய இழுத்து, உள்ளே, உனது இஷ்ட தெய்வத்தின் திருவடியில் வைத்துப் பூட்டி விடு: அதன்பிறகு ஜபமும் தியானமும் செய். அவ்வழியைப் பின்பற்றிச் சிலநாள் நடப்பாயானால், மனம் இயல்பாகவே அலையாமல் நின்றுவிடும்.

இக்கலியுகத்தில், எல்லாவற்றையும் விடச் சுலபமான வழி ஜபம். இடைவிடாது ஜபம் செய்வதால் மனம் சுலபமாக அமைதியும் சாந்தமும் அடையும்படிச் செய்துவிடலாம்; முடிவில் அது தன்னை இழந்து தானே இஷ்ட தெய்வத்துடன் ஒன்றுபட்டுவிடும். யோகமும், அதுபோன்ற ஏனைய எல்லா மார்க்கமும் கடவுள் மார்க்கமே; ஆனால், அவற்றைப் பின்பற்றி நடத்தலோ மிகக் கடினம். ஆதலால் இடைவிடாது ஜபம் செய்யும்படி உனக்குக் கூறுகிறேன்; ஜபம் செய்வதோடு கூடவே, உன் இஷ்ட தெய்வத்தையும் நீ நினை. இப்படிச் செய்வதால், ஜபம் தியானம் ஆகிய இரண்டையும் நீ ஒருமிக்கச் செய்கின்றாய். இந்த இரட்டை வழி வெற்றியை விரைவிற் கொண்டுவருகின்றது.

சற்றும் தளராத உறுதியோடு உன் சாதனையை எப்போதும் நீ செய்; சாதனை செய்யாமல் ஒரு நாளாயினும் தவறும்படி விடாதே. இச்சையிருந்தாலும் இல்லாவிட்டாலும், குறித்த நேரத்தில், ஒவ்வொரு நாளும் உன் ஆசனத்தில் உட்காரு. இவ்விதம் முறையாகத் தவறாது மூன்று வருஷம் நீ சாதனையிற் பழகி வருவாயானால், கடவுளின்மீது அன்பும் பற்றுதலும் உன்பால் வளர்ந்து, நீ கடவுளிடம் நெருங்கியிருக்கக் காண்பாய் என்று நான் உறுதியளிக்கிறேன். அதன்பிறகு, கடவுளை நாடுதற்பொருட்டு, உன்னுள்ளிருந்தே நீ தூண்டப்படுவாய்; கடவுளையன்றி வேறு எப்பொருளிடத்தும் உன் மனம் அப்போது செல்லாது. இந்த நிலையில்தான் ஒரு சாதகன் தன்னுள்ளே சாதனையை அனுபவிக்க ஆரம்பிக்கின்றான்.

கடவுளின்மீது ஆழ்ந்த அன்பும் பற்றுதலும் இல்லை என்றால், புதிதாகச் சாதனை செய்ய ஆரம்பிக்கும் சாதகன் ஒருவன்

யாருமில்லாத் தனியிடத்தில் ஏகாந்தமாய் இருந்து, சரியான வழியிற் சாதனை செய்தல் மிகக் கடினம். தனித்து இருத்தலிற் பலகேடுகள் விளைதற்கு எப்போதும் இடம் உண்டு: ஆகையால், ஒருவகைப்பட்ட மனமும் இயல்பும் உடையவர் ஒன்றாய்ச் சேர்ந்து ஓரிடத்தில் வசிக்கவேண்டும் ; அப்படி வசித்தால், ஒருவருக்கொருவர் ஒத்தாசையாக யிருந்து, எப்போதாவது யாரேனும் ஒருவருக்குக் கேடு விளையுமானால் மற்றவர் உதவியளித்து வழிகாட்டி நடத்திச்செல்லலாம். ஆனால் இரண்டுபேருக்கு மேற்பட்டவர் ஒன்று சேர்ந்தாலோ, வம்புப் பேச்சும் வீண் வார்த்தையும் வந்து புகுந்துவிடும்; ஆத்ம சாதனைக்கு வீண் வார்த்தையும் உலக விஷயங்களைப்பற்றிய பேச்சும் கேடு விளைப்பதைப் போல வேறெதுவும் அவ்வளவு விளைப்பதில்லை. இப்படிப்பட்ட வீண் பேச்சினாலே, மனம் தனது மேலான இயல்புகளையும் உயர்வான நோக்கங்களையும் இழந்துவிடுவது மாத்திரமல்லாமல், மனித வாழ்க்கைக்கு உயர்ந்த இலக்கான கடவுளையே முற்றிலும் மறந்துவிடும்படி நேரிடுகின்றது.

ஆத்ம சாதனைகளில் ஈடுபட்டிருக்கும்போது, ஒரு சாதகன் தனது ஆகாரத்துக்காகச்* சத்திரங்களில் கொடுக்கப்படும் பிச்சையை ஏற்பது கூடாது. ஏனென்றால் சாது சேவைக்கென்று, உலக மக்கள், இறந்தவரின் சிரார்த்தத்தின்போது கொடுக்கும் பணத்தைக்கொண்டு, இந்தச் சத்திரங்கள் நடத்தப்படுகின்றன. தவிர, இந்த அன்ன சத்திரங்களுக்குப் பணம் கொடுக்கும்போது, முன்னதாக, மக்கள் நூற்றுக்கணக்கான பலவேறு ஆசைகளால் தூண்டப்பட்டும் கொடுக்கின்றனர். இந்தக் காரணங்கள் எல்லாவற்றினாலும் சத்திரத்துச் சாப்பாடு பரிசுத்தமானதாகாது. ஆனால் மதுகரி பிச்சை ஏற்று உண்பது மிகவும் நல்லது.(தேனீ பல புஷ்பங்களிலிருந்து தேனைத் திரட்டுவதுபோல சாதுக்கள் ஒவ்வொரு கவளமாகப் பல வீடுகளி

---

*வடநாட்டில் சாதுக்களுக்கு உணவளிப்பதற்கெனப் பல சத்திரங்கள் ஏற்பட்டிருக்கின்றன.

சிரார்த்தத்தின் போது அளிக்கப்படும் உணவையோ, புரோகிதர் வீட்டுச் சாப்பாட்டையோ உட்கொண்டால், ஆத்ம சாதனைக்குத் தடை ஏற்படும் என்று ஸ்ரீ ராமகிருஷ்ணர் உபதேசித்திருக்கின்றார்.

லிருந்து பிச்சை ஏற்பதற்கு மதுகரி பிச்சை என்று பெயர்.) இப்படி ஏற்கப்படும் உணவு பரிசுத்தமானது ; தீய ஆசைகள் எதனாலும் அது தீண்டப்பட்டதில்லை.

சாதனை செய்யும் காலத்தில், நீ உட்கொள்ளும் உணவை எவ்வளவு குறைக்க முடியுமோ அவ்வளவு குறைத்துக் கொள்ளவும் வேண்டும். வயிற்றை நிரப்பிக்கொண்டு ஜபமும் தியானமும் செய்வதென்பது முடியாத காரியம். ஏனென்றால், உண்ட சோற்றைச் செமிப்பதிலேயே உன் சக்தியிற் பெரும் பாகம் செலவழிந்துபோகும் ; மனமோ அமைதியற்று அலைந்துகொண்டிருக்கும். அதனாலேயே, உணவிலும், உறக்கத்திலும் மற்றும் எல்லாப் பழக்கங்களிலேயும் நடுநிலை வேண்டுமென்று பகவத்கீதை வற்புறுத்துகின்றது. "ஓ அர்ஜுனா! மிகுதியாக உண்பவனுக்கும் மிகக் குறைவாக உண்பவனுக்கும்,அதிகமாகத் தூங்குபவனுக்கும் அதிகக் குறைவாகத் தூங்குபவனுக்கும் யோகம் என்பது இல்லை," என்று ஸ்ரீ பகவான் கூறுகின்றார்.

மேலும், ஆத்மஞானம் அடைய உண்மையில் நீ விருப்பம் உடையவனானால், ஒரு குறித்த இடத்தில் நிலைத்து நின்று, நீண்ட நாளைக்குச் சாதனையில் விடாமல் நீ பழகிவரவேண்டும். ஊர் ஊராய்ச் சுற்றுவதால் ஒரு பயனும் இல்லை; அதனால் நிலைத்த பயன் எதனையும் நீ அடையமாட்டாய். இதனை என் சொந்த வாழ்க்கையின் அனுபவத்திலிருந்து எடுத்துச் சொல்லுகிறேன். ஆனால், குழந்தாய், எங்களுடைய அனுபவங்களைப் பார்த்து அதனால் பயனடைய விரும்புபவர் யாவர் ?

சுவாமி விவேகானந்தரின் இப்புண்ணிய மடத்திலே, சாதனை செய்தற்கு எவ்வளவு அழகிய சாதனங்கள் இருக்கின்றன ! உணவும் உடையும் ஆகிய எதையும் பற்றி நினைக்கவேண்டிய அவசியம் இல்லை. எல்லாம் கைவசம் இருக்கின்றன. ஏன் இங்கே இருந்து இடைவிடாது தியானித்தலிலும் பிரார்த்தனையிலும் நீ முழு மனதோடு ஈடுபட்டிருக்கக்கூடாது ? ஆனால், எங்களுடைய வார்த்தையைக் கேட்பவர் யார் ? ஊர் சுற்றித் திரிவதால், குழந்தாய், ஒரு நன்மையும் வராது.

இங்குமங்குமாகக் கொஞ்ச காலத்துக்குச் சுற்றித் திரிவதா லேயே நீ ஒரு பெரிய தபசியாகவோ மகாத்மாவாகவோ ஆய்விடலாமென்று எண்ணுவாயானால்,—நான் சொல்வதைக் கேள்—உன் எண்ணம் மிகத் தப்பான எண்ணம். இப்படி ஒரு நாளும் நீ மகாத்மா ஆக முடியாது. ஓயாது சாதனை செய்தா லன்றி ஆத்மஞான அனுபவம் ஒன்றாயினும் நீ அடையமாட் டாய் : அது வெறும் ஜாலத்தினால் வந்துவிடாது. கடவுளைக் காணவேண்டும் என்ற ஆசை உனக்கு உண்மையாக இருக்கு மானால், நீ சாதனையில் மூழ்கிவிடவேண்டும் ; உன்னை யிழந்து நீ அதிலேயே ஈடுபட்டிருக்க வேண்டும். நீ காவித்துணி கட்டிக் கொண்டாலென்ன, பிச்சை யெடுத்துச் சாப்பிட்டால்தா னென்ன ? உண்மையான சாதனையின்றி நீ ஊரெல்லாம் அலைந் தாலும் உண்டாகக் கூடிய நன்மை யாது ?

---

## 28

## துறவியின் ஒழுக்கம்

சிஷ்யர் :—ஸ்வாமிஜி, எனது புலன்களை அடக்க நான் எத்தனையோ வழியெல்லாம் பின்பற்றி முயற்சி செய்து வந் திருக்கிறேன். ஒன்றும் பயன்படவில்லை. பின் எவ்வழியில் அது கைகூடும்படிச் செய்யலாம் என்பதைத் தயவு செய்து எனக்கு அறிவிப்பீர்களா ?

சுவாமிகள் :—“நான் காமத்தை ஜயிப்பேன், நான் கோபத்தை அடக்குவேன், நான் லோபத்தை விரட்டுவேன்” —என்று இப்படியாக நீ வீம்பு பேசிக்கொண்டு முயற்சி செய் யப்போனால், ஒரு நாளும் அவற்றை ஜயிக்கமாட்டாய். அதை விட்டு, நீ கடவுளின் மீது மனத்தைச் செலுத்தி தியானம் செய்வாயானால், புலன்கள் எல்லாம் தாமாகவே அடங்கிவிடும் ; நீ அதற்காக சிரமப்படவேண்டிய அவசியம் அதிகம் இராது. “கிழக்கு நோக்கி எவ்வளவுக் கெவ்வளவு முன்னேறிச் செல்

வாயோ, அவ்வளவுக் கவ்வளவு நீ மேற்கிலிருந்து தானே விலகி வந்து விடுவாய்; அதற்காகத் தனியாக முயற்சிசெய்ய வேண்டியதில்லை,'' என்று ஸ்ரீ ராமகிருஷ்ணர் சொல்வது வழக்கம். எனவே, இந்த நேர்வழியைப் பற்றிச் செல்; கடவுளை நாடிப் பிரார்த்தனை செய்; அப்போது புலன்கள் தாமே அடங்கிவிடும்; வெகு சீக்கிரம் அவற்றின் குறும்புத்தனமாகிய விஷம் ஒழிந்து விடும்.

நீ இப்போது செய்துவரும் தியான ஜபம் மிகமிகக் குறைவு; அது போதாது. எண்ணம் தோன்றியபோது ஏதோ ஒரு மணி நேரம் இரண்டு மணிநேரம் சாதனையிற் பழகுவதால் ஒரு நாளும் கடவுளைத் தரிசித்துவிட முடியாது. இராப்பகலாகக் கடவுளைப்போற்றி, அவருடைய நாமம் ஜபித்து தியானத்தில் நீ மூழ்கிவிடக் கூடுமானால், அப்போதே ஈசுவர தரிசனம் உனக்கு உண்டாகும். இல்லாவிடில் உண்டாகாது. இஃது ஒன்றே வழி. வேறோர் எண்ணமின்றிச் சாதனையிலேயே முழுமனதோடும் மூழ்கிவிடு; காலத்தை மேலும் வீணாக்காதே.

உன்னுடைய சாதனையின் ஆரம்ப காலத்தில், கொஞ்சங் கொஞ்சமாக உன் தியான ஜபத்தை முறையாக அதிகப்படுத்திக் கொண்டே போகவேண்டும். இன்றைக்கு ஒருமணிநேரம் அதில் நீ செலவழித்தால், கொஞ்சநாள் போனதும் அதோடு இன்னும் கொஞ்சநேரம் அதிகப் படுத்திக்கொள்; பின்னும் கொஞ்சநாள் போனால், இன்னும் கொஞ்சநேரம் அதிகப்படுத்திக்கொள்; மறுபடியும் கொஞ்சநாள் போனால் இன்னும் கொஞ்சம்; இப்படியே கொஞ்சங் கொஞ்சமாக நாளுக்குநாள் சாதனையை அதிகப்படுத்திக்கொண்டே போக வேண்டும். ஆனால், திடீரென்று, ஒரு கணநேரத்து உற்சாகத்தால், உனது தியான ஜபத்தை ஒரே சமயத்தில் மிகுதியாக அதிகப் படுத்தி விடாதே. இந்த விதியை நீ மீறி நடத்தல் கூடாதென நான் எச்சரிக்கை செய்கிறேன்; நடந்தால் அதிக துன்பத்துக்கு ஆளாவாய். (எந்த ஒரு காரியத்துக்கும், அதன் பின்னிகழ்ச்சியாய் உண்டாகக் கூடியதான எதிர்த்தாக்கம் ஒன்று உண்டு.) திடீரென்று ஒரே சமயத்தில் தியானத்தை மிகுதியாக அதிகப் படுத்துவதனால் உண்டாகக்கூடிய/எதிர்த்தாக்கமோ மிகக் கடு

மையாகவும் விபரீதமாகவும் இருக்கும்; அதனை நீ தாங்க முடியாது; அது கட்டாயம் உன்னைத் துன்பப்படுத்திவிடும். அதன் பயனாக மிகப் பயங்கரமான மனத்தளர்ச்சியை நீ அடையக்கூடும். அதற்குப் பிறகு தியான ஜபம் செய்வதில் உனக்கு விருப்பம் உண்டாகாது. மனத்தில் தளர்ச்சி ஏற்பட்ட பின்னர், மறுபடியும் அதனை ஊக்கப்படுத்தித் திரும்பவும் சாதனையில் ஈடுபடும்படி செய்வது மிகக் கடினமான காரியம்.

ஆத்மிய தரிசனங்கள் அனைத்துக்கும் கடவுள் கிருபை மற்றெல்லாவற்றையும்விட முக்கியமானது. அது இல்லையென்றால், முன்னேறுவதென்பது முடியாது. ஆகையால், அவருடைய கிருபைக்காகப் பேராவலோடு நீ அவரைப் பிரார்த்திக்க வேண்டும். பிரார்த்தனை என்றால், ஓர் அதிசயமான சக்தி அதற்கே உண்டு; அது தவிர, கடவுளுக்கும் அது பிரீதியாவது.

நீ சாதனை செய்யத் தொடங்கினால், அப்போது, சுகபோக ஆசைகளில் எதுவும் உன்னைப் பற்றிக்கொள்ள நீ இடங்கொடுக்கக் கூடாது. உன் ஆசைகளையெல்லாம் அடக்குவதற்கு நீ வழுவாத பிரம்மசரிய விரதத்தை இப்போது அனுசரிக்க வேண்டும். சாதனையாகிய பழக்கத்தில், கடவுள் கிருபையால், ஒரு முறை நீ நன்றாக நிலைபெற்று விட்டால், அதன்பிறகு, எப்பொழுதேனும் உன் மனதில் ஆசைகள் எழத்தலைப்பட்ட போதிலும், அவை உன்னை அழுக்குப்படுத்திவிடும் என்ற பயம் உனக்கு ஒரு போதும் வேண்டுவதில்லை.

இன்னும் ஒன்று கவனிக்கவேண்டும்; தங்கள் வீடு வாசல் ஆகிய எல்லாவற்றையும் விட்டுவிட்டுத் துறவற வாழ்க்கையைத் தழுவியுள்ளவர்களுக்கு, பிறரைத் தமக்குக் கீழ்ப்படுத்தி அவர்கள் மீது தம்முடைய ஆதிக்யத்தைச் செலுத்த இச்சிப்பதோ முற்றிலும் தகாத காரியம். ஒரு துறவிக்கு அப்படிப்பட்ட எண்ணம் மறுபடியும் பந்தத்துக்கு உட்பட மூலகாரணம் ஆகும். ஆகையால், இப்படுகுழியில் வீழாதிருக்கும்படி நீ மிக ஜாக்கிரதையாக இருக்கவேண்டும். நீ எத்தொழிலைச் செய்தாலும் எப்பொருளைப் பார்த்தாலும் அது கடவுளினுடையதாகவே காண்பாயாக; உன்னை அக்கடவுளின் கையில் உள்ள ஓர் ஆயுதமாகக்

கருதிக்கொள். "அகங்காரவிமூடாத்மா கர்த்தாஹமிதி மன்ய தே"—நான் என்ற அகங்காரத்தினால் மயங்கியவனாய் மனிதன் தானே கர்த்தாவென்று எண்ணுகிறான், என்ற கீதா வாக்கியத்தை எப்போதும் எண்ணியிரு.

பொய் பேசுதல் இன்னொரு பெரிய பாவம். குடிகாரனையும் வேசியர் வீடு செல்பவனையும் கூட ஒருவேளை நம்பலாம்; ஆனால் பொய் பேசுபவனை ஒருக்காலும் நம்பமுடியாது. உலகினுள்ள பாவங்கள் அனைத்திலும் மிகக் கேடானது அதுவே.

நீ ஒருபோதும் பிறர்மீது குற்றங்காணவோ அன்றி அவர்களை நிந்திக்கவோ கூடாது. அப்படிப்பட்ட பழக்கம் தனக்கே பெருங் கேட்டை விளைவிப்பதாகும். இரவு பகலாகப் பிறருடைய தீயகுணங்களைச் சிந்திப்பதால், அந்த குணங்கள் உன் மனத்திலும் பதியத் தலைப்படும்; உன்னிடம் உள்ள நல்ல இயல்புகளைக் கெடுத்துவிடும். ஆதலால், குற்றங் காண்பதில் நன்மையே இல்லை; அதற்குப் பதிலாக, கடவுளின் புகழைப்பாடி அனைவரோடும் அன்புடன் பழகி ஆநந்தம் அடை! ஆனால் இந்தப் போதனையைக் கேட்பவர் யார்? சாதுக்கள் இரண்டு மூன்று பேராய்ச் சேர்ந்து, கூட்டங்கூடிப்பேசி மற்றவர்கள் மீது குற்றங்காண்பதும், அவர்களுக்கு விரோதமாகத் தீவினை செய்து கேடுவிளைக்கத் தலைப்படுவதும் பெரும் பாவம். இப்படிப்பட்ட வெட்கங்கெட்ட காரியங்களில், மிக இழிந்த மனமுடைய கொடியவர்களே யன்றி வேறு யாரும் தலையிட மாட்டார்கள்.

பிறரிடம் நற்குணங்களைக் காண்பதற்கே எப்போதும் பழக வேண்டும். ஒருவனிடம் நற்குண நற்செய்கை அதிகமின்றி மிகக் குறைவாகவே இருந்தபோதிலும் அவனைப் போற்றிக் கௌரவப் படுத்தும் பழக்கத்தைக் கைக்கொள்ளவேண்டும். என் குழந்தாய், என்னுடைய வார்த்தையைக் கேள்; மற்றவர்களுடைய பெருமைக்குத் தக்க மரியாதையும் கௌரவமும் நீ காட்டா விட்டால் உன் மனம் பூரிக்காது; உன்னை மற்றவர்கள் ஒருபோதும் பெரியோனென மதிக்கமாட்டார்கள்.

ஒரு துறவி இல்லறத்தார் கொடுக்கும் உதவியை மட்டும் ஏற்றுக் கொண்டு, அதற்குப் பதிலாக ஆத்ம சாதனையில் தாம்

ஈடுபடாதிருந்தால், அவர் சத்திய நெறியில் நிற்பவர் ஆகார். இல்லறத்தார் அத்துறவிக்கு உணவும் மற்றப் பொருள்களும் கொடுத்துதவுகின்றனர். எதற்காக? உலக வாழ்வுக்குற்ற மற்றத் தொழில்கள் எல்லாவற்றினின்றும் தம்மை விலக்கிக் கொண்டு துறவி எப்போதும் தம்முடைய ஆத்ம சாதனையிலேயே ஈடுபட்டிருப்பார் என்று அவர்கள் எதிர்பார்க்கின்றனர். ஆகையினால், சாதனையில் ஈடுபடாமல், சாதுக்களுக்கென்று இல்லறத்தார் செய்யும் சேவையை மட்டும் நீ ஏற்றுக் கொள்ளுதல் தகாது. இந்த விதியை மீறி நடந்தால் அது உனக்கு நஷ்டத்தையே விளைவிக்கும். ஓர் இல்லறத்தாரிடமிருந்து துறவி ஒருவர் ஏற்கும் பிக்ஷை எந்த வடிவில் ஏற்கப்பட்டதாக இருந்த போதிலும் சரி, அதனால் அத்துறவியின் புண்ணியத்திலிருந்து ஒரு பங்கு மற்றவருக்குப் போய்ச் சேருகின்றது. ஆகையினால், தன்னிடமிருந்து இப்படிக்கழிந்து விட்ட போதிலும் போதிய அளவு அதன்மேலும் மீதியாகத் தங்கியிருக்கக் கூடிய வண்ணம் ஒரு துறவி புண்ணியத்தை அதிகமாகச் சேகரித்துக் கொள்ள வேண்டும்.

நல்லவை தீயவை ஆகிய இருவகை இயல்புகளும் மனிதனிடம் இருக்கின்றன; அதனால், தீய இயல்புகள் மாத்திரமே உன் கண்ணுக்குத் தென்படுகின்றன என்ற காரணத்தால், நீ பிறர் ஒருவரை இழிவாகக் கருதாதே; அதற்கு மாறாகப் பிறரையும் தன்னைப் போற் கருதிச் சீர்திருத்த முயன்று, அன்பினால் அவரை நல்வழிப்படுத்து. அப்போது தான் நீ மனிதன் என்று சொல்லத் தகுதியுடையவன் ஆவாய். தன்னை ஒத்தவரைத் தாழ்மைப் படுத்துவதால் விளையும் நன்மை என்ன?

சிஷ்யர்:—ஸ்வாமிஜி, சில நாட்களில் என்னுடைய தியானத்தின் போது, மனம் தானாகவே சாந்தியும் அமைதியும் அடைகின்றது. வேறு சில நாட்களிலோ நான் என்ன தான் முயன்றாலும், அவ்வாறு அடைய முடியவில்லை. அது அங்கு மிங்கும் ஓடுகிறது. ஐயனே, அதனை எப்படி அடங்கச் செய்வது?

சுவாமிகள்:—குழந்தாய், கங்கையிற் பெருக்கும் வடிவும் எப்படி ஏற்படுகின்றனவோ, அது போல, இவ்வுலகில் எல்லா

விஷயங்களிலும் ஏற்றமும் தாழ்வும் உண்டாகின்றன. உன்னுடைய சாதனைகளிலும் அப்படியே; அதிலும், ஆரம்பத்தில் இவ்வண்ணம் ஏற்றமும் தாழ்வும் ஏற்படுவது வியப்புடையதன்று. ஆனாலும், உன்னுடைய சாதனையில் நீ உறுதியாக நில். விடாது கொஞ்சகாலம் நீ இதனைச் செய்து வருவாயானால், அந்த ஏற்றமும் தாழ்வும் ஏற்படாமல் நின்றுவிடும்; தடையின்றி அலையாது செல்லும் நீரோட்டம் போல் உன் மனமும், சாந்தமும் அமைதியும் உற்று, அலையாது முன்னடையும்.

எந்தெந்த நாட்களில் உன்னுடைய மனம் அமைதியாக நிலைத்திருக்க நீ காண்கிறாயோ, அந்த நாட்களிலெல்லாம் உன்னுடைய வேலைகள் எல்லாவற்றையும் விட்டுவிட்டுச் சாதனையிலேயே தீவிரமாக ஈடுபடு. பின் மனமானது அமைதியற்று, அடங்காதிருக்கக் காண்கின்ற நாட்களிலோ அப்போதும் உன் தினசரிப் பழக்கத்தைவிடாது, குறித்த நேரத்தில் உட்கார்ந்து, விவேகத்தாலும் விசாரணையினாலும் மனத்தை அடக்குதற்கு முயற்சி செய். மனம் ஒரே நாளில் அடங்கிவிடுகிறதில்லை. ஒவ்வொரு கணத்திலுமாக ஓயாது நாடோறும் பல நாள் நீ பாடுபடவேண்டும். இவ்வாறு பாடுபட்டால், கட்டாயமாக, மனம், புத்தி, இந்திரியங்கள் ஆகிய எல்லாம் அடங்கிவிடும்.

என் குழந்தாய், நீ துறவற நெறியை மேற்கொண்டிருத்தலினாலே, நீ எப்போதும் அடக்கமும் அமைதியும் சாந்தமும் பொறுமையும் உடையவனாகி, உண்மை தவறாத ஒழுக்கத்தோடிருந்து வரவேண்டுமென்பதை என்றும் மறவாதே. நீ பேசுகின்ற ஒவ்வொரு பேச்சிலும், செய்கின்ற ஒவ்வொரு செயலிலும், ஒழுக்கம் நடை உடைபாவனை ஆகிய எல்லாவற்றின் மூலமாயும் நன்மையே வெளிப்பட்டுப் பாயவேண்டும். உன்னோடு பழகிப் பிறரும் சாந்தியைப் பெற்று நல்வழி நின்று, கடவுள் நெறியைக் கடைப்பிடிக்க வேண்டும்.

சிஷ்யர்:—ஸ்வாமிஜி, புண்ணிய க்ஷேத்திரங்களில் ஆத்மிய அலை வீசிக்கொண்டிருப்பதாகச் சொல்லுகிறார்களே, அதன் பொருள் இன்னதென்பதை அடியேனுக்கு விளங்கும்படி தயவு செய்து சொல்வீர்களா?

சுவாமிகள்:—ஆம்; யாத்திரைக்குரிய ஒவ்வொரு புண்ணிய க்ஷேத்திரத்திலும், ஒரு குறிப்பிட்ட நேரத்தில் ஆத்மிய அலை ஒன்று வீச ஆரம்பிக்கின்றது. அப்படிப்பட்ட நேரத்தில் ஜபமும் தியானமும் செய்வதால் மனம் மிக எளிதில் அடங்குகின்றது; அப்போது உள்ளத்தினுள் ஒரு பேரின்பம் உறைவதையும் நீ உணருவாய்.

சிஷ்யர்:—ஐயனே, அந்த நேரம் எப்பொழுதென்பதை எப்படிக் கண்டுபிடிப்பது?

சுவாமிகள்:—ஓ, அதைக் கண்டுபிடிப்பது அவ்வளவு கஷ்டமானதல்ல. உண்மையாகச் சாதனையிற் சற்றே உயர்ந்த நிலையை அடைந்தவர்களாயின், மிக எளிதாகக் கண்டு கொள்ளலாம்.

காசியைப் பொருத்தவரையில், இது இந்த சாமானிய உலகைச் சார்ந்ததல்ல; ஆத்மியப் பேரலையாகிய ஞான உணர்ச்சி இங்கே பெருக்கெடுத்து எப்போதும் பாய்ந்து கொண்டிருக்கின்றது. இந்த இடத்தில் நீ எவ்வகையான சாதனையைச் செய்தாலும் சரி, அது ஒன்றுக்குப் பத்து மடங்காகப் பெருகுகின்றது; மேலும் இப் புண்ணிய க்ஷேத்திரத்தில், உள்ளே உறங்கிக் கொண்டிருக்கும் சிங்கத்தைப் போன்று அடங்கியிருக்கும் மந்திர சக்தியும் வெகு விரைவில் விழித்தெழுகின்றது. முக்தி க்ஷேத்திரம் என்று சொல்லக்கூடிய இக்காசியில், ஈசனும் விஸ்வநாதர், பெரியோர் சிறியோர், வறியோர் செல்வர், நல்லோர் தீயோர் என்ற வேறுபாடு ஒன்றையும் பாராது, கேட்காவிட்டாலும் வலுவில் தாமாகவே அருள்சுரந்து எல்லோருக்கும் ஒருங்கே மோக்ஷத்தை அளிக்கின்றார். முக்காலும் புனித நிலையெய்திய இந்தப் புண்ணிய ஞான பூமியில், ஏதேனும் ஓர் நேர்மையான தொழிலைச் செய்து உயிர் வாழக்கூடிய மனிதன் எவனோ அவன் உண்மையில் மனிதருட் சிறந்த மனிதனாவான்.

# நாம ஜபம்

[அத்வைதாசிரமம், காசி. 27, பிப்ரவரி, 1914]

சுவாமிகள் :—(பக்தர் ஒருவரை நோக்கிக் கேட்கிறார்) இப்போது நீ தியானமோ பிரார்த்தனையோ ஏதாவது செய்து வருகின்றாயா ?

பக்தர்:—இல்லை, ஸ்வாமிஜி! ஒன்றும் செய்யவில்லை.

சுவாமிகள்:—கொஞ்சம் கொஞ்சமேனும் தினமும் செய்து வருதல் நல்லது. அதனால் சாந்தி உண்டாகும்; மனம் அலையாது நிற்கும். குலகுரு ஒருவர் உங்கட்கு இருக்கிறார் அல்லவா ? அவரிடமிருந்து இன்னும் உபதேசம் பெறவில்லையா? சீக்கிரம் உபதேசம் பெற்றுக்கொள். நீ ஒவ்வொரு நாளும் கொஞ்சம் ஜபமும் தியானமும் செய்யவேண்டும். ஒரு ருத்ராக்ஷமாலை வாங்கிக்கொள்; அதைப் புண்ணிய கங்கை நீரில் ஒரு தரம் தோய்த்துப் பின் ஸ்ரீ விசுவேசுவரரது திருவடிக் கமலத்தில் வைத்து, அதன்பிறகு ஒவ்வொரு நாளும் நூற்றெட்டு அல்லது ஆயிரத்தெட்டுதரம் ஜபம் செய். இச்சையிருந்தால் அதிகமாயும் செய்யலாம்; அப்படிச் செய்தல் மிகவும் நல்லது.

பக்தர்:—நான் என்ன ஜபம் செய்வது ஐயனே ?

சுவாமிஜி—பகவானுடைய நாமத்தை ஜபிப்பாய். அவருடைய அனந்த நாமங்களுள், எதில் உனக்குப் பிரீதி உண்டாகிறதோ, அதிக சிரத்தையும் பக்தியும் ஏற்படுகிறதோ, அந்த நாமத்தை நீ ஜபிக்கவேண்டும்.

பக்தர் :—உருவம் ஒன்று இல்லாமல் தியானம் செய்ய இயலாதே ; நான் எந்த உருவத்தைத் தியானம் செய்வது ? பின் அவ்வுருவத்தை எங்கே வைத்து தியானம் செய்வது ?

சுவாமிகள் :—கடவுளின் வடிவங்கள் பலவற்றுள் உனக்கு அதிகப் பிரீதியைத் தருவது எதுவோ அந்த வடிவத்தையே

நீ தியானிக்கவேண்டும். அதனை உன்னுடைய உள்ளத்தில் இருத்தி தியானம் செய்யலாம்; அல்லது வெளியில் இருப்பதாகவும் தியானிக்கலாம். சத்குரு ஆவார் யாரோ, அவர் தம்முடைய சிஷ்யனிடத்து சிரத்தையும் பக்தியும் உண்டாகக்கூடிய கடவுளின் வடிவம் இன்னதுதான் என்பதைத் தாம் கண்டுபிடித்து, அவ்வடிவத்தையே தியானம் செய்யும்படி சிஷ்யனுக்குப் போதிப்பார்.

மானஸ பூஜை என்று ஒன்றிருக்கின்றது. புஷ்பம் சந்தனம் முதலிய பொருள்களை வைத்துக்கொண்டு கற்பூர ஆரத்தி செய்து வெளியே பூஜை எப்படி செய்கின்றார்களோ அதுபோலவேதான் மானஸ பூஜையும். உனக்குப் பிரியமான கடவுளின் வடிவம் எதுவோ அதனை நீ முதலில் உன் மனத்துக்குள் சிந்திக்கவேண்டும்; பின்னர், உன்மனத்திலேயே புஷ்பம் முதலான மேற்சொன்ன பொருள்களைப் படைத்து ஆராதிக்கவேண்டும்; அத்துடன், உன் மனத்திலேயே உளம் நிறைந்த பக்தியோடும் வணக்கத்தோடும் பகவானைப் பிரார்த்திக்கவேண்டும். போதுமான அளவு நீ கேட்டிருக்கின்றாய்; இப்போது காரியத்திற் சிறிதேனும் செய்து முடித்து உன் திறமையைக் காட்டு. காலத்தை இனியும் வீணாக்காதே; இன்றே தொடங்கு—இன்று மாலை முதலே. தற்காலத்துக்கு இந்த இரண்டும் செய்—ஜபமும் தியானமும். காலையும் மாலையும் விடாது ஒவ்வொரு நாளும் செய்துவா. அப்போது பேரின்பத்தை நீ உணர்வாய்; எங்களிடம் அடிக்கடி இன்னும் அதிகமாக வருவாய்; மேலும் மேலும் ஆத்மிய இரகஸ்யங்கள் அநேகம் நீ அறிவாய்.

இப்போது இவ்வளவு போதும். இன்னும் என்னென்ன சாதனைகளை நீ செய்யவேண்டும் என்பதை நான் உரிய காலத்தில் உனக்கு உபதேசிப்பேன். இப்போது மானஸ பூஜையைப் பற்றிய சிந்தனை உனக்கு வேண்டாம்; தற்காலத்துக்கு அதை விட்டுவிடு. முறையாக உபதேசம் (மந்திர தீக்ஷை) பெற்றுக்கொண்ட பிறகு, மானஸ பூஜை நீ செய்யவேண்டுமென்று எனக்குத் தோன்றினால், அப்போது உனக்குச் சொல்வேன். மந்திர தீக்ஷையைப் பற்றியும் நீ இப்போது மனக்கவலை கொள்ள

வேண்டாம். இதுவரை உனக்கு யான்என்ன சொன்னேனே, அதுமட்டும் இப்போது செய்துவா; அதுவே போதும். குழந்தாய், காலத்தை வீண் போக்காதே; இன்றைக்கே தொடங்கி, தைரியத்துடன் முன் நட.

உட்காருவதற்கு ஒரு புதிய ஆஸனமோ கம்பளியோ தேடிக்கொள். அதைத் தனியாக ஓரிடத்தில் வைத்திரு; தியானம், பூஜை முதலிய இவை போன்ற காரியங்கள் நீங்கலாக வேறெதன் பொருட்டும் அதை உபயோகப் படுத்தாதே. மேலும், உன் தியான சாதனைக்குத் தனியான இடம் ஒன்றைத் தேடி வைத்துக் கொள். உங்கள் தோட்ட வீடு மிகவும் தனிமையாக இருக்கும் என்று நான் நினைக்கிறேன். உங்கள் வீட்டிலே சௌகரியக் குறைவோ இடைஞ்சலோ இருக்கக் கண்டால், அடிக்கடி இராக்காலத்தில் அங்கே போய் இருந்து கொள். இங்கே, காசியாகிய இப்புண்ணிய நகரத்தில் ஆத்ம ஞானம் அடைவது மிக எளிது என்பதை எப்போதும் நினைந்திரு. விடாமல் தொடர்ச்சியாக இரண்டு வருஷத்துக்கு நீ சாதனை செய்துவர இயலுமானல், ஆத்மானுபூதியிற் சிறிது கட்டாயம் நீ அடைவாய் என யான் உறுதி கூறுவேன். இன்னும் இதிலும் விரைவாக, ஒரு வருஷத்துக்குள்ளேயே அடைந்தவர்களும் இருக்கின்றார்கள். ஆகையால் இப்போதே தொடங்கு. கொஞ்ச நாள் சாதனையில் ஈடுபட்டு விட்டால், அதன் பின்னர் எழுந்திருக்க உனக்கு மனம் வாராது. தியானத்திலேயே உட்கார்ந்திருக்க இச்சை உண்டாகும். அவ்வளவு ஆநந்தத்தை நீ அடைவாய்.

புண்ணிய ஸ்தலங்களுக்கு அடிக்கடி போ; சாஸ்திரங்களைச் சமயம் கிடைத்த போது படி; இடையிடை இங்கே என்னிடம் வா. தியானத்தின் போது காலை மடித்துக்கொண்டு நேரே நிமிர்ந்து உட்காரு. கைகளை மார்புக்கு நேராய் அல்லது வயிற்றுக்கு மேற்புறமாய் இருக்கும்படி உயர வைத்துக் கொள். உட்கார்ந்த உடனேயே தியானம் செய்ய ஆரம்பித்துவிடாதே; இரண்டு மூன்று நிமிஷங்களேனும் மௌனமாகச் சும்மா உட்கார்ந்திருந்து மனத்தில் வேறு எந்த எண்ணங்கள் ஒன்றும் வந்து புகாதபடி அதனை வெறுமையாக்க முயல். அதன் பிறகு தியானத்தில் தீவிரமாக ஈடுபடு. முதலில் ஒன்று அல்லது

இரண்டு வருஷம், முடிந்தவரையில் மனத்தை வற்புறுத்தி ஈடுபடச் செய்ய வேண்டும்; அதன் பிறகு உனக்குத் தியானம் தானே இயல்பாக வந்துவிடும். என்றைக்காவது அலுவல்கள் அதிகமாகி அதனால் தியானம் செய்ய நேரம் கிடைக்கவில்லையென்றால், ஒருவேளைமட்டுமாவது அன்றையதினம் செய். இல்லையேல், பத்துப் பதினைந்து நிமிஷத்தில் அன்றைய தியானத்தை முடித்துக்கொள்ளலாம். அதற்கும் நேரமில்லாது அதிக அசௌகரியம் ஏற்படுமானால், அன்றைக்கு ஒரு கண நேரமாவது கடவுளின்மீது மனத்தை நிறுத்தி, வணக்கம் செய்து பிரார்த்தித்து முடித்துக்கொள். ஆனால் இவ்வண்ணம் ஏதோ தீராத நாட்களில் மட்டுந்தான் செய்யலாம்; எப்போதுமே செய்யலாமென்று வைத்துக் கொள்ளக்கூடாது.

காலையில் எழுந்து முகம் கைகால் கழுவி, பழைய உடை மாற்றிச் சுத்தமாய்த் துவைத்து வைத்துள்ள வேறு துணி உடுத்திக்கொள்; பின் சாதனை செய்ய உட்காரு. ஒரு சிறிது கங்கை நீரையும் உட்கொள்ளலாம். மாலையிலும் அதுபோலவே செய். நான் மற்றும் ஒருமுறை உனக்கு உறுதியாகச் சொல்லுகிறேன்: இவற்றை ஒழுங்காக நீ செய்து வருவாயானால், மனத்திற் பெரும் சாந்தியை யடைவாய்; பேராநந்தத்தோடு நீ வாழ்ந்திருப்பாய்.

நல்லொழுக்கம் சம்பந்தப்பட்டவரையில், இந்த இரண்டு நெறிகளை நீ வழுவாமற் காத்துவருவாய்: எப்போதும் உண்மையே பேசு; பெண் மக்களை எல்லாம் தாயெனக்கருதி அவர்களைப் போற்றி வணங்கு. இவற்றைத் தவிர வேறொன்றையும் பற்றி நீ இப்போது கருதவேண்டியதில்லை. இவ்விரண்டு நெறிகளை வழுவாமற் காத்துவந்தால், மற்றைய நெறிகள் எல்லாம் தாமே உனது வாழ்க்கையில் பொருந்திப் பிரகாசிக்கும்.

கடவுள் இருக்கின்றார் என்பதில் திடமான நம்பிக்கைவை; அவர் இல்லை என்ற எண்ணம் ஒருபோதும் கொள்ளாதே. குழந்தாய், கடவுள் இருக்கின்றார்—இதை நான் உனக்கு உறுதியாகச் சொல்லுகின்றேன். ஆதலால், உண்மை பக்தியோடு அவருடைய திருவடியைப் பற்றியிரு; பணிவான நெஞ்சோடு அவரைப் போற்று; பிரார்த்தனை செய், இடைவிடாது பிரார்த்தனை

செய். இனி யோசனை வேண்டாம்; இனி வீண்காலம் போக்க வேண்டாம்; இனிமேல் சோம்பலாய் இருத்தல் தகாது. இன்றைக்கே இப்போதே தொடங்கு; முன்னே நட. பின் மற்ற விஷயங்களை நான் பார்த்துக்கொள்ளுகிறேன்.

# 30

## தியானம் செய்யும் முறை

[அத்வைதாசிரமம்—காசி—ஜனவரி 1921]

சிஷ்யர்:—ஸ்வாமிஜி, சிலர் இஷ்ட தெய்வத்தைத் தம்முடைய இதயத்திலும், இன்னும் சிலர் உச்சந்தலையிலும் தியானம் செய்து வருகின்றார்கள். ஆனால், நானோ வெளியிலே, தங்களை இப்பொழுது எப்படிப் பார்க்கின்றேனோ அது போல பாவித்து தியானம் செய்ய முயலுகிறேன். ஐயனே இவற்றில் எது சரியான முறை?

சுவாமிகள்:—சாதன வேறுபாடுகளுக்குத் தக்கபடி தியானம் செய்யும் முறையும் வெவ்வேறாக மாறுகின்றது. சாதாரணமாய் இஷ்ட தெய்வத்தை இதயத்தில் வைத்து தியானம் செய்வதுதான் நல்லது. இவ்வுடலே கோயிலென்றும், இதனுள்ளே கடவுள் உறைகின்றார் என்றும் கொள்ளவேண்டும். இடைவிடாது தியானம் செய்யச் செய்ய, அதனால் மனமானது எப்போது நிலையாக நிற்கத் தலைப்படுகிறதோ, அப்போது, எவ்விடத்தில் விருப்பமாயினும் அவ்விடத்தில் இஷ்ட தெய்வத்தை தரிசிக்கலாம். முன்னே, பின்னே, உள்ளே, வெளியே, தலையில், நெஞ்சில், எங்கு வேண்டுமாயினும் ஓரிடத்தில், அப்போது தியானம் சுலபமாகச் செய்யலாம்.

விடாது தியானம் செய்யச் செய்ய முதல் முதல் ஒருவனுக்கு உண்டாவது ஜோதி தரிசனம். அந்த அனுபவம் ஏற்படுகின்ற அதே வேளையிலோ, அன்றி அதற்குச் சற்றுப்பின்னரோ ஒருவகை ஆனந்தமாகிய பேரின்பம் அவனுக்கு ஏற்படுகின்றது. அந்த இன்பத்தை விட்டு அப்புறம் மேலே செல்ல மனம் விரும்

